## "காப்பிரைட் ரிஜிஸ்டர் அறிவிப்பு"

ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் அருளிச்செய்த திருப்புகழ்ப் பாடல்களை மகா-ள-ள-ஸ்ரீ மு. ரா. கந்தசாமிக் கவிராயரவர்கள் செய்த சந்தக் குறிப்பும், அரும்பத வுரையும் சேர்த்துச் சீர்திருத்தி 1—2 பாகங்களாக அச்சிட்டு இருந்ததில், ௸ கவிராயரவர்களுக்குள்ள காப்பிரைட் சுதந்திரத்தை யான் கிரயத்திற்குப் பெற்று அச்சிட்டுக் காப்பிரைட் ரிஜிஸ்டர் செய்திருப்பதால், இப் புத்தகங்களை எனது உத்திரவன்றி யாரேனும் அச்சிடுவரேல், "யான் கோரும் நஷ்டங்களுக்கும், இந்தியன் காப்பிரைட் சட்டதண்டனைக்கும் உட்படுவார்கள்" என்பதை இதன் மூலம் தெரிவித்துக் கொள்கிறேன்.

இங்ஙனம்,

இ. மா. கோபாலகிருஷ்ணக்கோன்

குமரன் துணை.

# இப்புத்தகத்தில் அடங்கியவை.





# சிறப்புப்பாயிரப் பாடல்கள்.

## வெண்பா

எல்லாரும் ஞானத் தெளிஞரோ கேளீர்சொல்
கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ—பொல்லாக்
கருப்புகழைக் கேட்குமோ கானமயில் வீரன்
திருப்புகழைக் கேட்குஞ் செவி. (க)

திருப்புகழ்ச் சிரவணத்தால் வேதார்த்தாதி அனைத்தும் அறிய ஆதலால் அதனையே கேட்க என்றது.

வேதம்வேண் டாம்*சகல வித்தைவேண் டாம்கீத
நாதம்வேண் டாம்ஞான நூல்வேண்டாம்—ஆதி
குருப்புகழை மேவுகின்ற கொற்றவன்றாள் போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்.

சீரான் திருப்புகழைச் செவ்வேள்மே லன்பாக
ஆராய்ந் துரைத்தா னருணகிரி—நேராக
அந்தப் புகழை அறிந்தினமு மோதாமல்
எந்தப் புகழோது வீர். (௨)

மாணிக்கம் பூண்பார்க்கு மற்றொருகல் வேண்டுமோ
ஆணிப்பொன் கையுறுவார்க் கையுறவேன்—பேணிப்பின்
செவ்வேல் விநோதன் திருப்புகழ்சிந் தித்திருப்பார்க்
கெவ்வேலை வேண்டு மினி. (௩)

---

சகலவித்தை-அறுபத்துநான்கு கலைஞானங்கள்.

## சிறப்புப்பாயிரம்.

ஆனைமுக வற்கிளைய ஐயா அருணகிரி
தேனனைய சொல்லான் திருப்புகழை—யானினைந்து
போற்றிடவும் நின்னைப் புகழ்ந்திடவும் பொற்கமலஞ்
சாத்திடவு மோதிடவுந் தா. (௫)

அருணகிரி நாத னகிலதலத் துன்னைக்
கருணையினாற் பாடுங் கவிபோற்—பிரியமுற
வேறுமோர் புன்கவிகள் வேலோனே நின்செவியில்
ஏறுமோ என்னே இனி. (௬)

வள்ளிமண வாளன் மயிலேறும் வள்ளறனைத்
தெள்ளருந்தமி ழாற்புனைந்து சீர்பெறவே—உள்ளபடி
வைப்பாய் அருணகிரி வாழ்த்துந் திருப்புகழைக்
கற்பார் கரையேறு வார். (௭)

## திருப்புகழ்ப்பயன்.

ஞானம் பெறலாம் நலம்பெறலாம் எந்நாளும்
வானம் அரசாள் வரம்பெறலாம்—மோனவீ
டேறலாம் யானைக் கிளையான் திருப்புகழைக்
கூறினர்க் காமேயிக் கூறு. (அ)

ஆறுமுகந் தோன்றும் அழகியவேல் தோன்றுமவன்
ஏறுமயில் தோன்றும் எழில்தோன்றும்—சீறிவரு
சூரன் முதுகைத் துணித்தோன் திருப்புகழைப்
பாரில் வழுத்திடுவோர் பால். (௯)

**அன்பர் ஒருவ ஆண்டவன் விடையருளியதாக வற்புறுத்துவது.**

### கலிவிருத்தம்.

பொருப்பறு பொடிப்பட விடுத்திடுகை வேலா
இருப்பிட முனக்கெது வெனக்கரு ளியப்பாய்
உருக்கமில் விழுக்குல மொழுக்கமில ரேனும்
திருப்புகழ் பாடுபவர் மனத்தினி லிருப்பாம். (௧௦)

# சிறப்புப்பாயிரம்.

**அங்ஙனம் அருளக்கேட்ட அன்பர் ஆண்டவனை நோக்கிக் கூறியதாகத் திருப்புகழ் படிப்போரது திட்பங்கூறியது.**

திருப்புகழ் படிக்குமவர் சிந்தைவலு வாலே
ஒருத்தரை மதிப்பதிலை உன்றனரு ளாலே
பொருப்புக மிகப்பொருது வென்றுமயில் மீதே
திரித்தொரு திருத்தணியில் நின்றபெரு மாளே. (கக)

**நூலாசிரியர் பெயரோடு நூற்பண்பும் பெயரும் உணர்த்தி அதனைத் துதிப்போர் பேறுங்கூறியது.**

ஓராறு மாமுகனார் உச்சிதமெய்ஞ் ஞானகுகன்
போ ரருணகிரி பேருலகில்—சீராருந்
தோத்திரம தாகத் துதிக்குந் திருப்புகழை
ஏத்தினவ ரீடேறு வார். (கஉ)

**திருப்புகழ் இன்ன இன்னதற்கு இன்ன இன்னதாம் எனல்.**

அருணகிரி நாதர்பதி னாறு யிரமென்
றுரைசெய் திருப்புகழை ஓதிர்—பரகதிக்கஃ
தேணி அருட்கடலுக் கேற்றம் மனத்தளர்ச்சிக்
காணி பிறவிக் கரம். (கங)

**திருப்புகழ் வழிபட்டால் கூற்றையும் வெல்லலாம் எனக்கொண்டு கெடிபெற உரைத்தது.**

திருப்புகழைக் கற்க திருப்புகழைக் கேட்க
திருப்புகழை நித்தஞ் செபிக்க—திருப்புகழை
அர்ச்சிக்க முத்தியெளி தாகுமே கூற்றைவென்று
கெர்ச்சிக்க லாமே கெடீ. (கச)

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

இப்பாயிரச் செய்யுட்கள் பூர்வத்துள்ள அபியுக்தர்களாற் செய்யப்பட்டுப் பழையபிரதிகளில் எழுதப்பெற்று வழங்கிவருவன, பாடினோர் பெயர், காலம், களம் முதலியன ஒன்றுந் தெரியவில்லை

குமரன் துணை.

# பதிப்புரை.

---

சந்தனப் பொதியத் தடவரை முனிக்குச்
செந்தமிழ் தெருட்டியுந் திருப்பரங்கிரியிற்
கீரன் பாடல் கேட்டுள மகிழ்ந்தவன்
ஆருயிற் புரந்தும் ஆறுசெல் காலைப்
பொய்யா மொழிக்கவி புகல்கவி கேட்டு
மெய்யா தரத்தின் வேறுபாச் சொற்றும்
மூங்கையாய்ப் பொருட்பொருண் முறைநயந் தேற்றியும்
வீங்குசீர்ப் புவியின் வியத்தகு சந்தத்
திருப்புகழ்ப் பாடல் செப்பென அருணை
கிரிப்பெரு மாற்குக் கிளாருள் புரிந்தும்
புலவனுந் திருப்பெயர் புனையும்
கலபமா மயிலோன் கழலிணை பணிவாம்.

திருப்புகழ் என்னுஞ் செஞ்சொற் பிரபந்தம் கருணையங் கடலாகிய முருகக்கடவுளுக்கு உகந்த தோத்திரமா மென்பது உலகப்பிரசித்தம். மதுரம் பழுத்துத் தேன்துளிக்குஞ் சந்தச்சுவை வாய்ந்து, தமிழ்நாட்டிலுள்ள எல்லாருள்ளத்தையும் கொள்ளைகொண்டு விளங்கும் இந்நூல், படிப்பாரையும், கேட்பாரையும் பரவசப்படுத்திப் பேரானந்தப் பெருக்கி லாழ்த்துஞ் சிறப்பு வாய்ந்த தென்பதொரு தலை. இந்நூலாசிரியராகிய அருணகிரிநாதர் இயற்றிய திருப்புகழ்ச் செய்யுட்கள் பதினாறாயிரம் என்ப. ஆகவும் இவற்றுள் ஓராயிரஞ் செய்யுட்களேனும் ஒரு சேர ஒருவரிடத்தே இருக்கக் காண்டலரிதாயது தமிழ் நாட்டின் துரதிஷ்டமே போலும். இவற்றின் நானூறுபாடல்கள் வரை சென்னை ஊ. புஷ்பரதசெட்டியாரவர்கள் கலாரத்நாகரம் பிரஸில் வெளிவந்துள்ளன. வந்துமென்ன? ...வை பெரிதும் பிழைபாடுடையனவாகவே காணப்படுகின்றன. ...ர்னர் திருத்தருப் பூண்டி முன்சீபாக இருந்த ஸ்ரீமத் வ. த. சுப்

பிரமணிய பிள்ளையவர்கள் பல வருடகாலம் அரிதின் முயன்று ஆயிரத்திருநூற்றுமுப்பத்தொரு பாடல்கள் வரை சேர்த்து, இரண்டு புத்தகமாய் அச்சிட்டுள்ளார்கள். இவ்விஷயத்தில் பிள்ளையவர்கள் எடுத்த முயற்சியும், பிரயாசையும் மிகப் பாராட்டற் பாலன. இங்ஙனம் அச்சிடுவித்த இருவகைப் புத்தகங்களையும் முதலில் யான் பார்த்தபோது பற்பல வேறுபாடுகள் காணப்பட்டன. அன்றியும் பற்பல பாடல்களின் சொல்வகையிலும், பொருள்வகையிலும் பெரிதும் ஐயப்பாடெய்திற்று. அதனால் கையெழுத்துப் பிரதிகள் சில தேடி ஒப்பு நோக்குழி, முன் அச்சிட்ட பிரதிகளினும் பொருட்சிறப்பு வாய்ந்த பாடபேதங்கள் பல கண்டேன். இதுவரை அச்சுக்கு வாராத சில புதிய பாடல்களையுங் கண்டேன். தமிழ் வேத பாராயண சீலர்களான ஓதுவா மூர்த்திகள் பலர் திருப்புகழை ஓதுங்கால் திருத்தமான பாடல்கள் சில கேட்டேன். தொடக்க முதற்கொண்டே சிதறுண்டு எடுப்பார் கைப்பிள்ளையாய்ப் போன இத்திருப்புகழ் நூலை யான் அறிந்த அளவில் சுத்தப்பிரதியாக்கி அரும்பதப்பொருள்களை ஆங்காங்கு விளக்கிச் சந்தக்குழிப்பைத் தலைப்பிற் சேர்த்து, அச்சிடுவிப்பது பெரும் புண்ணியமாமென நினைத்து, முருகபிரான் திருவருளைச் சிந்தித்து, இப்போது 642 பாடல்களை இயன்றவரை திருத்தஞ் செய்து முதற் புத்தகமாக வெளியிட்டுள்ளேன்.

இப்பாக்களில் சிற்சில அருணகிரிநாதருடைய திருவாக்[1]கென்பதைப் பற்றிச் சிறிது ஐயப்பாடிருப்பினும் பழைய பிரதிகள் பலவற்றினும் காணப்பட்டபடியால் விடாது சேர்த்திருக்கின்றோம். இதனுட் காணப்படும் எவ்வகைப் பிழைகளையும் அறிஞர் பொறுத்தருள்வாராக.

இம்முதற் புத்தகம் வெளியாமாறு கருணை செய்ததுபோலவே இதன் இரண்டாம் புத்தகமும் விரைவில் வெளியாமாறு குமரக் கடவுள் திருவருள் புரிக.

இங்ஙனம்,

**மு. ரா. கந்தசாமிக் கவிராயர்,**

வித்தியாபானுப் பத்திராதிபர் மதுரை.

பாக்கள் ஆகிய திருப்புகழ் பாடித்துதிப்பதே தொழிலாகக்கொண்டிருந்தனர். இங்ஙனமே குமாரக்கடவுள் வீற்றிருந்தருளுந் தலங்கடோறுஞ் சென்று, திருப்புகழ் என்னும் தேன்மழை பொழிந்து வந்தனர். இவ்வாறு இவர் பாடிய திருப்புகழ் சற்றேறக்குறையப் பதினாயிரமென்ப. அன்றியும் கந்தரனுபூதி, கந்தரலங்காரம், திருவகுப்பு என்பனவும் இவரியற்றியருளியனவேயாம்.

இவர் திருவாக்குகளில் செந்தமிழ்ப்பாஷைப் பொலிவும், பத்திச்சுவையும், செவிக்கினிய ஓசைநயமும், மனத்தைக்கவரும்படியான ஒருவித வசீகரத் தன்மையும், இன்னும் பற்பல நயங்களும் மிக்குத் தோன்றுவனவாகும். தமிழ் நாட்டில் வசிப்போர்களில் இற்றைக்கும் இவரைப் புகழ்ந்து போற்றுதாரைக் காண்பதரிது.

இவர் காலத்தே தமிழ்ப்புலமை வாய்ந்த சந்தவனங்கொண்ட வில்லிபுத்தூராருக்கும், இச் சந்தப்பாப் புலவர் பெருமானுக்கும் வாதமுண்டாயிற் றென்றும், அப்போழ்து வில்லிபுத்தூரரை வாதில் வெல்வதற்கே நமதுபாவலர் பெருமான் கந்தரந்தாதிபாடினரென்றும், அவ்வந்தாதியைப் பாடிவருங்கால் ஒவ்வொரு செய்யுட்கும் உரைகூறி வந்த வில்லிபுத்தூரர் அதில் "திதித்த" எனத் தொடங்குஞ் செய்யுட்கு உரை கூறச் சிறிது தியங்கித் தோற்றனரென்றும் இவ்வாதத்தில் "தோற்றவர் காதை வென்றவர் அறுப்பதெனச்" சூளுறவு செய்துகொண்ட வாறே தோல்வியுற்ற வில்லிபுத்தூரர் காதை இவர் அறுக்காமல் அவருக்குத் தமது பரிசாக அருளிச்செய்தனரென்றும், ஆதலாற்றான், "கருணைக் கருணகிரி" எனப்பிறரால் புகழப்பட்டன ரென்றும் கூறுவர்.

திருவண்ணாமலையில் பிரபுட தேவராஜன் சபையில் சம்பந்தாண்டான் என்பவனுக்கும், நமது பாவலர் பிரானுக்கும் வாதமுண்டானபோது "இவ்விருவரில் தாம் உபாசிக்கும் மூர்த்தியை இச்சபையில் வரவழைப்பவர் எவரோ அவரே வென்றவராவர்" என அரசன் கூறச் சம்பந்தாண்டான் தன் உபாசனா தேவியாகிய பார்வதியாரை வரவழைக்கிறேன் என்றான். நமது கவிஞர்பெருமான் தாம் உபாசனா மூர்த்தியாகிய குமரக்கடவுளை வரவழைக்கிறேன் என்ற

னர். இவ்வாதத்திலும் ராசசபையில் முருகக்கடவுள் தமது தாய் உமாதேவியை ஏமாற்றிவிட்டு எழுந்தருளிவந்து, காட்சி கொடுக்கச் செய்து வெற்றிபெற்றவர் நம் சந்தப்பாவலர் பெருமானேயாவர்.

இதனால் மனப்புழுக்கங் கொண்ட சம்பந்தாண்டான் யாதேனும் ஒரு சூழ்ச்சியால் வெல்லக்கருதிக் கற்பகநாட்டிலுள்ளபாரிசாதமலரைக் கொண்டுவரக் கூடுமோ எனக்கூற, நமது புலவர் பிரான் தாம்கொண்டுவருவதாகச் சம்மதித்து, தம் உடலை அருணைக் கோபுரத்துட் கிடத்தி, ஒரு கிளியுருவெடுத்து விண்ணுலகிற் சென்று மலர் கொண்டு மீண்டனர். இவர் மீண்டு வருமுன் "அருணகிரி நாதர் காலஞ்சென்றார்" என அரசனுக் கறிவித்து, அவர் திருமேனியைத் தகிப்பித்து விட்டனன் சம்பந்தாண்டான். மீண்டு வந்த நமது புலவரேறு தம்முடலழிந்ததை உணர்ந்து கிளியுருவாகவே இருந்து, கந்தரநுபூதி என்னும் பாக்களைப் பாடி முருகக்கடவுள் திருவடி நீழல் எய்தினர் என்பர்.

இத்தகைய பெரும்புகழ்வாய்ந்த அருணகிரிநாத சுவாமிகள் சரித்திரங்களையெல்லாம் அவர் திருவாக்குகள் அங்கங்கே விளக்கிச் செல்லும். அறிஞர் அறிக.

குமரக்கடவுள் திருவடிகளே சரணம்.

மு. ரா. க.



# ஸ்தல அகராதி

| ஸ்தலம். | பக்கம் | பாடற்றொகை. |
|---|---|---|
| அத்திப்பட்டு .... .... | ௪௪௧ | க |
| அருக்கொணுமலை .... .... | ௩௨௯ | க |
| ஆய்க்குடி .... .... | ௪௩௮ | க |
| ஆறுதிருப்பதி .... .... | ௪௧௨ | உ |
| இரத்நகிரி (வாட்போக்கி) .... | ௨௯௭ | உ |
| இராஜகெம்பீரவளநாட்டு மலை .... | ௩௦௩ | க |
| இராமேசுவரம் .... .... | ௪௩௩ | உ |
| இலஞ்சி .... .... | ௪௨௫ | ௪ |
| உத்தரமேரூர் .... .... | ௪௭௫ | ௪ |
| ஊதிமலை .... .... | ௩௦௬ | உ |
| கதிர்காமம் .... .... | ௩௨௨ | கக |
| கழுகுமலை .... .... | ௩௨௦ | ௩ |
| காசி .... .... | ௪௩௯ | ௩ |
| குருடிமலை .... .... | ௩௧௭ | க |
| குறட்டி .... .... | ௪௪௮ | க |
| குன்றக்குடி .... .... | ௩௧௩ | [illegible] |
| குன்றுதோரூடல் .... .... | ௧௮௪ | ௪ |
| கைலைமலை .... .... | ௧௮௬ | ௭ |
| கொங்கணகிரி .... .... | ௩௧௦ | க |
| கொடுங்குன்றம் .... .... | ௩௪௦ | உ |
| கொல்லிமலை .... .... | ௩௦௨ | [illegible] |
| கோசைநகர் .... .... | ௪௪௭ | க |
| சீபுருடமங்கை (நான்குநெறி) .... | ௪௨௬ | ௩ |
| ஸ்ரீ சைலம் .... .... | ௧௯௧ | க |
| சுவாமிமலை .... .... | ௧௫௬ | ௩௯ |
| ஞானமலை .... .... | ௩௦௪ | உ |
| தச்சூர் .... .... | ௪௮௫ | க |
| தனிச்சயம் .... .... | ௩௩௧ | க |
| திருக்கழுக்குன்றம் .... .... | ௨௫௦ | ௩ |
| திருக்கற்குடி (உய்யக்கொண்டான்) | ௨௯௬ | உ |

# ஸ்தல அகராதி

| | | | | |
|---|---|---|---|---|
| பொது | .... | .... | [illegible] | உ |
| மதுராந்தகம் | .... | .... | [illegible] | ரு |
| மதுரை | .... | .... | [illegible] | கரு |
| மயிலம் | .... | .... | [illegible] | க |
| மாடம்பாக்கம் | .... | ... | [illegible] | க |
| வள்ளிமலை | .... | .... | [illegible] | [illegible] |
| வள்ளியூர் | .... | .... | [illegible] | க |
| விநாயகமலை | .... | .... | உ[illegible]உ | க |
| விராலிமலை | .... | .... | [illegible] | க[illegible] |
| விரிஞ்சிபுரம் | .... | .... | [illegible] | [illegible] |
| வெள்ளிகாம் | ... | ... | [illegible] | அ |
| வேப்பூர் | ... | ... | [illegible] | ரு |
| வேலூர் | ... | ... | [illegible] | உ |





திரு அருணை.

ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
    ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
    குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகமொன்றே
மாறுபடு சூரரைவ தைத்தமுக மொன்றே
    வள்ளியைம ணம்புணர வந்தமுகமொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
    ஆதியரு ணாசலம மர்ந்தபெரு மாளே.

வேலுமயிலுந் துணை.



உ

திரு அருணை.

ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
  ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
  குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகமொன்றே
மாறுபடு சூரரைவ தைத்தமுக மொன்றே
  வள்ளியைம ணம்புணர வந்தமுகமொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
  ஆதியரு ணாசலம மர்ந்தபெரு மாளே.

வேலுமயிலுந் துணை.

உ

கணபதி துணை.

முருகக் கடவுள் துணை.

அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருப்புகழ்

## விநாயகர் துதி.

தத்தன தனதன தத்தன தனதன
தத்தன தனதன தனதான.

கைத்தல நிறைகனி அப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணிக்
கற்றிடும் அடியவர் புத்தியி லுறைபவ
கற்பக எனவினை கடிதேகும்

மத்தமு மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே

*முத்தமி ழடைவினை முற்படு † கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா

அத்துய ரதுகொடு ‡ சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை §இபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே. (க)

கரிமுகன் அடிபேணி...அடியவர் புத்தியிலுறைபவ! கற்பக! என வினை...ஏகும்; (ஆதலால் யான்)...அரன் மகன்.. மதயானை [ஆகிய] மத்தள

---

* முத்தமிழடைவு-பாரதக்கதை. † கிரி-மேருமலை.
‡ சுப்பிரமணி-முருகக் கடவுள். § இபம்-யானை.

வயிறனே, உத்தமிபுதல்வனே...மலர்கொடு பணிவேன். [என் செய்து, எதன்பொருட்டுப் பணிவேன் எனின்]...முதல்வோனே!...அதிதீரா!... பெருமாளே! [எனத்துதிசெய்து, எடுத்துக்கொண்ட நூதியாகிய இந்நூல் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டுப் பணிவேன் எங்க]

---

தந்ததனத் தானதனத் தனதான.

* உம்பர் தருத் † தேனு ‡ மணிக் கசிவாகி
ஒண்கடலிற் றேனமுதத் துணர்வூறி
இன்பரசத் தேபருகப் பலகாலும்
என்றனுயிர்க் காதரவுற் றருள்வாயே
தம்பிதனக் காகவனத் தணைவோனே
தந்தைவலத் தாலருள்கைக் கனியோனே
அன்பர்தமக் கானநிலைப் பொருளோனே
ஐந்துகரத் தானைமுகப் பெருமாளே. (உ)

---

தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
தத்ததன தத்ததன தனதான.

§ பக்கரைவி சித்ரமணி பொற்கலணை யிட்டநடை
|| பக்ஷியெனு முக்ர ¶ துர கமு $ நீபப்
பக்குவம லர்த்தொடையும் × அக்குவடு பட்டொழிய
பட்டுருவ விட்டருள்கை வடிவேலும்
திக்கதும திக்கவரு ** குக்குடமும் ரட்சைதரு
சிற்றடியு முற்றிய பனிருதோளும்
†† செப்பதியும் வைத்துயர்தி ருப்புகழ்வி ருப்பமொடு
செப்பெனவெ னக்கருள்கை மறவேனே

* உம்பர்தரு-சந்தானம், அரிசந்தானம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம் என்னும் தெய்வ விருக்ஷங்கள். † தேனு-காமதேனு ‡ மணி-சிந்தாமணி, இம்மூன்றும் தம்மையடைந்தோர்க்கு அவர்கள் விரும்பிய பொருள்களைத் தரவல்லன. § பக்கரை கடிவாளம், கவசம். கலணை-குதிரைமேல் தவிசு. || பக்ஷி-மயில். ¶ துரகம்-குதிரை. $ நீபம்-கடம்பு. × அக்குவடு-கிரவுஞ்சகிரி. ** குக்குடம்-கோழி. †† செப்பதி-திவ்வியக்ஷேத்திரம்.

*இக்கவரை நற்கனிகள் சர்க்கரைப ருப்புடனெய்
எட்பொரிய வற்றுவரை இளநீர் † வண்
டெச்சில்பய றப்பவகை பச்சரிசி பிட்டுவெள
ரிப்பழ ‡ மி டிப்பல்வகை தனி§மூலம்
மிக்க ¶ அடி சிற்கடலை பட்சணமெ னக்கொளொரு
விக்கினச மர்த்தனெனும் அருளாழி
வெற்ப ‖ குடி லச்சடில விற்பரம ரப்பரருள்
வித்தகம ருப்புடைய பெருமாளே. (௩)

---

தனதனன தான தனதனன தான
தனதனன தான தனதான.

விட$மடைசு வேலை அமரர் படை சூலம்
விசையன் விடு பாணம் எனவேதான்
விழியுமதி பார தனமுமுடை மாதர்
வினையின்வினை வேதும் அறியாதே
** கடியுலவு பாயல் பகலிரவெ னாது
கலவிதனின் மூழ்கி வறிதாய
கயவனறி வீன னிவனுமுயர் நீடு
கழலிணைகள் சேர அருள்வாயே
இடையர்சிறு பால்நெய் திருடிநெடி தேக
இறைவன் மகள் வாய்மை அறியாதே
இதயமிக வாடி யுடையபிளை நாத
கணபதியெ னுமும் முறைகூற
†† அடையலவ ராவி வெருவ அடி கூர
அசலுமறி யாமல் அவரோட
அகல்வதென டாசொ லெனவுமுடி சாட
அறிவருளும் ஆனை முகவோனே. (௪)

*இக்கு-கரும்பு. † வண்டெச்சில்-தேன். ‡இடி-மாவு.
§ மூலம்-கிழங்கு. ¶ அடிசில்-சோறு. ‖குடிலம்-வட்டம்.
$அடைசு-நெருங்கிய. **கடி-மணம். ††அடையலவர்-பகைவர்.

தனன தனதன தத்தன தத்தன
தனன தனதன தத்தன தத்தன
தனன தனதன தத்தன தத்தன தனதான.

நினது திருவடி* சத்திம யிற்கொடு
நினைவு கருதிடு புத்திகொ டுத்திட
நிறைய அமுதுசெய் முப்பழ மப்பமும் நிகழ்பால்தேன்

நெடிய வளைமுறி இக்கொடு லட்டுகம்
நிரவி லரிசிப ருப்பவ லெட்பொரி
நிகரி லினிகத லிக்கனி வர்க்கமும் இளநீரும்

மனது மகிழ்வொடு தொட்டக ரத்தொரு
மகர சலநிதி வைத்தது திக்கர
வலிய கரிமுக ஒற்றைம ருப்பனை வலமாக

மருவு மலர்புனை †தொத்திர சொற்கொடு
வளர்கை ‡குழைபிடி §தொப்பண குட்டொடு
வனச பரிபுர பொற்பத அர்ச்சனை மறவேனே

தெனன தெனதென தெத்தென னப்பல
சிறிய ||அறுபத மொய்த்துதி ரப்புனல்
திரளு முறுசதை பித்தநி ணக்குடல் செறிமூளை

செரும வுதரநி ரப்புசெ ருக்குடன்
இரைய விரவநி றைத்தக ளத்திடை
திமித திமிதிமி மத்தளி டக்கைகள் செகசேசே

எனவெ துகுதுகு துத்தென வொத்துகள்
துடிக ளிடிமிக வொத்துமு ழக்கிட
டிமுட டிமுடிமு டிட்டிமெ னத்தவில் எழுமோசை

இகலி யலகைகள் கைப்பறை கொட்டிட
இரண பயிரவி சுற்றுந டித்திட
எதிரும் நிசிசர ரைப்பலி யிட்டருள் பெருமாளே.(ரு)

*சத்தியும், மயிலும் விநாயகருக்கும் உண்டென்பதை விநாயகபுராணத்திற்காண்க. †தொத்திர-தோத்திரச்சொல்லைக் கொண்டு. ‡குழை காது. §தொப்பணம்-தோப்பணம், தோப்புக்கரணம். || அபறுதம் ஈ.

குமரக்கடவுள் துணை.

## நூல்.

தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன தனதான.

1. முத்தைத்தரு பத்தித் திருநகை
* அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர எனவோதும்

முக்கட்பர மற்குச் † சுருதியின்
முற்பட்டது கற்பித் ‡ திருவரும்
முப்பத்துமு வர்க்கத் தமரரும் அடிபேணப்

பத்துத்தலை தத்தக் கணை § தொடு
ஒன்றைக் || கிரி மத்தைப் பொருதொரு
பட்டப்பகல் வட்டத் திகிரியில் இரவாகப்

¶ பத்தற்கிர தத்தைக் கடவிய
$ பச்சைப் புயல் மெச்சத் தகுபொருள்
பட்சத்தொடு ரட்சித் தருள்வதும் ஒருநாளே

தித்தித்தெய வொத்தப் பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி
திக்கொக்கந டிக்கக் கழுகொடு + கழுதாடத்

திக்குப்பரி அட்டப் பயிரவர்
தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத் ரிகடக எனவோதக்

---

*அத்தி- தெய்வயானை. † சுருதியின் முற்பட்டது - பிரணவம். ‡இருவர் - பிரமவிட்டுணுக்கள். § தொட்டு எனற்பாலது தொடு எனத் தொகுக்கப்பட்டது. || கிரிமத்தைப் பொருது-மந்தரகிரியாகிய மத்தைக் கொண்டு [திருப்பாற்கடலை] கடைந்து. ¶ பத்தன்-அருச்சுனன். $ பச்சைப்புயல் - விட்டுணு. + கழுது - பிசாசு.

கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புதை புக்குப் பிடியென முதுகூகை
* கொட்புற்றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகிரி
குத்துப்பட வொத்துப் பொரவல பெருமாளே

---

## இதன் முடிபு.

அத்திக்கிறை! ...சரவண; ...குருபர! எனவோதும் பரமற்கு...கற்பித்து, இருவரும்...அமரரும்அடிபேண, ...பயிரவிநடிக்க, ...கழுது ஆட, ...அட்டப்பயிரவர் ...ஓத, பறை கொட்ட, கூகை புக்குப்பிடியென, ...அவுணரைவெட்டிப்பலியிட்டு, கிரிகுத்துப்பட ... பொரவலபெருமாளே! ...தலைதத்தக் கணைதொட்டு, கிரிமத்தைப்பொருது, ...பகல்... இரவாக ...இரதத்தைக்கடவிய பச்சைப்புயல் மெச்சத்தகு பொருளே! [நீ எளியேனை [இரட்சித்தருளும் ஒரு நாளும் [உளதோ?]

---

## திருப்பரங்குன்றம்.

இது மதுரைக்குத் தெற்கே நாலு மயிலில் உள்ள ரயில்வே ஸ்டேஷன். முருகக்கடவுளின் ஆறு படைகளில் முதற் படைவீடு.

---

தனன தந்த தத்தத்த தந்த
தனன தந்த தத்தத்த தந்த
தனன தந்த தத்தத்த தந்த தனதான.

2\. கருவ டைந்து பத்துற்ற திங்கள்
வயிறி ருந்து முற்றிப்ப யின்று
கடையில் வந்து தித்துக்கு ழந்தை வடிவாகிக்
கழுவி யங்கெ டுத்துச்சு ரந்த
முலை†யருந்து விக்கக்கி டந்து
கதறியங்கை கொட்டித்த வழ்ந்து நடமாடி
அரைவ டங்கள் கட்டிச்ச தங்கை
இடு‡குதம்பை பொற்சுட்டி தண்டை
அவைய ணிந்து முற்றிக்கி ளர்ந்து வயதேறி

---

* கொட்பு-சுழற்சி. † அருந்துவிக்க-அருத்த, ஊட்ட, ‡குதம்பை-காதணி.



திருப்பரங்குன்றம் கோவில்.

அரிய பெண்கள் நட்பைப்பு ணர்ந்து
பிணியு ழன்று சுற்றித்தி ரிந்த
*தமையுமுன்க்ரு பைச்சித்த மென்று பெறுவேனோ

இரவி யிந்த்ரன் வெற்றிக்கு ரங்கின்
அரச ரென்று மொப்பற்ற †வுந்தி
இறைவன் ‡ எண்கி னக்கர்த்த னென்றும் நெடுநீலன்

எரிய தென்றும் ருத்ரற்சி றந்த
அநும னென்றும் ஒப்பற்ற அண்டர்
எவரு மிந்த வர்க்கத்தில் வந்து $ புனமேவ

அரிய தன்ப டைக்கர்த்த ரென்று
அசுரர் தங்கி ளைக்கட்டை வென்ற
அரிமு குந்தன் மெச்சுற்ற பண்பின் மருகோனே

அயனை யும்பு டைத்துச்சி னந்து
உலகமும்ப டைத்துப் §ப ரிந்துள்
அருள்ப ரங்கி ரிக்குட்சி றந்த பெருமாளே. (க)

---

தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன தனதான.

3 உனைத்தி னந்தொழு திலனுன தியல்பினை
உரைத்தி லன்பல மலர்கொடு னடியிணை
உறப்ப ணிந்தில னொருதவ மிலனுன தருள்மாறு

உளத்து ளன்பின ருறைவிட மறிகிலன்
விருப்பொ டுன்சிக ரமும்வலம் வருகிலன்
உவப்பொ டுன்புகழ் துதிசெய விழைகிலன் மலைபோலே

கனைத்தெ ழும் ¶ பக டதுபிடர் மிசைவரு
கறுத்த வெஞ்சின ‖ மறலித னுழையினர்
கதித்தடர்ந்தெறி††கயிறடு‡‡கதைகொடுபொருபோதே

---

* அமையும்-போதும். † உந்தியிறைவன்-பிரமன். ‡ எண்கினக் கர்த்தன் கரடி முகமுள்ள சாம்புவான். $ புனம் புவனம் என்பதின் சிதைவு § பரித்து என்பது சந்தம்நோக்கிப் பரிந்து என்றாயது. ¶ பகடு- எருமைக்கடா. ‖ மறலி - யமன். †† கயிறு-பாசம். ‡‡ கதை-தண்டம்.

கலக்கு றுஞ்செய லொழிவற அழிவுறு
கருத்து நைந்தல முறுபொழு தளவைகொள்
கணத்தி லென்பய மறமயில் முதுகினில் வருவாயே

* வினைத்த லந்தனி லலைகைகள் குதிகொள
† விழுக்கு டைந்துமெ யுகுதசை கழுகுண
விரித்த குஞ்சிய ரெனுமவு ணரையமர் புரிவேலா

மிகுத்த பண்பயில் குயில்மொழி யழகிய
‡ கொடிச்சி குங்கும முலைமுக டுழுநறை
விரைத்த சந்தன § ம்ருகமத புயவரை யுடையோனே

¶ தினத்தி னஞ்சது ர் மறைமுனி முறைகொடு
புனற்சொ ரிந்தலர் பொதியவி ணவரொடு
சினத்தை நிந்தனை செயுமுனி வரர்தொழ மகிழ்வோனே

தெனத்தெ னந்தென எனவரி அளிநறை
தெவிட்ட அன்பொடு பருகுயர் பொழினிறை
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே. (உ)

---

4. $ அருக்கு மங்கையர் மலரடி வருடியும்
கருத்த றிந்தபின் அரைதனி லுடையினை
அவிழ்த்தும் அங்குள அரசிலை தடவியும் இருதோளுற்

றணைத்து மங்கையின் அடிதொறு நகமெழ
உதட்டை மென்றுப லிடுகுறி களுமிட
அடிக்க ளந்தனில் மயில்குயில் புறவென மிகவாய்விட்

டுருக்கு மங்கியின் மெழுகென வுருகிய
சிரத்தை மிஞ்சிடு மனுபவ முறுபலம்
உறக் * கையின்கனி நிகரென இலகிய தனமேல்வீழ்ந்

துருக்க லங்கிமெ யுருகிட அமுதகு
பெருத்த உந்தியின் முழுகிமெ யுணர்வற
உழைத்தி டுங்கன கலவியை மகிழ்வது தவிர்வேனோ

---

வினைத்தலம் போர்க்களம். † விழுக்கு - நிணம். ‡ கொடிச்சி. குறிஞ்சிநிலப்பெண், வள்ளி. § ம்ருகமதம் - கஸ்தூரி. ¶ தினந்தினப் எனற்பாலது சந்தம் நோக்கித் தினத்தினம் என விகாரப்பட்டது $ அருக்கு - அருமையான. * கையின்கனி - கையிலுள்ள நெல்லிக்கனி.

## திருப்பரங்குன்றம்.

இருக்கு மந்திர மொழிவகை *முனிபெற
உரைத்த சம்ப்ரம சரவண பவகுக
இதத்த இங்கித மிலகிய அறுமுக எழில்வேளென்
றிலக்க ணங்களும் இயலிசை களுமிக
விரிக்கு மம்பல மதுரித கவிதனை
இயற்று செந்தமிழ் விதமொடு புயமிசை புனைவோனே
செருக்கு மம்பல மிசைதனி லசைவுற
நடித்த சங்கரர் வழிவழி யடியவர்
திருக்கு ருந்தடி அருள்பெற அருளிய குருநாதா
திருக்கு ழந்தைய[illegible]ன அவர் வழிபடு
குருக்க ளின்திற மெனவரு பெரியவ
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே. (௪)

---

5. கறுக்கு மஞ்சன விழியிணை அயில்கொடு
நெருக்கி நெஞ்சற எறிதரு பொழுதொரு
கனிக்கு லின்சுவை அமுதகு மொருசிறு நகையாலே
†களக்கொ ழுங்கலி வலைகொடு விசிறியும்
மனைக்கெ ழுந்திரு மெனமன முருகவொர்
கவற்சி கொண்டிட மனைதனி லழைகொடு கொடுபோகி
நறைத்த பஞ்சணை மிசையினில் மனமுற
அணைத்‡த கந்தனி லிணைமுலை எதிர்பொர
நகத்த ழுந்திட அமுதிதழ் பருகியு மிடறாடே
நடித்தெ ழுங்குரல் குமுகுமு குமுவென
இசைத்து நன்கொடு மனமது மறுகிட
நழுப்பு நஞ்சன சிறுமிகள் துயரற அருள்வாயே
நிறைத்த தெண்டிரை மொகுமொகு மொகுவென
உரத்த§கஞ்சுகி முடிநெறு நெறுவென
நிரைத்த அண்டமு கிடுகிடு கிடுவென வரைபோலும்

---

*முனி-அகத்தியர். †களக்கொழுங்கலி-உளமான கண்டத் தொனி. ‡ஆகம் என்பது அகமெனத்திரிந்தது, ஆகம்-மார்பு. §கஞ்சுகி-பாம்பு-அஃதாவது அண்டங்களை எல்லாந் தாங்கிநிற்கின்ற ஆதிசேஷன்.

*சிவத்த திண்கழல் நிசிசர ருரமொடு,
சிரக்கொ டுங்குவை மலைபுரை தரஇரு
நிணக்கு ழம்பொடு குருதிகள் சொரிதர அடுதீரா

திறற்க ருங்குழ லுமையவ ளருளுறு
புழைக்கை மன்கட கயமுக மிகவுள
சிவக்கொ ழுந்தன கணபதி யுடன்வரும் இளையோனே

சினத்தொ டுஞ்†சம னுதைபட நிறுவிய
பரற்கு ளன்புறு புதல்வநன் மணியுரு
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே. (௪)

6. வடத்தை மிஞ்சிய புளகித வனமுலை
தனைத்தி றந்தெதிர் வருமிளை ஞர்களுயிர்
மயக்கி யைங்கணை மதனனை ஒருஅரு மையிலேலே

‡வருத்தி வஞ்சக நினைவொடு மெலமெல
நகைத்து நண்பொடு §வருமிரு மெனவுரை
வழுத்தி யங்கவ ரொடுசெரு வியுமுடல் தொடுபோதே

விடத்தை வென்றிடு படைவிழி கொடுமுள
மருட்டி வண்பொருள் கவர்பொழு தினில்மயல்
விருப்பெ னும்படி மடிமிசை யினில்விழு தொழில்தானே

விளைத்தி டும்பல கணிகையர் தமதுபொய்
மனத்தை நம்பிய சிறியனை வெறியனை
விரைப்ப தந்தனில் அருள்பெற நினைகுவ துளதோதான்

குடத்தை வென்றிரு கிரியென எழில்தள
தளத்த கொங்கைகள் மணிவட மணிசிறு
குறக்க ரும்பின்மெய் துவள்புய னெனவரு வடிவேலா

குரைக்க ருங்கடல் திருவணை யெனமுனம்
அடைத்தி லங்கையி னதிபதி நிசிசரர்
குலத்தொ டும்பட வொருகணை விடுமரி மருகோனே

---

*சிவத்த-சிவந்த விளக்கிய; வலித்தல்விகாரம். † சமன்-யமன். ‡வருத்தி-வருவித்து. § வருமிரும்-வாரும் இரும்; குறுக்கல்விகாரம்.

திடத்தெ திர்ந்திடு மசுரர்கள் பொடிபட
அயிற்கொ டும்படை விடுசர வணபவ
திறற்கு கன்குரு பரனென வருமொரு முருகோனே

செழித்த தண்டலை தொறுமில கியகுட
வளைக்கு லந்தரு தரளமு மிகுமுயர்
திருப்ப ரங்கிரி வளநகர் மருவிய பெருமாளே. (௫)

---

தனத்ததந் தந்தத் தத்தன தத்தந்
தனத்ததந் தந்தத் தத்தன தத்தந்
தனத்ததந் தந்தத் தத்தன தத்தந் தனதான.

7. பதித்தசெஞ் சந்தப் பொற்குட நித்தம்
பருத்துயர்ந் தண்டத் திற்றலை முட்டும்
பருப்பதந் தந்தச் செப்பவை யொக்குந் தனபாரம்

*படப்புயங் கம்பற் கக்குக டுப்பண்
செருக்குவண் டம்பப் பிற்கய லொக்கும்
பருத்தகண் கொண்டைக் கொக்குமி ருட்டென் றிளைஞோர்கள்

துதித்துமுன் கும்பிட் டுற்றது ரைத்தன்
புவக்கநெஞ் சஞ்சச் சிற்றிடை சுற்றுந்
துகிற்களைந் தின்பத் †துர்க்கம ளிக்குங் கொடியார்பால்

துவக்குணும் பங்கப் பித்தன வத்தன்
புவிக்குளென் சிந்தைப் புத்திம யக்கந்
துறக்கநின் தண்டைப் பத்மமெ னக்கென் றருள்வாயே

குதித்துவெண் சங்கத் தைச்சுற வெற்றுங்
கடற்கரந் தஞ்சிப் புக்கவ ரக்கன்
குடற்சரிந் தெஞ்சக் குத்திவி திர்க்குங் கதிர்வேலா

குலக்கரும் பின்சொற் றத்தையி பப்பெண்
தனக்குவஞ் சஞ்சொற் ‡பொச்சையி டைக்குங்
குருக்குருங் குங்குக் குக்குகு குக்குங் குருகூகூ

---

*படப்புயங்கம் பல்சக்குகடு, பண்செருக்குவண்டு, அம்புதும்பிற்கயல் எனப்பிரிக்க. †துர்க்கம்-சலக்கம். ‡பொச்சையிடை-காட்டினிடத்தில்.

திதித்திதிந் திந்தித் திந்தியெ னக்கொம்
பதிர்த்துவெண் சண்டக் கட்கம்வி திர்த்துந்
திரட்குவிந்தங்கட்பொட்டெழ வெட்டுங் கொலைவேடர்
தினைப்புனஞ் சென்றிச் சித்தபெ ணைக்கண்
டுருக்கரந் தங்குக் கிட்டிய ணைத்*தொண்
திருப்பரங் குன்றிற் †புக்குளி ருக்கும் பெருமாளே. (ஙு)

---

தந்தனந் தந்ததன தந்தனந் தந்ததன
தந்தனந் தந்ததன தனதான.

8. மன்றலங் கொந்துமிசை தெந்தனந் தெந்தனென
வண்டினங் கண்டுதொடர் குழல்மாதர்
மண்டிடுந் ‡தொண்டையமு துண்டுகொண் டன்புமிக
வம்பிடுங் கும்பகன தனமார்பில்
ஒன்றஅம் பொன்றுவிழி கன்றஅங் கங்குழைய
உந்தியென் கின்றமடு விழுவேனை
உன்சிலம் புங்கனக தண்டையுங் கிண்கிணியும்
ஒண்கடம் பும்புனையும் அடிசேராய்
பன்றியங் கொம்புகம டம்புயங் கஞ்சுரர்கள்
பண்டைஎன் பங்கமணி பவர்சேயே
பஞ்சரங் கொஞ்சுகிளி §வந்துவந் தைந்துகர
பண்டிதன் தம்பியெனும் வயலூரா
சென்றுமுன் ||குன்றவர்கள் தந்தபெண் கொண்டுவளர்
செண்பகம் பைம்பொன்மலர் செறிசோலை
திங்களுஞ் செங்கதிரு மங்குலுந் தங்குமுயர்
தென்பரங் குன்றிலுறை பெருமாளே. (எ)

*ஒண்-பொருந்திய. †புக்குள் -புகுந்து உள்ளே. ‡தொண்டை-கொவ்வைக்கனி. §உவந்தஐந்து. அ-நொக்கது. ||குன்றவர்கள்-வேடர்கள்.

தந்தனந் தனந்த தந்த
தந்தனந் தனந்த தந்த
தந்தனந் தனந்த தந்த தனதான.

9 சந்தனந் திமிர்ந்த ணைந்து
குங்குமங் கடம்பி லங்கு
சண்பகஞ் செறிந்தி லங்கு திரடோளும்

தண்டையஞ் சிலம்ப லம்ப
வெண்டையஞ் சலஞ்ச லென்று
சந்தமன் சதங்கை கொஞ்ச மயிலேறி

திந்திமிந் திமிந்தி மிந்தி
தந்தனந் தனந்த னென்று
சென்றசைந் துகந்து வந்து க்ருபையோடே

*சிந்தையங் குலம்பு குந்து
சந்ததம் புகழ்ந்து ணர்ந்து
செம்பதம் பணிந்தி ரென்று மொழிவாயே

அந்தமந் திகொண்டி லங்கை
வெந்தழிந் திடும்ப கண்டன்
அங்கமுங் குலைந்த ரங்கொள் பொடியாக

அம்பகும் பனுங்க லங்க
வெஞ்சினம் புரிந்து கன்ற
அம்புகொண் டுவென்ற கொண்டல் மருகோனே

இந்துவுங் கரந்த தும்பை
கொன்றையுஞ் சலம்பு னைந்தி
டும்பரன் சிலம்ப மர்ந்த குமரேசா

†இந்திரன் பதம்பெ றண்டர்
தம்பயங் கடிந்து முந்த
எங்கணுங் கமழ்ந் திருந்த (பெருமாளே. (அ)

---

*சிந்தை அம் குலம்-மனமாகிய அழகிய கோயில்; எழுவன்தொகை.

†இந்திரன் பதம்பெற அண்டர் எனப்பிரிக்க. அகரம்தொகுத்தல்விகாரம்.

தந்தந்தன தந்தந்தன தந்தந்தன தந்தந்தன
தந்தந்தன தந்தந்தன தனதான.

10. *எந்தன்சட லங்கம்பல பங்கம்படு தொந்தங்களில்
என்றுந்துயர் பொன்றும்படி ஒருநாளே
இன்பந்தரு செம்பொன்கழ லுந்துங்கழல் தந்தும்பிணை
†என்றும்படி பந்தங்கெட மயிலேறி
வந்தும்பிர சண்டம்பகி ரண்டம்புவி யெங்குந்திசை
மண்டும்படி நின்றுஞ்சுட ரொளிபோலும்
வஞ்சங்குடி கொண்டுந்திரி நெஞ்சன்றுக ளென்றுங்கொளும்
வண்டன்தமி யன்றன்பவம் ஒழியாதோ
தந்தந்தன திந்திந்திமி யென்றும்பல சஞ்சங்கொடு
தஞ்சம்புரி கொஞ்சுஞ்சிறு மணியாரம்
சந்தந்தொனி கண்டும்புய லங்கன்சிவ னம்பன்பதி
சம்புந்தொழ நின்றுந்தினம் விளையாடும்
கந்தன்குக னென்றன்குரு வென்றுந்தொழும் ‡அன்பன்கவி
கண்டுய்ந்திட அன்றன்பொடு வருவோனே
கண்டின்கனி சிந்துஞ்சுவை பொங்கும்புனல் தங்கும்பொழில்
கந்தங்கொள்ப ரங்குன்றமர் பெருமாளே.(கo)

தனதந்தன தந்தன தந்தன
தனதந்தன தந்தன தந்தன
தனதந்தன தந்தன தந்தன தனதான.

11. சருவும்படி §வந்தன னிங்கித
மதனின்றிட அம்புலி யுஞ்சுடு
தழல்கொண்டிட மங்கையர் கண்களில் வசமாகிச்
சயிலங்கொளு மன்றல்பொ ருந்திய
பொழிலின்பயில் தென்றலு மொன்றிய
தடவஞ்சுனை துன்றியெ ழுந்திட இருமாவே

*எந்தன்,இது என்றன் என்பதன் மரூஉ. †என்றும்படி-எப்போதும் போல். ‡அன்பன்-நக்கீரர். §வந்தனன்-வந்து; முற்றெச்சம்.

இரவும்பக லந்தியு நின்றிடு
குயில்வந்திசை தெந்தென வென்றிட
இருகண்கள்து யின்றிட லின்றியும் அயர்வாகி
இவணெஞ்சு *ப தன்பத னென்றிட
மயல்கொண்டுவ ருந்திய வஞ்சகன்
இனியுன்றன்ம லர்ந்தில கும்பதம் அடைவேனே
திருவொன்றிவி ளங்கிய †அண்டர்கள்
மனையின்தயி ருண்டவ னெண்டிசை
திகழும்புகழ் கொண்டவன் ‡வண்டமிழ் பயில்வோர்பின்
திரிகின்றவன் மஞ்சுநி றம்புனை
பவன்மிஞ்சுதி றங்கொள வென்றடல்
செயதுங்கமு குந்தன் மகிழ்ந்தருள் மருகோனே
மருவுங்கடல் துந்துமி யுங்குட
முழவங்கள்கு மின்குமி னென்றிட
வளமொன்றிய செந்திலில் வந்தருள் முருகோனே
மதியுங்கதி ரும்புய லுந்தின
‖மறுகும்படி அண்டமி லங்கிட
வளர்கின்றப ரங்கிரி வந்தருள் பெருமாளே (கo)

---

தனத்தனந் தந்ததான தனத்தனந் தந்ததான
தனத்தனந் தந்ததான தனதான.

12. வரைத்தடங் கொங்கையாலும் வளைப்படுஞ் செய்கையாலும்
மதர்த்திடுங் கொண்டையாலும் §அனைவோரும்

---

*பதன்பதனென்றிட-பதை பதைக்க. †அண்டர்-இடையர்.
‡வண்டமிழ் பயில்வோர்பின் திரிகின்றவன் என்றது,

"கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டா—துணிவுடைய
செந்நாப் புலவனும் போகின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்" என்ற திருமழிசையாழ்வார்
பின்சென்றதை. ‖மறுகும்படி - சுழலும்படி. §அனைவோரும் வடுச்
செய்யுந்தொண்டை—பலராலும்வடுப்படுத்தப்படும் கொவ்வைக்கனியிதழ்.

வடுச்செயுந்தொண்டையாலும்*விரைத்திடுங்கொண்டையாலும்
மருட்டிடுஞ் சிந்தைமாதர் வசமாகி
எரிப்படும் பஞ்சுபோல மிகக்கெடுந் தொண்டனேனும்
†இனற்படுந் தொந்தவாரி கரையேற
இசைத்திடுஞ் சந்தபேத மொலித்திடும் தண்டைசூழும்
இணைப்பதம் புண்டரீகம் அருள்வாயே
சுரர்க்குவஞ் சஞ்செய்சூரன்‡இளக்ரவுஞ் சந்தனோடு
துளக்கெழுந் தண்டகோளம் அளவாகத்
துரத்தியன் றிந்த்ரலோகம் அழித்தவன் சம்ப்ரதாயங்
கெடப்பெருஞ் சண்டவேலை விடுவோனே
செருக்கெழுந் தும்பர்சேனை துளக்கவென் றண்டமூடு
தெழித்திடுஞ் சங்கபாணி மருகோனே
தினைப்புனஞ் சென்றுலாவு குறத்தியின் பம்பராவு
திருப்பரங் குன்றமேவு பெருமாளே. (கக)

---

தனத்தனந் தந்தன தனத்தனந் தந்தன
தனத்தனந் தந்தன தந்ததான.

13. பொருப்புறுங் கொங்கையர் பொருட்கவர்ந் தொன்றிய
பிணக்கிடுஞ் சண்டிகள் வஞ்சமாதர்
§புயற்குழன் றங்கமழ்‖அறற்குலந் தங்கவிர்
முருக்குவண் செந்துவர் தந்துபோகம்
அருத்திடுஞ் சிங்கியர் தருக்கிடுஞ் செங்கயல்
அறச்சிவந் ¶தங்கையில் அன்புமேவும்
அவர்க்குழன் றங்கமு மறத்தளர்ந் தென்பயன்
அருட்*பதம் பங்கய மன்புறுதே தா
இருத்தணம் பங்கய னலர்க்கணன் சங்கரர்
விதித்†தெணுங் கும்பிடு கந்தவேளே

---

*விரை—மணம். †இனற்படுந்தொந்தவாரி-துன்பப்படுகின்ற வினைத் தொடர்புள்ள பிறவிக்கடல். ‡இள-இளமையாகிய. §புயல்குழன் றஙம் கமழ் எனப்பிரிக்க. ‖அறல்-கருமணல். ¶கையில் கைப்பொருளில். *பதபங்கயமெனற்பாலது சந்தநோக்கி இயல்பாயிற்று †எணும்-எண்ணும்.

இடுக்கண்உந் துஞ்சமட்ணரைப்பெருந் திண்கழு
மிசைக்கிடுஞ் செந்தமிழ் அங்கவாயா
செருக்குதண் சண்பகவனத்திடங் கொங்கொடு
திறற்செழுஞ் சந்தகில் துன்றிீடு
தினைப்புனம் பைங்கொடி தனத்துடன் சென்றணை
திருப்பரங் குன்றுறை தம்பிரானே. (கஉ)

---

தனத்தத் தந்தனந் தனத்தத் தந்தனந்
தனத்தத் தந்தனந் தனதான.

14. தடக்கைப் பங்கயங் கொடைக்குக் கொண்டல்தண்
டமிழ்க்குத் தஞ்சமென் றுலகோரைத்
தவித்துச் சென்றிரந் துளத்திற் புண்படுந்
தளர்ச்சிப் பம்பரந் தனையூசற்
*கடத்தைத் துன்பமண் சடத்தைத் துஞ்சிடுங்
கலத்தைப் பஞ்சஇந் த்ரியவாழ்வைக்
கணத்திற் சென்றிடந் திருத்தித் தண்டையங்
கழற்குத் தொண்டுகொண் டருள்வாயே
படைக்கப் பங்கயன் துடைக்கச் சங்கரன்
புரக்கக்†கஞ்சைமன் பணியாகப்
பணித்துத் தம்பயந் தணித்துச் சந்தகம்
பரத்தைக் கொண்டிடுந் தனிவேலா
குடக்குத் தென்‡பரம் பொருப்பிற் றங்குமங்
குலத்திற் கங்கைதன் சிறியோனே
குறப்பொற் கொம்பைமுன் புனத்திற் செங்கரங்
குவித்துக் கும்பிடும் பெருமாளே.

---

தந்தனந் தந்தத் தனதான.

15. சந்ததம் பந்தத் தொடராலே
சஞ்சலந் துஞ்சித் திரியாதே
கந்தனென் றென்றுற் றுனைநாளும்
கண்டுகொண் டன்புற் றிடுவேனோ

*கடம்-கயிறு. † கஞ்சைமன்-திருமால். ‡பரம்பொருப்பு-திருப்பரங்கிரி.

*தந்தியின் கொம்பைப் புணர்வோனே
சங்கரன் பங்கிற் †சிவைபாலா
செந்திலங் கண்டிக் கதிர்வேலா
தென்பரங் குன்றிற் பெருமாளே (௧௫)

---

தனதந்தன தந்தன தந்தன
தனதந்தன தந்தன தந்தன
தனதந்தன தந்தன தந்தன தனதான.

16. கனகந்திரள் கின்றபெ ருங்கிரி
தனில்வந் துதகன் தக னென்றிடு
கதிர்மிஞ்சிய ‡செண்டையெ றிந்திடு கதியோனே
§கடமிஞ்சிய னந்தவி தம்புணர்
கவளந்தனை யுண்டுவ ளர்ந்திடு
கரியின்றுணை யென்றுபி றந்திடு முருகோனே
‖பனகந்துயில் கின்றதி றம்புனை
கடல்முன்புக டைந்தப ரம்பரர்
படரும்புய லென்றவ ரன்புகொள் மருகோனே
பலதுன்பமு ழன்றுக லங்கிய
சிறியன்புலை யன்கொலை யன்புரி
பவமின்றுக ழிந்திட வந்தருள் புரிவாயே
அனதன்பெயர் நின்றுரு ளுந்திரி
புரமுந்திரி வென்றிட இன்புடன்
அழலுந்த ✕நகுந்திறல் கொண்டவர் புதல்வோனே
அடல்வந்துமு ழங்கியி டும்பறை
டுடுடுண்டுடு டுண்டுடு டுண்டென
அதிர்கின்றிட அண்டநெ ரிந்திட வருசூரர்
மனமுந்தழல் சென்றிட அன்றவர்
உடலுங்குட லுங்கிழி கொண்டிட
மயில் ¶வென்றனில் வந்தருளுங்கன பெரியோனே

---

* தந்தியின்கொம்பு-தெய்வயானை. † சிவை பார்வதி ‡ செண்டை-செண்டாயுதத்தை. § கடம்-மதம். ‖ பனகம்-பன்னகம், பாம்பு. + நகும்-சிரிக்கும். திரிபுரத்தைச் சிரித்தெரித்ததை. ¶ வென்-வெந், முதுகு.

மதியுங்கதி ருந்தட வும்படி
உயர்கின்றவ னங்கள்பொ ருந்திய
வளமொன்றுப ரங்கிரி வந்தருள் பெருமாளே. (௧௬)

---

தானன தந்தன தந்தனந் தந்தன
தானன தந்தன தந்தனந் தந்தன
தானன தந்தன தந்தனந் தந்தன தனதான.

17. காதட ருங்கயல் கொண்டிசைந் தைம்பொறி
வாளிம யங்கம னம்பயந் தந்திருள்
கால்தர இந்துவி சும்பிலங் கும்பொழு தொருகோடி
காய்கதி ரென்றொளிர் செஞ்சிலம் புங்கணை
யாழியு டன்கட கந்துலங் கும்படி
காமனெ டுஞ்சிலை கொண்டடர்ந் தும்பொரு மயலாலே
வாதுபு ரிந்தவர் செங்கைதந் திங்கித
மாகந டந்தவர் பின்திரிந் துந்தன
மார்பில ழுந்தவ ணைந்திடுந் துன்பம துழலாதே
வாசமி குந்தக டம்பமென் கிண்கிணி
மாலைக ரங்கொளு மன்பர்வந் தன்பொடு
வாழ்நித தப்புனை யும்பதந் தந்துன தருள்தாராய்
போதிலு றைந்தருள் கின்றவன் செஞ்சிர
மீதுத டிந்துவி லங்கிடும் புங்கவ
*போதவ ளஞ்சிவ சங்கரன் கொண்டிட மொழிவோனே
பூகமு டன்திகழ் †சங்கினங் கொண்டகி
ரீவம டைந்தபு ரந்தரன் தந்தருள்
பூவைக ருங்குற மின்கரந் தங்குப னிருதோளா
தீதக மொன்றினர் வஞ்சகந் துஞ்சியி
டாதவர் சங்கரர் தந்தவன் பும்பல
சேர்திரு தன்குல மஞ்சமுன் சென்றிடு திறலோனே
சீதள முந்தும ணந்தயங் கும்பொழில்
சூழ்தர விஞ்சைகள் வந்திறைஞ் சும்பதி
தேவர்ப ணிந்தெழு தென்பரங் குன்றுறை பெருமாளே.

---

*போதம்-ஞானம் †சங்கினங்கொண்ட கிரீவம்-சங்கின் அம்[அழகு] கொண்ட, அல்லது சங்கு இனங்கொண்ட கழுத்து. கருங்குறமின்-வள்ளி,

## இரண்டாவது

# திருச்செந்தூர்.

இது திருநெல்வேலிக்குக் கிழக்கே 30மயில் தூலவில் இருக்கிறது இங்கே ரயில்வ்வு ஸ்டேஷன் உண்டு. முருகக்கடவுளின் ஆறு படைகளில்

இரண்டாம் படைவீடு,

தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன—தனதான

18. கமல மாதுடன் இந்திரை யுஞ்சரி
சொலவொ ணாதம டந்தையர் சந்தன
களப சீதள கொங்கையில் அங்கையில் இருபோ*தேய்

களவு நூல்தெரி வஞ்சனை அஞ்சன
விழியில் மோகித கந்தசு கந்தரு
கரிய வோதியில் இந்துமு கந்தனில் மருளாதே

அமல மாகிய சிந்தைய டைந்தகல்
தொலைவி லாதஅ றப்பொரு ளின்பமும்
அடைய வோதியு ணர்ந்து †த ணந்தபின் அருள்தானே

அறியு மாறுபெ றும்படி அன்பினின்
இனிய நாதசி லம்பு புலம்பிடும்
அருண ஆடக கிண்கிணி தங்கிய அடிதாராய்

குமரி காளிப யங்கரி சங்கரி
கவுரி நீலிப ரம்பரை அம்பிகை
குடிலை யோகினி சண்டினி குண்டலி எமதாயி

குறைவி லாளுமை மந்தரி அந்தரி
வெகுவி தாகம சுந்தரி தந்தருள்
குமர மூஷிக முந்திய ஐங்கர கணராயன்

‡மமவி நாயக னஞ்சுமிழ் §கஞ்சுகி
அணிக ஜானன விம்பவொ ரம்புலி
மவுலி யானுறு சிந்தையு கந்தருள் இளையோனே

---

*ஏய்-பொருந்த. † தணந்த-பிரிந்த. ‡மம-என்னுடைய. §கஞ்சுகி-பாம்பு.



திருச்செந்தூர் கோவில்.

வளரும் வாழையு மஞ்சளும் இஞ்சியும்
இடைவி டாதுநெ ருங்கிய மங்கல
மகிமை மாநகர் செந்திலில் வந்துறை பெருமாளே. (உ)

19. *அளக பாரம் அலைந்து குலைந்திட
வதனம் வேர்வு துலங்கி நலங்கிட
அவச மோகம்வி ளைந்து தளர்ந்திட அணைமீதே

அருண வாய்நகை சிந்திய சம்ப்ரம
அடர்ந காநுதி பங்கவி தஞ்செய்து
அதர பானம் அருந்தி மருங்குற முலைமேல்வீழ்ந்

துளமும் வேறுப டும்படி ஒன்றிடு
மகளிர் தோதக இன்பின் முயங்குதல்
ஒழியு மாறுதெ ளிந்துள மன்பொடு சிவயோகத்

துருகு ஞானப ரம்பர தந்திர
அறிவி னோர்கரு தங்கொள்சி லம்பணி
உபய சீதள பங்கய மென் †கழல் தருவாயே

இளகி டாவளர் சந்தன குங்கும
களப பூரண கொங்கைந லம்புனை
இரதிவேள்பணி தந்தையும் அந்தண மறையோனும்

இனிது றுதெதி ரிந்திர னண்டரும்
அரக ராசிவ சங்கர சங்கர
எனமி காவரு நஞ்சினை உண்டவர் அருள்பாலா

வளர்ந்சி சாசரர் தங்கள்சி ரம்பொடி
படவி ரோதமி டுங்குல சம்ப்ரமன்
மகர வாரிக டைந்தநெ டும்புயல் மருகோனே

மதுர வாசக மிஞ்சிய கிஞ்சுக
இதழி மாதுமை மைந்த இரும்பொழில்
மயிலின் மீதினில் வந்துறை செந்தியின் பெருமாளே(உ)

*அளகம்-கூந்தல். †கழல்-திருவடி = ஆகுபெயர்.

தந்த தானன தனதன தனதன
தந்த தானன தனதன தனதன
தந்த தானன தனதன தனதன தனதான.

20. பஞ்ச பாதக முறுபிறை *எயிறெரி
குஞ்சி கூர்விட மதர்விழி †பிலவக
பங்க வாண்முக முடுகிய நெடுகிய திரிசூலம்

பந்த பாசமு மருவிய கரதல
மிஞ்சி நீடிய கருமுகி லுருவொடு
பண்பி லாதொரு பகடது முதுகினில் யமராஜன்

அஞ்ச வேவரு மவசர மதிலொரு
தஞ்ச மாமென வழிவழி அருள்பெறும்
அன்பி னாலுன தடிபுக ழடிமையென் எதிரேநீ

அண்ட கோளகை வெடிபட இடிபட
எண்டி சாமுக மடமட நடமிடும்
அந்த ‡மோகர மயிலினி லியலுடன் வரவேணும்

மஞ்சு போல்வள ரளகமு மிளகிய
ரஞ்சி தாம்ருத வசனமு நிலவென
வந்த தூயவெண் முறுவலு மிருகுழை யளவோடும்

மன்றல் வாரிச நயனமு மழகிய
குன்ற வாணர்த மடமகள் தடமுலை
மந்த ராசல மிசைதுயி லழகிய மணவாளா

செஞ்சொல் மாதிசை வடதிசை குடதிசை
விஞ்சு கீழ்திசை சகலமு மிகல்செய்து
திங்கள் வேணியர் பல§தளி தொழுதுயர் மகமேரு

செண்டு மோதின ரரசரு ளதிபதி
தொண்ட ராதியும் வழிவழி நெறிபெறு
செந்தில் மாநக ரினிதுறை அமரர்கள் பெருமாளே.

---

*எயிறு-பற்கள். †பிலவகம்-குரங்கு. ‡மோகரம் பராக்ரமம் §தளி-கோயில்.

தனனதன தனனதன தந்தத் தந்தத்
தனனதன தனனதன தந்தத் தந்தத்
தனனதன தனனதன தந்தத் தந்தத் தனதான.

21. * அமுதுததி விடமுமிழு செங்கட் டிங்கட்
† பகவினொளிர் வெளிறெயிறு துஞ்சற் குஞ்சித்
தலையுமுடை யவனரவ தண்டச் சண்டச் சமனோலை

அதுவருகு மளவிலுயி ரங்கிட் டிங்குப்
பறைதிமிலை திமிர்தமிகு ‡ தம்பட் டப்பற்
கரையவுற வினரலற உந்திச் சந்தித் தெருவூடே

எமதுபொரு ளெனுமருளை யின்றிக் குன்றிப்
பிளவளவு தினையளவு பங்கிட் டுண்கைக்
கிளையமுது வசைதவிர இன்றைக் கன்றைக் கெனநாடா

திடுகடி தெனுமுணர்வு பொன்றிக் கொண்டிட்
டுடுடுடுடு டுடுடுடுடு டுண்டுட் டுண்டுட்
டெனவகலு நெறிகருதி நெஞ்சத் தஞ்சிப் பகிராதோ

குமுதபதி வகிரமுது சிந்தச் சிந்தச்
சரணபரி புரசுருதி கொஞ்சக் கொஞ்சக்
குடிலசடை § பவுரிகொடு தொங்கப் பங்கிற் கொடியாட

|| குலதடினி அசையஇசை பொங்கப் பொங்கக்
கழலதிர டகுடகுட டங்கட் டெங்கத்
தொகுகுகுகு தொகுகுகுகு தொங்கத் தொங்கத் தொகுதீதோ

திமிதமென முழவொலிமு ழங்கச் செங்கைத்
¶ தமருகம திர்சதியொ டன்பர்க் கின்பத்
திறமுதவு பரதகுரு வந்திக் குஞ்சற் குருநாதா

திறலுமணி தரளமுயர் தெங்கிற் றங்கிப்
புரளஎறி திரைமகர சங்கத் துங்கத்
திமிரசல நிதிதழுவு செந்திற் கந்தப் பெருமாளே.(௪)

---

* அமுத உததி-பாற்கடல். † பகவு-பிளவு. ‡ தம்பட்டம் பற்கரைய-தம்பட்டம் முதலிய பல வாத்தியங்கள் சப்திக்க. § பவுரி-கூத்து || தடினி-ஆறு. குலதடினி - சிரேஷ்டமான கங்கையாறு ¶ தமருகம் - உடுக்கை.

தனனதன தனனதன தந்தனந் தந்தனந்
தனனதன தனனதன தந்தனந் தந்தனந்
தனனதன தனனதன தந்தனந் தந்தனந் தந்ததான.

22. கொடியனைய இடைதுவள அங்கமும் பொங்கஅங்
குமுதஅமு திதழ்பருகி இன்புறுஞ் சங்கையன்
குலவியணை முகிலளக முஞ்சரிந் தன்பினின் பண்புலாவக்

கொடியவிரல் நகநுதிசெய் புண்படுஞ் சஞ்சலன்
குறுகியவ ருடனினிது சம்ப்ரமங் கொண்டுளங்
குரலழிய அவசமுறு குங்குணன் கொங்கவிழ்ந் தொன்றுபாய்மேல்

விடமனைய விழிமகளிர் கொங்கையின் பம்பெறும்
வினையனியல் பரவுமுயிர் வெந்தழிந் தங்கமும்
மிதமொழிய அறிவில்நெறி பண்பிலண் டுஞ்சகன் செஞ்செநீடும்

வெகுகனக ஒளிகுலவும் அந்தமன் செந்திலென்
றவிழஉள முருகிவரு மன்பிலன் * தந்திலன்
விரவுமிரு சிறுகமல பங்கயந் தந்துகந் தன்புறாதோ

படமிலகு மரவினுட லங்கமும் பங்கிடந்
துதறுமொரு † கலபிமிசை வந்தெழுந் தண்டர்தம்
பகையசுர ரனைவருடல் சந்துசந் துங்கதுஞ் சிந்தும்வேலா

படியவரு மிமையவரும் நின்றிறைஞ் செண்குணன்
பழையஇறை உருவமிலி அன்பர்பங் கன்பெரும்
‡பருவரல்செய் புரமெரிய விண்டிடுஞ் செங்கணன் கங்கைமான்வாழ்

சடிலமிசை அழகுபுனை கொன்றையும் பண்புறும்
தருணமதி யினமுறைசெய் § துண்டமுஞ் செங்கையொண்
சகலபுவ னமுமொழிக தங் ‖ குறங் கங்கியும் பொங்கிநீடும்

சடமருவு விடையரவர் துங்கஅம் பங்கினின்
றுலகுதரு கவுரியுமை கொங்கைதந் தன்புறும்
தமிழ்விரக உயர்பரம சங்கரன் கும்பிடுந் தம்பிரானே. (௫)

---

* தந்திலன் - சாஸ்திர ஆராய்ச்சியில்லாதவன். † கலபி - மயில்.
‡ பருவரல் - துன்பம். § துண்டம் - முகம். ‖ குறங்கங்கி - இடையாபரணம்.

தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதன தனதான.

23. அறிவழிய மயல்பெருக உரையுமற விழிசுழல
அனலவிய மலமொழுக அகலாதே
அனையுமனை அருகிலுற வெருவியழ உறவுமழ
அழலினிகர் மறலியெனை அழையாதே
செறியுமிரு வினைகரண மருவுபுல னொழியவுயர்
திருவடியி லணுகவரம் அருள்வாயே
சிவனைநிகர் பொதியவரை முனிவனக மகிழஇரு
செவிகுளிர இனியதமிழ் பகர்வோனே
நெறி தவறி* அலரிமதி நடுவன்மக பதி†முளரி
நிருதிநிதி பதிகரிய வனமாலி
நிலவுமறை யவனிவர்க ளலைய அர சுரிமைபுரி
நிருதனுர மறஅயிலை விடுவோனே
‡மறிபரசு கரமிலகு பரமனுமை இருவிழியும்
மகிழவடி மிசைவளரும் இளையோனே
§மதலை தவழுததியிடை வருதரள மணி||புளின
மறையவுயர் கரையிலுறை பெருமாளே. (சு)

---

தனத்தந்தந் தனத்தந்தந்
தனத்தந்தந் தனத்தந்தந்
தனத்தந்தந் தனத்தந்தந் தனதான.

24. கரிக்கொம்பந் தனித்தங்கம்
குடத்தின்பந் தனத்தின்கண்
கறுப்புந்தன் சிவப்புஞ்செம் பொறிதோள்சேர்
கணைக்கும்பண் டிழைக்கும்பங்
களிக்கும்பண் பொழிக்குங்கண்
கழுத்துஞ்சங் கொளிக்கும்பொன் குழையாடச்

---

* அலரி சூரியன். † முளரி - அக்கினி. ‡ மறி பரசு - மான் மழு.
§ மதலை - மரக்கலம். || புளினம் - மணலின்றிற் சூழப்பட்ட மேடு.

சரக்குஞ்சம் புடைக்கும்பொன்
துகிற்றந் தரிக்குந் தன்
சடத்தும்*பண் பிலுக்குஞ்சம் பளமாதர்
சலித்தும்பின் சிரித்துங்கொண்
டழைத்துங்கண் பசப்பும்பெண்
தனத்துன்பந் தவிப்புண்டிங் குழல்வேனோ
சுரர்ச்சங்கந் துதித்தந்தஞ்
செழித்தின்பங் களித்துண்பன்
சுகத்துய்ந்தின் பலர்ச்சிந்துஞ் சுகராரைத்
துவைத்தும்பந் தடித்துஞ்சங்
கொலித்துங்குன் றிடித்தும்பண்
சுகித்துங்கண் களிப்புங்கொண் டிடும்வேலா
சிரப்பண்புங் கரப்பண்புங்
கடப்பந்தொங் கலிற்பண்புஞ்
சிவப்பண்புந் தவப்பண்புந் தருவோனே
தினைத்தொந்தங் குறப்பெண்பண்
சகிப்பெண்கொங் கையிற்றஞ்சுஞ்
செழிக்குஞ்செந் திலிற்றங்கும் பெருமாளே. (எ)

---

25. கருப்பந்தங் கிரத்தம்பொங்
†கரைப்புண்கொண் டிருக்கும்பெண்
களைக்கண்டங் கவர்ப்பின்சென் றவரோடே
கலப்புண்டுஞ் ‡சிறுப்புண்டுந்
துவக்குண்டும் பிணக்குண்டுங்
கலிப்புண்டுஞ் சலிப்புண்டுந் தடுமாறிச்
செருத்தண்டந் தரித்தண்டம்
புகத்தண்டந் தகற்கென்றுந்
திகைத்தந்தின் செகத்§தஞ்சுங் கொடுமாயும்
தியக்கங்கண் டுயக்கொண்டென்
பிறப்பங்கஞ் சிறப்பங்கஞ்
சிதைத்துன்றன் பதத்தின்பந் தருவாயே

*பண்பிலுக்கல்-தகுதியாகிய வல்துக்களைக்கொண்டு ஆடம்பரமாக அலங்கரித்தல் †அரைப்புண் அல்குல். ‡சிறுப்பு-இகழ்வு. §அஞ்சு-பஞ்சேந்திரியம்.

அருக்கன்சஞ் சரிக்குந்தெண்
டிரைக்கண்சென் றரக்கன்பண்
பனைத்தும்பொன் றிடக்கன்றுங் கதிர்வேலா
அணிச்சங்கங் கொழிக்குந்தண்
டலைப்பண்பெண் டிசைக்குங்கொந்
தளிக்குஞ்செந் திலிற்றங்கும் குமரேசா
புரக்குஞ்சங் கரிக்குஞ்சங்
கரர்க்குஞ்சங் கரர்க்கின்பம்
புதுக்குங்கங் கையட்குந்தஞ் சுதனாய்
புனக்குன்றந் தினைக்குஞ்செந்
தினைப்பைம்பொன் குறக்கொம்பின்
புறத்தண்கொங் கையிற்றுஞ்சும் பெருமாளே. (௮)

---

26. குழைக்குஞ்சந் தனச்செங்குங்
குமத்தில்சந் தநற்குன்றங்
குலுக்கும்பைங் கொடிக்கென்றிங் கியலாலே
குழைக்குஞ்செங் குமிழ்க்குஞ்சென்
றுரைக்குஞ்செங் கயற்கண்கொண்
டழைக்கும்பண் டழைக்குஞ் * சிங் கியராலே
உழைக்குஞ்சங் கடத்துன்பஞ்
சகப்பண்டஞ் சுகித்துண்டுண்
டுடற்பிண்டம் பருத்தின்றிங் குழலாதே
உதிக்குஞ்செங் கதிர்ச்சிந்தும்
† ப்ரபைக்கொன்றுஞ் சிவக்குந்தண்
டுயர்க்குங்கிண் கிணிச்செம்பஞ் சடிசேராய்
தழைக்குங்கொன் றையைச்செம்பொன்
சடைக்கண்டங் கியைத்தங்குந்
தரத்தஞ்செம் ‡ புயத்தோன்றும் பெருமானார்
தனிப்பங்கின் புறத்தின்செம்
பரத்தின்பங் கயத்தின்சஞ்
சரிக்குஞ்சங் கரிக்கென்றும் பெருவாழ்வே

* சிங்கியர்-விஷத்தன்மையுள்ளபெண்கள். † ப்ரபை-ஒளி ‡ புயம்-கை.

கழைக்குங்*குஞ் சரக்கொம்புங்
†கலைக்கொம்புங் களித்தென்றுங்
கயற்கண்பண் பளிக்குந்திண் புயவேளே
கறுக்குங்கொண் டலிற்பொங்குங்
கடற்சங்கங் கொழிக்குஞ்செந்
திலிற்கொண்டன் பினிற்றங்கும் பெருமாளே. (௬)

27. ‡மனத்தின்பங் கெனத்தங்கைம்
புலத்தென்றன் குணத்தஞ்சித்
த்ரியத்தம்பந் தனைச்சிந்தும் படிகாலன்
மலர்ச்செங்கண் கனற்பொங்குந்
திறத்தின்தண் டெடுத்தண்டங்
கிழித்தின்றிங் குறத்§தங்கும் பலவோரும்
எனக்கென்றிங் குனக்கென்றங்
கினத்தின்கண் கணக்கென்றன்
றிளைத்தன்புங் கொடுத்தங்கங் கழியாமுன்
இசைக்குஞ்செந் தமிழ்க்கொண்டங்
கிரக்கும்புன் றொழிற்பங்கங்
கெடத்துன்பங் கழித்தின்பந் தருவாயே
கனைக்குந்தண் கடற்சங்கங்
கரத்தின்கண் தரித்||தெங்குங்
கலக்கஞ்சிந் திடக்கண்டுஞ் சிடுமாலும்
¶கதித்தொண்பங் கயத்தன்பண்
பனைத்துங்குன் றிடச்சந்தங்
களிக்குஞ்சம் புவுக்குஞ்செம் பொருளீவாய்
தினைக்குன்றந் தனிற்றங்குஞ்
சிறுப்பெண்குங் குமக்கும்பத்
திருச்செம்பொன் புயத்தென்றும் புனைவோனே

*குஞ்சரக்கொம்பு-தெய்வயானை. †கலைக்கொம்பு-வள்ளி ‡மனத்தின் பங்கெனத் தங்கு ஐம்புலன்-மனம் செல்வதற்கு வேறு வேறு வாயில்களாகப் பொருந்தியிருக்கும் ஐம்புலன். §தங்கும் பலவோர் - தத்துவக்கூட்டம். ||எங்கும் கலக்கம் சிந்திடக் கண்துஞ்சிடுமால்-சர்வான்மாக்களும் கலக்கமற்றுச் சுகமுற அனந்தல்கொள்ளுந் திருமால். ¶கதித்தொண்பங்கயத்தன் - கதித்த + ஒண் + பங்கயத்தன் - தாமரையிலுதித்த பிரமதேவன்.

செழிக்குங்குண் டகழ்ச்சங்கங்
கொழிக்குஞ்சந் தனத்தின்பைம்
பொழிற்றண்செந் திலிற்றங்கும் பெருமாளே (ய)

---

தனத்தந்தத் தனத்தந்தத்
தனத்தந்தத் தனத்தந்தத்
தனத்தந்தத் தனத்தந்தத் —தனதான.

28. பருத்தந்தத் தினைத்தந்திட்
டிருக்குங்கச் சடர்த்துந்திப்
பருக்கும்பொற் ப்ரபைக்குன்றத் தனமானார்
பரிக்குந்துச் சரக்கொன்றத்
தினைத்தங்குற் பலப்பண்ணைப்
பரக்குஞ்சக் கரத்தின்சத் தியைநேரும்
துரைச்செங்கட் கடைக்கொன்றிப்
பெருத்தன்பற் றிளைத்தங்குத்
துணிக்கும்புத் தியைச்சங்கித் தறியேனே
துணைச்செம்பொற் பதத்தின்புற்
றெனக்கென்றப் பொருட்டங்கத்
தொடுக்குஞ்சொற் றமிழ்த்தந்திப் படியாள்வாய்
*தருத்தங்கப் பொலத்தண்டத்
தினைக்கொண்டச் சுரக்கஞ்சத்
தடத்துன்பத் தினைத்தந்திட் டெதிர்சூரன்
சமர்க்கஞ்சிப் படித்துஞ்சக்
கதிர்த்துங்கத் தயிற்கொண்டத்
தலத்தும்பர்ப் பதிக்கன்புற் றருள்வோனே
திருக்கஞ்சத் தனைக்கண்டித்
துறக் †கங்குட் டிவிட்டுஞ்சற்
சிவற்கன்றப் பொருட்கொஞ்சிப் பகர்வோனே
செயத்துங்கக் கொடைத்துங்கத்
திருத்தங்கித் ‡தரிக்கும்பொற்
றிருச்செந்திற் பதிக்கந்தப் பெருமாளே. (கக)

---

*தரு தங்கு அ பொலத்து அண்டத்தினை-கற்பக விருக்ஷம் தங்கிய அந்தப் பொன்னுலகத்தை. † கம்-தலை ‡ தரிக்கும்-நிலைத்திருக்கும்.

தனதன தந்தாத் தந்தத்
தனதன தந்தாத் தந்தத்
தனதன தந்தாத் தந்தத் தனதான.

29. *அவனிபெ றுந்தோட் டம்பொற்
குழையட ரம்பாற் புண்பட்
டரிவையர் தம்பாற் கொங்கைக் கிடையேசென்

றணைதரு பண்டாட் டங்கற்
றருகிய கொண்டாட் டப்பொற்
றழிதரு திண்டாட் டஞ்சற் றொழியாதே

பவமற நெஞ்சாற் சிந்தித்
திலகுக டம்பார்த் தண்டைப்
பதயுக ளம்போற் றுங்கொற் றமுநாளும்

பதறிய அங்காப் பும்பத்
தியுமறி வும்போற் சங்கைப்
படுதுயர் கண்பார்த் தன்புற் றருளாயோ

தவநெறி குன்றுப் பண்பிற்
றறவின ருந்தோற் றஞ்சத்
தனி†மல ரஞ்சார்ப் புங்கத் தமராடித்

தமிழினி‡தென்காற் கன்றிற்
றிரிதரு கஞ்சாக் கன்றைத்
தழலெழ வென்றூர்க் கன்றற் புதமாகச்

சிவவடி வங்காட் டுஞ்சற்
குருபர தென்பாற் சங்கத்
திரள்மணி சிந்தாச் சிந்தாக் கரைமோதும்

தினகர திண்டேர்ச் சண்டப்
பரியிட றுங்கோட்§டிஞ்சித்
திருவளர் செந்தூர்க் கந்தப் பெருமாளே. (௬௨)

அவனி பெறும தோட்டு அம்பொற்குழை - பூமியை விலைமதிக்கும்படியான தோடாகிய அழகிய பொற்குழை. † மலர் அஞ்சு ஆர் புங்கத்து - ஐந்துவகைப் புஷ்ப பாணத்தால். ‡ தென்காற்கன்றின் - இளந்தென்றற் காற்றில்; கஞ்சாக்கன்று - மன்மதன். § இஞ்சி - திருமதில்.

30. தொடரிய மன்போற் றங்கப்
படையவ ளாந்தோட் டுங்*துட்
டரையிள குந்தோட் கொங்கைக் கிடுமாயத்
துகில்விழ வுஞ்சேர்த் தங்கத்
துளைவிர குஞ்சூழ்த் தண்டித்
துயர்வினை யுஞ்சூட் டின்பத் தொடுபாயற்
கிடைகொடு சென்றீட் டும்பொற்
†பணியரை மென்றேற் றங்கற்
றனையென இன்‡றோட் டென்§றற் கிடுமாதர்க்
கினிமையி லொன்றாய்ச் சென்றுட்
படுமன முன்றாட் கன்புற்
றியலிசை கொண்டேத் தென்றுட் டருவாயே
நெடிதுத வங்கூர்க் குஞ்சற்
புருடரும் நைந்தேக் கம்பெற்
றயர்வுற நின்றார்த் தங்கட் கணேயேவும்
நிகரில்ம தன்தேர்க் குன்றற்
றெரியில்வி ழுந்தேர்ப் பொன்றச்
சிறிதுநி னைந்தாட் டங்கற் றிடுவார்முன்
திடமுறு மன்பாற் சிந்தைக்
‖கறிவிட முஞ்சேர்த் தும்பர்க்
கிடர்களை யும்போர்ச் செங்கைத் திறல்வேலா
தினவரி வண்டார்த் தின்புற்
றிசைகொடு வந்தேத் திஞ்சித்
திருவளர் செந்தூர்க் கந்தப் பெருமாளே. (௧௯)

---

தந்தன தந்தனத் தந்தன தந்தனத்
தந்தன தந்தனத் தனதான.

31. சங்குபோல் மென்கழுத் தந்தவாய் தந்தபற்
சந்தமோ கின்பமுத் தெனவானில்
தங்குகார் பைங்குழற் கொங்கைநீள் தண்பொருப்
பென்றுதாழ் வொன்றறுத் துலகோரைத்

துட்டரை-துட்டர்க்கு, †பணியர்க்கு, இது உருபு மயக்கம் ‡ஓட்டென்று, ஒடென்று. §அற்கிடும்-அல்கிடும், அல்புகுருக்கிடும் ‖அறிவிடம்-தெளிவு-

துங்கவேள் செங்கைபொற் கொண்டல்நீ என்றுசொற்
கொண்டு *தாய் நின்றுரைத் துழலாதே
துன்பநோய் சிந்தநற் கந்தவே ளென்றுனைத்
தொண்டினு †லொன்றுரைக் கருள்வாயே
வெங்கண் ‡வ்யா ளங்கொதித் தெங்கும்§வே மென்றெடுத்
துண்டுமே லண்டருக் கமுதாக
விண்டநா தன்திருக் கொண்டல்பா கன்செருக்
குண்டுபே ரம்பலத் தினிலாடி
‖செங்கண்மால் பங்கயக் கண்பெறு தந்தரத்
தின்கணு டுந்திறற் கதிராழித்
திங்கள்வா ழுஞ்சடைத் தம்பிரா னன்புறச்
செந்தில்வாழ் செந்தமிழ்ப் பெருமாளே. (௧௪)

32 பங்கமே வும்பிறப் பந்தகா ரந்தனிற்
பந்தபா சந்தனிற் றடுமாறி
பஞ்சபா ணம்படப் புண்படா வஞ்சகப்
பண்பிலா டம்பரப் பொதுமாதர்
தங்களா லிங்கனக் கொங்கையா கம்படச்
சங்கைமால் கொண்டிளைத் தயராதே
தண்டைசூழ் கிண்கிணிப் புண்டரீ கந்தனைத்
தந்துநீ அன்புவைத் தருள்வாயே
அங்கைவேல் கொண்டரக் கன்ப்ரதா பங்கெடுத்
தண்டவே தண்டமுட் படவேதான்
அஞ்சவே திண்டிறற் ¶கொண்டலா கண்டலற்
கண்டலோ கங்கொடுத் தருள்வோனே. (௧௫)

* தாய்-தாவி. † ஒன்று-பொருந்திய ‡ வியாளம்-பாம்பு. இங்கே அதனிடத்திருந்து எழுந்த விஷத்தைக்குறித்தது. § வேம் - வேகச்செய்யு மென்று ‖ செங்கண்மால் கண்பெறுது நாடும் தம்பிரான் எனமுடிக்க. ¶ கொண்டல் ஆகண்டலற்கு-மேகவாகனனாகிய தேவேந்திரனுக்கு.

திங்களார் கொன்றைமத் தந்துளாய் துன்றுபொற்
செஞ்*சடா பஞ்சரத் துறுதோகை
சிந்தையேய் தென்றிசைத் தென்றல்வீ சும்பொழிற்
செந்தில்வாழ் செந்தமிழ்ப் பெருமாளே. (கரு)

---

தந்தா னந்தா தந்தா னந்தா
தந்தா னந்தத் தனதான.

33. தண்டே னுண்டே வண்டார் வஞ்சேர்
† தண்டார் மஞ்சுக் குழல்மாதர்
தம்பா லன்பார் நெஞ்சே கொண்டே
சம்பா வஞ்சொற் றடிநாயேன்
மண் ‡ டோ யந்தீ மென்கால் விண்டோய்
வண்கா யம்பொய்க் குடில்வேறாய்
வன்கா னம்போ யண்டா முன்பே
வந்தே நின்பொற் கழல்தாராய்
கொண்டா டும்பேர் கொண்டா டுஞ்சூர்
கொன்றாய் வென்றிக் குமரேசா
கொங்கார் வண்டார் பண்பா டுஞ்சீர்
குன்றா மன்றற் கிரியோனே
§ கண்டா கும்பா லுண்டா யண்டார்
கண்டா ‖ கந்தப் புயவேளே
¶ கந்தா மைந்தா ரந்தோள் மைந்தா
கந்தா செந்திற் பெருமாளே

சடாபஞ்சரத்துறுதோகை-சடையாகிய கூட்டிலிருக்கும் கங்கை ‡தண்டார்மஞ்சுக்குழல்-குளிர்ந்த மாலையணிந்த மேகம்போன்ற குழல்.

†தோயம்-நீர் § கண்டாகும்பால்-கற்கண்டுபோலும் இனிமையுள்ள பால், அதாவது உமாதேவியார் பொற்கிண்ணத்துக் கறந்து ஊட்டிய திருமுலைப்பால். ‖ கந்தப் புயம்-வாசனை தங்கிய புயம்.

¶ கந்து ஆம் மைந்து ஆர் அம் தோள் மைந்தா-கம்பத்துக்குச் சமானமாகி வலிமை பொருந்திய அழகிய தோள்களையுடைய பராக்கிரமனே.

34. வெங்கா ளம்பா ணஞ்சேல் கண்பால்
மென்பா கஞ்சொற் குயில்*மாலை
மென்கே சந்தா னென்றே கொண்டார்
மென்றோ ளொன்றப் பொருள்தேடி.
வங்கா ளஞ்†சோ னஞ்சீ னம்போய்
வன்பே துன்பப் படலாமோ
‡மைந்தா ருந்தோள் மைந்தா தந்தா
வந்தே இந்தப் பொழுதாள்வாய்
கொங்கார் பைந்தே னுண்டே வண்டார்
குன்றாள் கொங்கைக் கினியோனே
குன்றா டுஞ்சூழ் §அம்பே ழுஞ்சூ
ரும்போய் மங்கப் பொருகோபா
கங்கா ளஞ்சேர் மொய்ம்பா ரன்பார்
கன்றே உம்பர்க் கொருநாதா
‖கம்பூர் சிந்தார் தென்பால் வந்தாய்
கந்தா செந்திற் பெருமானே. (௩௪)

---

தனதான தந்த தனதான தந்த
தனதான தந்த தனதான.

35. விதிபோலு ¶முந்த விழியாலு மிந்து
நுதலாலு $மொன்றி இளைஞோர்தம்
விரிவான சிந்தை உருவாகி நொந்து
விறல்வேறு சிந்தை வினையாலே
இதமாகி இன்ப மதுபோத உண்டுள்
இனிதாகு மென்று மொழிமாதர்
இருளாய துன்ப மருள்மாய பந்தம்
எனையீர்வ தென்றும் ஒழியாதோ
மதிசூடி அண்டர் பதிவாழ மண்டி
வருமால முண்டு விடையேறி

---

*மாலை - இருள். †சோனம் - சோனகம். ‡மைந்து - வலிமை. §அம்பேழும் சூரும்-எழுகடலும் சூரும். ‖கம்பு ஊர் சிந்து-சங்குகள் தவழும் சமுத்திரம். ¶உந்தவிழி-உந்து + அ + விழி; அந்த என்பதின் குறுக்கம். $'ஒன்றி...உருவமும் நொந்து...மொழிமாதர்' எனக் கூட்டுக.

மறவாத சிந்தை அடியார்கள் பங்கில்
வருதேவ சம்பு தருபாலா
அதிமாய மொன்றி வருசூரர் பொன்ற
அயில்வேல்கொ டன்று பொரும்வீரா
அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
அலைவாயு கந்த பெருமாளே. (௩௫)

36. விறல்மார னைந்து மலர்வாளி சிந்த
மிகவானி லிந்து வெயில்காய
மிதவாடை வந்து தழல்போல வொன்ற
வினைமாதர் தந்தம் வசைகூறக்
குறவாணர் குன்றி லுறைபேதை கொண்ட
கொடிதான துன்ப மயல்தீரக்
குளிர்மாலை யின்க ணணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ
மறிமானு கந்த இறையோன்ம கிழ்ந்து
வழிபாடு தந்த மதியாளா
* மலைமாவு சிந்த அலைவேலை அஞ்ச
வடிவே லெறிந்த அதிதீரா
அறிவால றிந்து னிருதாளி றைஞ்சும்
அடியாரி டைஞ்சல் களைவோனே
அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
அலைவாயு கந்த பெருமாளே. (௩௬)

---

தந்ததன தான தனதத் தான
தந்ததன தான தனதத் தான
தந்ததன தான தனதத் தான தனதான.

37. சந்தனச வாது நிறைகற் பூர
குங்குமப டீர விரைகத் தூரி
தண்புழுக லாவு களபச் சீத வெகுவாசச்

* மலை மாவுசிந்த - கிரௌஞ்சகிரியும் (சூரனுடைய) மாமரமுஞ் சிந்த.

சண்பக * கலார வகுளத் தாம
வம்புதுகி லார வயிரக் கோவை
தங்கியக ரோ தரவித் தார பரிதான

மந்தரம தான தனமிக் காசை
கொண்டுபொருள் தேடி மதிகிட் டோ
வஞ்சகவி சார இதயப் பூவை அனையார்கள்

† வந்தியிடு மாய விரகப் பார்வை
அம்பிலுளம் வாடு மறிவற் றேனை
வந்தடிமை யாள இனிஎப் போது நினைவாயே

இந்த்ரபுரி காவல் முதன்மைக் கார
சம்ப்ரமம யூர துரகக் கார
என்றுமக லாத இளமைக் கார குறமாதின்

இன்பஅனு போக சரசக் கார
வந்தஅசு ரேசர் கலகக் கார
எங்களுமை சேயெ னருமைக் கார மிகுபாவின்

செந்தமிழ்சொல் நாலு கவிதைக் கார
குன்றெறியும் வேலின் வலிமைக் கார
செஞ்சொலடி யார்கள் எளிமைக் கார எழில்மேவும்

‡ திங்கள்முடி நாதர் சமயக் கார
மந்த்ரஉப தேச மகிமைக் கார
செந்தில்நகர்வாழும் அருமைத்தேவர் பெருமாளே(௨௰)

---

தந்ததன தான தானத் தான
தந்ததன தான தானத் தான
தந்ததன தான தானத் தான தனதான.

38. முந்துதமிழ் மாலை கோடிக் கோடி
சந்தமொடு நீடு பாடிப் பாடி
§ முஞ்சர்மனை வாசல் தேடித் தேடி உழலாதே

---

* கலாரம்-கல்லாரம், செங்குவளை. † வந்தியிடும்-வருத்தத்தை உண்பெண்ணும். ‡ திங்கள் முடிநாதர் சமயம்-சைவசமயம் § முஞ்சர்-சாவார்.

முந்தைவினை யேவ ராமற் போக
மங்கையர்கள் காதல் தூரத் தேக
முந்தடிமை யேனை யாளத் தானு முனைமீதே
திந்திதிமி தோதி தீதித் திதி
தந்ததன தான தானத் தான
செஞ்சணகு சேகு தாளத் தோடு நடமாடும்
செஞ்சிறிய கால்வி சாலத்தோகை
துங்கஅனு கூல பார்வைத் தீர
செம்பொன்மயில் மீதி லேயெப் போது வருவாயே
அந்தண்மறை வேள்வி காவற் கார
செந்தமிழ்சொல் பாவின் மாலைக் கார
அண்டருப கார சேவற் கார முடிமேலே
அஞ்சலிசெய் வோர்கள் நேயக் கார
குன்றுருவ ஏவும் வேலைக் கார
அந்தம்வெகு வான ரூபக் கார எழிலான
*சிந்துரமின் மேவு போகக் கார
விந்தைகுற மாது வேளைக் கார
செஞ்சொலடி யார்கள் வாரக் கார எதிரான
செஞ்†சமரை மாயு மாயக் கார
துங்கரண சூர சூறைக் கார
செந்தில்நகர் வாழு மான்மைக் கார பெருமாளே. (௨௧)

---

தந்தத் தனனத் தந்தத் தனனத்
தந்தத் தனனத் தனதான.

39. ‡அம்பொத் தவிழித் தந்தக் கலகத்
தஞ்சிக் கமலக் கணையாலே
அன்றிற் குமனற் றென்றற் குமிளைத்
தந்திப் பொழுதிற் பிறையாலே

---

*சிந்துரமின் - தெய்வானை. † சமரைமாயும் - யுத்தத்தில் (பகைவரை) மாய்க்கும். ‡ அம்பு ஒத்த விழித் தந்தக் கலகத்து-அம்பு போன்ற கண்களாலும், தந்தம்போன்ற (தனங்களாலும்) விளைந்த கலகத்தினுக்கு.

போது கங்கையி னீர்சொ ரிந்திரு
பாத பங்கய மேவ ணங்கிய
பூசை யுஞ்சில வேபு ரிந்திட — அருள்வாயே

தீயி சைந்தெழ வேயி லங்கையில்
ராவ ணன்சிர மேய ரிந் * தவர்
சேனை யுஞ்செல மாள வென்றவன் — மருகோனே

தேச மெங்கணு மேபு ரந்திடு
சூர்ம டிந்திட வேலின் வென்றவ
தேவர் தம்பதி யாள அன்புசெய் — திடுவோனே

ஆயி சுந்தரி நீலி பிங்கலை
போக அந்தரி சூலி குண்டலி
ஆதி அம்பிகை வேத தந்திரி — இடமாகும்

ஆல முண்டா ரறி றைஞ்சவொர்
போத கந்தனை யேயு கந்தருள்
ஆவி னன்குடி மீதி லங்கிய — பெருமாளே. (ரு)

---

தனதான தந்தனத் தனதான.

106. † அபகார நிந்தைபட் — டுழலாதே
அறியாத வஞ்சரைக் — குறியாதே
உபதேச மந்திரப் — பொருளாலே
உனைநானி னைந்தருட் — பெறுவேனோ
இபமாமு கன்றனக் — கிளையோனே
இமவான்ம டந்தையுத் — தமிபாலா
செபமாலை தந்தசற் — குருநாதா
திருவாவி னன்குடிப் — பெருமாளே. (சு)

---

* அவர்-இஃது ஒருமையிற் பன்மை † 'அபசாரநிந்தை' என்றும்பாடம்.

தனனா தனந்தனத் தனனா தனந்தனத்
தனனா தனந்தனத் தனதான.

107. கனமா யெழுந்துவெற் பெனவே உயர்ந்துகற்
புர * மா ரணந்துளிர்த் திடுமோனார்
கனிவா யுகந்துசிக் கெனவே அணைந்துகைப்
பொருளே இழந்துவிட் டயர்வாயே
மனமே தளர்ந்துவிக் கலுமே எழுந்துமட்
டறவே உலர்ந்துசுக் கதுபோல
வசமே அழிந்துவுக் கிடுநோய் துறந்துலைப்
பெனவே நினைந்துனைப் புகழ்வேனோ
புனவேடர் தந்தபொற் குறமாது இன்புறப்
புணர்காதல் கொண்டவக் கிழவோனே
புனலேழு மங்கவெற் பொடுசூர் சிரங்கள்பொட்
டெழவே லெறிந்தவுக் கிரவீரா
தினமேவு குங்குமப் புயவாச கிண்கிணிச்
சிறுகீத செம்பதத் தருளாளா
சிவலோக சங்கரிக் கிறைபால † பைங்கயத்
திருவா வினன்குடிப் பெருமாளே. (எ)

---

தானனந் தனனத் தானனந் தனனத்
தானனந் தனனத் தனதான.

108. காரணிந் தவரைப் பாரடர்ந் துவினைக்
காதல்நெஞ் சயரத் தடுமாறிக்
கானரம் புதிரத் தோல்வழும் புறுபொய்க்
காயமொன் றுபொறுத் தடியேனும்
தாரணங் குகுழற் கூரணிந் தவிழிச்
சாயமொன் றுநுதற் கொடியார்தம்

மாரணம் மந்திர வித்தையால் மாரணத்தைஉண்டுபண்ணஎழும்கொலைக் கருவி, இங்கு இது கொங்கையைக்குறித்தது. † பைங்கயம்-அழகியகுளம்.

தாள்பணிந் தவர்பொற் றோள்விரும் பிமிகத்
தாழ்வடைந் தாலயத் சுகுமோதா
சூரனங் கம்விழத் தேவர்நின் றுதொழத்
தோயமுஞ் சுவறப் பொரும்வேல
தூய்மைகொண் டகுறத் தோகைநின் றபுனச்
சூழ்பெருங் கிரியிற் றிரிவோனே
ஆரணன் கருடக் கேதனன் தொழமுற்
றாலமுண் டவருக் குரியோனே
ஆலையும் பழனச் சோலையும் புடைசுற்
றாவினன் குடியிற் பெருமானே. (அ

தனதான தந்ததன தனதான தந்ததன
தனதான தந்ததன தனதான.

109. சிவனார்ம னங்குளிர உபதேச மந்த்ரமிரு
செவிமீதி லும்பகர்செய் குருநா
சிவகாம சுந்தரிதன் வரபால கந்தநின
செயலேவி ரும்பியுளம் நினையாம
அவமாயை கொண்டுலகில் விருதாவ லைந்துழலும்
அடியேனை அஞ்சலென வரவேணு
அறிவாக மும்பெருக இடரான துந்தொலைய
அருள்ஞான இன்பமது புரிவாயே
*நவநீத முந்திருடி உரலோடெ ஒன்றுமரி
ரகுராமர் சிந்தைமகிழ் மருகோனே
நவலோக முங்கைதொழு நிசதேவ லங்கிருத
நலமான விஞ்சைகரு விளைகோனே
†தெய்வயானை அங்குறமின் மணவாள சம்ப்ரமுறு
திரள்வீர மிஞ்சுகதிர் வடிவேல
திருவாவி னன்குடியில் வருவேள்ச வுந்தரிக
செகமேல்மெய் கண்டவிறல் பெருமாளே (சு

*நவநீதம்-வெண்ணெய். †தெய்வயானை - தேவயானையம்மை.

தனதத்தன தானதந்தன தனதத்தன தானதந்தன
தனதத்தன தானதந்தன தனதான.

110. பகர்தற்கரி தானசெந்தமி ழிசையிற் சில பாடலன்பொடு
பயிலப்பல காவியங்களை உணராதே
பவளத்தினை வீழியின்கனி அதனைப்பொரு வாய்மடந்தையர்
பசலைத்தன மேபெறும்படி விரகாலே
சகரக்கடல் சூழுமம்புவி மிசையிப்படி யேதிரிந்துழல்
சருகொத்துள மேயயர்ந்துடல் மெலியாமுன்
தகதித்திமி தாகிணங்கிண எனவுற்றெழு தோகையம்பரி
தனிலற்புத மாகவந்தருள் புரிவாயே
நுகர்வித்தக மாகுமென்றுமை மொழிபிற்பொழி பாலையுண்டிடு
நுவல்மெய்ப்புள பாலனென்றிடும் இளையோனே
நுதிவைத்தக ராமலைந்திடு களிறுக்கரு ளேபுரிந்திட
நொடியிற்பரி வாகவந்தவன் மருகோனே
* அகரப்பொரு ளாதியொன்றிடு முதலக்கர மானதின்பொருள்
அரனுக்கினி தாமொழிந்திடு குருநாதா
அமரர்க்கிறை யேவணங்கிய பழநித்திரு வாவினன்குடி
அதனிற்குடி யாயிருந்தருள் பெருமாளே. (௰)

தனதன தனத்த தந்த தனதன தனத்த தந்த
தனதன தனத்த தந்த தனதான.

111. களபமு லையைத்தி றந்து தவளந கையைக்கொ ணர்ந்து
கயலொடு பகைத்த கண்கள் குழைதாவக்
கரியகு ழலைப்ப கிர்ந்து மலர்சொரு கு† கொப்ப விழ்ந்து
கடியிரு ளுடுக்கு லங்கள் எனவீழ
முழுமதி எனச்சி றந்த நகைமுக மினுக்கி இன்ப
முருகிதழ் சிவப்ப நின்று விலைகூறி
முதலுள தலைப்பு குந்து அழகுது கிலைத்தி றந்து
முடுகுமவ ருக்கி ரங்கி மெலிவேனோ

* அகரப் பொருளாதி ஒன்றிடு முதலக்காரம் - அகார உகார மகாராதிகள் அடங்கிய பிரணவமந்திரம். † கொப்பு - கோப்பு, குறுக்கல்விகாரம்.

இளமதி கடுக்கை தும்பை அரவணி பவர்க் கிசைந்த
இனியபொ ருளைப்ப கர்ந்த குருநாதா
இபமுக வனுக்கு கந்த இளையவ மருக்க டம்ப
எனதுத லையிற்ப தங்கள் அருள்வோனே
*குழகென எடுத்து கந்த உமைமுலை பிடித்த ருந்து
குமர†சி வவெற்பமர்ந்த குகவேலா
குடிலொடு மிகச்செ றிந்த இதணுள புனத்தி ருந்த
குறவர்ம களைப்பு ணர்ந்த பெருமாளே. (கக)

தனனத் தனதன தனதன தந்தத்
தனனத் தனதன தனதன தந்தத்
தனனத் தனதன தனதன தந்தத் தனதான.

112. புடவிக் கணிதுகி லெனவள ரந்தக்
‡கடலெட் டிறை§யறல் குடிமுநி எண்கட்
புநிதச் சததள நிலைகொள்சு யம்புச் சதுர்வேதன்
புரமெட் டெரியெழ விழிகனல் சிந்திக்
கடினத்தொடுசில சிறுநகை கொண்டற்
புதகர்த் தரகர பரசிவ னிந்தத் தனிமூவர்
இடசித் தமுநிறை தெளிவுற வும்பொற்
செவியுட் பிரணவ ரகசிய மன்புற்
றிடவுற் பனமொழி உரைசெய்கு மந்தைக் குருநாதா
எதிருற் றசுரர்கள் படைகொடு சண்டைக்
கிடம்வைத் திடவவர் குலமுழு தும்பட்
டிடவுக் கிரமொடு வெகுளிகள் பொங்கக் கிரியாவும்
பொடிபட் டுதிரவும் விரிவுறு வண்டச்
சுவர்விட் டதிரவு முகடுகி ழிந்தப்
புறமப் பரவெளி கிடுகிடெ னுஞ்சத் தமுமாகப்
||பொருதுற் கையினுள அயில்கொ முண்கக்
குருதிப் புனலெழு கடலினு மிஞ்சப்
புரவிக் கனமயில் நடவிடும் விந்தைக் குமரேசா

குழகென-குழகனென. † சிவவெற்பு என்பது பழநி. ‡கடல்எட்டு-எட்டுத்திக்கிலுமுள்ள கடல். § அறல்-நீர் || பொருதுற்கை-பொருது உன் கை.

படியிற் பெருமித தகவுயர் செம்பொற்
கிரியைத் தனிவலம் வரவா னந்தப்
*பலனைக் கரிமுகன் வசமரு ளும்பொற் பதனாலே
பரன்வெட் கிடவுள மிகவும்வெ குண்டக்
கனியைத் தரவிலை யெனவருள் செந்திற்
†பழநிச் சிவகிரி தனிலுறை கந்தப் பெருமாளே (கஉ)

---

தான தனனதன தான தனனதன
தான தனனதன தான தனனதன
தான தனனதன தான தனனதன தனதான.

113. கோல மதிவதனம் வேர்வு தரவளக
பாரம் நெகிழவிழி வேல்கள் சுழலநுவல்
கோவை இதழ்வெளிற வாய்மை பதறியிள முகையான
கோக னகவுபய மேரு முலை யசைய
நூலி னிடைதுவள ஊரு பறவைவகை
கூற இனியகள மோல மிடவளைகள் கரமீதே
காலி னணிகனக நூபு ரமுமொழிகள்
ஓல மிடவதிக போக மதுமருவு
காலை வெகுசரச லீலை அளவுசெய மடமானார்
காதல் புரியவநு போக நதியினிடை
வீழ்கி னுமடிமை மோச மறவுனது
காமர் கழலிணைக ளானவொருசிறிது மறவேனே
ஞால முழுதுமம ரோர்கள் புரியுமிக
லாக வருமவுணர் சேர உததியிடை
நாச முறவமர்செய் வீர தரகுமர முருகோனே
நாடி ஒருகுறமின் மேவு தினைசெய்புன
மீதி லியலகல்கல் மீழ லிடைநிலவி
நாணம் வரவிரக மோது மொருசதுர புரிவேலா
மேலை அமரர்தொழு மானை முகரானை
ஓடி வலம்வருமுன் மோது திரைமகர
வேலை உலகைவல மாக வருதுரக மயில்வீரா

---

*பலன்-பழம். †அரன் கந்தனைப்பார்த்து "அப்பா பழம்நீ; நீயே பழம்" என்றதால் இத்தலத்திற்குப் பழநீ யெனப்பேர் வந்ததென்ப.

வீறு: * கலிசைவரு சேவ கனதிதய
  மேவு முதல்வயல் வாவி புடைமருவு
  வீரை வருபழநி ஞான மலையில்வளர் பெருமாளே. (கரு)

தான தனனதன தான தனனதன
தான தனனதன  தனதான.

114. சிறலசடன்வினை காரன் முறைமையிலி
  தீமை புரிகபடி  பலநோயே
தேடு பரிசிகன நீதி நெறிமுறைமை
  சீர்மை சிறிதுமில  எவரோடுங்
கூறு மொழியதுபொ யான கொடுமையுள
  கோள னறிவிலியுன்  அடிபேணக்
கூள னெனினுமெனை நீயு னடியரொடு
  கூடும் வகையையருள்  புரிவாயே
மாறு படுமவுணர் மாள அவர்பொருது
  வாகை உளமவுலி  புனைவோனே
மாக முகடதிர வீசு சிறைமயிலை
  † வாசி எனவுடைய  முருகோனே
வீறு கலிசைவரு சேவ கனதிதய
  மேவு மொருபெருமை  உடையோனே
வீரை உறைகுமர தீர தரபழநி
  வேல இமையவர்கள்  பெருமாளே. (கச)

தானதன தந்த தானதன தந்த
தானதன தந்த தானதன தந்த
தானதன தந்த தானதன தந்த  தனதான.

115. சீயுதிர மெங்கு மேய்புழுநி ரப்பு
  மாயமல பிண்ட நோயிடுகு ரம்பை
  தீநரிகள் ‡ கங்கு காகமிவை தின்ப  தொழியாதே

* கலிசைவருசேவகனென்பதும், காவேரிசேவகன் என்றுபின்வரும் செய்யுட்களில் வருவனவும் கலிசையென்னும் பதியில் அக்காலத்து அதிபனாயிருந்த ஓரன்பன். † வாசிஎன-வாகனமாய். ‡கங்கு-கழுகு.

தீதுளகு ணங்க ளேபெருகு தொந்த
மாயையில்வ ளர்ந்த தோல்தசையெ லும்பு
சேரிடந ரம்பு தானிவைபொ திந்து நிலைகாணு

ஆயதுந மங்கை போகவுயி ரந்த
நாழிகையில் விஞ்ச ஊசிடுமி டும்பை
ஆகியவு டம்பு பேணிநிலை என்று மடவார்பால்

ஆசையைவி ரும்பி யேவிரக சிங்கி
தானுமிக வந்து மேவிட மயங்கும்
ஆழ்துயர் விழுந்து மாளுமெனை அன்பு புரிவாயே

மாயைவல கஞ்ச னுய்விடவெ குண்டு
பார்முழுது மண்ட கோளமுந டுங்க
வாய்பிளிறி நின்ற மேகநிகர் தன்கை அதனாலே

வாரியுற அண்டி வீறுடுமு ழங்க
நீரைநுகர் கின்ற கோபமொடெ திர்ந்த
வாரணவி ரண்டு கோடொடிய வென்ற நெடியோனும்

வேயினிசை கொண்டு கோநிரைபு ரந்து
மேயல்புரி செங்கண் மால்மருக துங்க
வேலகிர வுஞ்ச மால்வரையி டிந்து பொடியாக

வேலைவிடு கந்த காவிரிவி ளங்கு
கார்கலிசை வந்த சேவகன்வ ணங்க
வீரைநகர் வந்து வாழ்பழநி அண்டர் பெருமாளே.(கரு)

---

தானதன தானதன தானான தானதன
தானதன தானதன தானான தானதன
தானதன தானதன தானான தானதன தனதான

116. தோகைமயி லேகமல மானேயு லாசமிகு
காமதுரை யானமத வேள்பூவை யேயினிமை
தோயுமது போகசுக லீலாவி நோதமுழு துணர்தேனே

சூதனைய சீதவிள நீரான பாரமுலை
மீதணைய வாருமிதழ் தாரீரெ னானைமொழி
சோர்வதிலை யானடிமை யாவேனு மானைமிக மயலானேன்

ஆகமுற வேநகம தாலேவி டாதவடை
யாளமிட வாருமென வேமாத ரார்களுடன்
ஆசைசொலி யேயுழலு மாபாதனீதியிலி உனையோதேன்
ஆமுனது நேயவடி யாரோடு கூடுகிலன்
நீறுநுதல் மீதிடலி லாமூட னேதுமிலி
ஆயினுமி யானடிமை யீடேற வேகழல்கள்   தருவாயே
மாகமுக டோடகில பாதாள மேருவுட
னேசுழல வாரியது வேதாழி யாவமரர்
வாலிமுத லானவர்க ளோரோர்க ளாலமுது கடைநாளில்
வாருமென வேயொருவர் நோகாம லாலவிடம்
ஈசர்பெறு மாறுதவியேதேவர் யாவர்களும்
வாழவமு தேபகிரு மாமாய னரினிய   மருகோனே
மேகநிக ரானகொடை மாறுப காதிபதி
வாரிகலி மாருதக ரோபாரி மாமதன
வேள்கவிசை வாழவரு காவேரி சேவகன   துளமேவும்
வீரவதி சூரர்கிளை வேர்மாள வேபொருத
தீரகும ராகுவளை சேரோடை சூழ்கழனி
வீரைநகர் வாழ்பழநி வேலாயு தாவமரர்பெருமாளே.()

---

தானதான தனத்தந்த தானன
தானதான தனத்தந்த தானன
தானதான தனத்தந்த தானன   தனதான.

117. பாரியான கொடைக்கொண்ட லேதிரு
வாழ்விசால தொடைத்திண்பு யாவெழு
பாருமேரு புகழ்க்கொண்ட நாயக   அபிராம
பாவலோர்கள் கிளைக்கென்றும் வாழ்வருள்
சீலஞால விளக்கின்ப சீவக
பாகசாத னகத்துங்க மாதன   எனவோதிச்
சீரதாக எடுத்தொன்று மாகவி
பாடினுமி ரக்கஞ்செ யாதுரை
சீறுவார்க டையிற்சென் றுதாமயர்   வுறவீணே

சேயபாவ கையைக் கொண்டு போயறி
யாமலேக மிறிற்சிந் து வார்சிலர்
சேயனூர்ம னதிற்சிந்தி யாரு குறலாமோ
ஆருநீர்மை மடுக்கண்க ராநெடு
வாயினேர்ப டவுற்றன் று மூலமெ
னூரவார மதத்தந்தி தானுய அருள்மாயன்
ஆதிநார ணனற்சங்க பாணியன்
ஒதுவார்க ளுளத்தன்பன் மாதவன்
ஆனநான்மு கனற்றந்தை சீதரன் மருகோனே
வீரசேவ கவுத்தண்ட தேவகு
மாரஆறி ருபொற்செங்கை நாயக
வீசுதோகை மயிற்றுங்க வாகனம் உடையோனே
வீறுகாவி ரியுட்கொண்ட சேகர
னனசேவ கனற்சிந்தை மேவிய
வீரைவாழ்ப ழநித்துங்க வானவர் பெருமாளே. (கள)

---

தானா தனதன தானா தனதன
தானா தனதன தனதானா

18. ஆதா ளிகள்புரி கோலா கலவிழி
யாலே அமுதெனு மொழியாலே
ஆள்சீ ரிளநகை யாலே துடியிடை
யாலே மணமலி குழலாலே
சூதா ரிளமுலை யாலே அழகிய
தோடா ரிருகுழை அதனாலே
சோரா மயல்தரு மானா ருறவிடர்
சூழா வகையருள் புரிவாயே
போதா ரிருகழல் சூழா ததுதொழில்
பூணா தெதிருற மதியாதே
போரா டியவதி சூரா பொறுபொறு
போகா தெனவடு திறலோனே
வேதா உடனெடு மாலா னவனறி
யாதா ரருளிய குமரேசா
வீரா புரிவரு கோவே பழநியுள்
வேலா இமையவர் பெருமாளே. (கஅ)

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனதான.

119. இருசெப் பெனவெற் பெனவட் டமுமொத்
திளகிப் புளகித் திடுமாதர்

*இடையைச் சுமையைப் பெறுதற் குறவுற்
றிறுகக் குறுகிக் குழல்சோரத்

தருமெய்ச் சுவையுற் றிதழைப் பருகித்
தழுவிக் கடிசுற் றணைமீதே

† சருவிச் சருவிக் குனகித் தனகித்
தவமற் றுழலக் கடவேனோ

அரிபுத் திரசித் தசனுக் கருமைக்
குரிமைத் திருமைத் துனவேளே

அடல்குக் குடநற் கொடிபெற் றெதிருற்
றசுரக் கிளையைப் பொருவோனே

பரிவுற் றரனுக் கருணற் பொருளைப்
பயனுற் றறியப் பகர்வோனே

‡பவனப் புவனச் செறிவுற் றுயர்மெய்ப்
பழநிக் குமரப் பெருமாளே. (௧௧)

---

120. தகைமைத் தனியிற் பகைகற் றுறுகைத்
தநுமுட் டவளைப் பவனாலே

தரளத் திரளிற் புரளக் கரளத்
தமரத் திமிரக் கடலாலே

§உகைமுத் தமிகுத் தெனப் பகல்புக்
கொளிமட் குமிகைப் பொழுதாலே

---

* இடையைச் சுமை - இடை அழகிய. † சருவி - சரசஞ்செய்து. ‡ பவனப் புவனம் - வாயுமண்டலம். § உகைமுத்த மிகுத்த தெனப் பகல் புக்கு ஒழிமட்கும் மிகைப் பொழுதாலே-எறிந்த முத்துக்கள் மிக்கதுபோல் இரவியும் வந்து ஒளிமழுங்க வருத்தத்தைத் தரத்தக்க இருட்காலத்தாலே. முத்துக்களின் ஒளிபோல் இரவிஒளிமட்கத்தக்க இருள் எனவே அதன்வலி கூறியவாறும். இது "கொள்ளிக்கும்விள்ளாத கூரிருள்" என்றதுபோலும்.

உரையற் றுணர்வற் றுயிரெய்த் தகொடிக்
குனநற் *பிணையற் றரவேணும்

†திகைபத் துமுகக் கமலத் தனைமுற்
சிறைபட் டபகைத் திறல்வீரா

திகழ்கற் பகமிட் டவனக் ‡ககனத்
திருவுக் குருகிக் குழைமார்பா

பகலக் கிரணப் §பரணச் சடிலப்
பரமற் கொருசொற் பகர்வோனே

பவனப் புவனச் செறிவுற் றுயர்மெய்ப்
பழநிக் குமரப் பெருமாளே.(உ0)

121. அணிபட் டணுகித் தணிபட் டமனத்
தவர்விட் டவிழிக் கணையாலும்

அரிசுற் றுகழைத் தவர்பெற் றவளத்
தவன்விட் டமலர்க் கணையாலும்

பிணிபட் டுணர்வற் றவமுற் றியமற்
பெறுமக் குணமுற் றுயிர்மாளும்

பிறவிக் கடல்விட் டுயர்நற் கதியைப்
பெறுதற் கருளைத் தரவேணும்

‖கணிநற் சொருபத் தையெடுத் துமலைக்
கனியைக் ¶கணியுற் றிடுவோனே

கமலத் தயனைப் ரணவத் துரையைக்
கருதிச் சிறைவைத் திடுவோனே

$பணியப் பணியப் பரமர்ப் பரவப்
பரிவுற் றொருசொற் பகர்வோனே

பவளத் தவளக் கனகப் புரிசைப்
பழநிக் குமரப் பெருமாளே. (உக)

---

பிணையல் - மாலை. † திகைபத்து முக-திகைபத்தும் உக - பத்துத் திக்கும் கலங்க. ‡ ககனத்திரு - தெய்வயானை. § பரணம் - பாரம். ‖ கணி - வேங்கைமரம். ¶ கணி-கண்ணி - கருதி. $ பணி அப்பு - அணி அப்பரமர்.

122. புடைசெப் பெனமுத் தணிகச் சறவுட்
பொருமிக் கலசத் திணையாய
புளகக் களபக் கெருவத் தனமெய்ப்
புணரத் தலையிட் டமரேசெய்
அடைவிற் றினமுற் றவசப் படுமெற்
கறிவிற் பதடிக் கவமான
அசடற் குயர்வொப் பதில்நற் க்ருபையுற்
றடிமைக் கொருசொற் புகல்வாயே
குடமொத் த*கடக் கரடக் †கலுழிக்
குணமெய்க் களிறுக் கிளையோனே
குடிபுக் கிடமிட் டசுரப் படையைக்
குறுகித் தகரப் பொரும்வேலா
படலைச் செறிநற் கதலிக் குலையிற்
பழமுற் றொழுகப் புனல்சேர்நீள்
பழனக் கரையிற் கழைமுத் தகுநற்
பழநிக் குமரப் பெருமாளே. (௨௨)

---

தனன தனன தனன தனன தனன தனன தனதான.

123. கரிய பெரிய எருமை கடவு கடிய கொடிய திரிசூலன்
கறுவி இறுகு கயிறொ டுயிர்கள் கழிய முடுகி எழுகாலம்
திரியு நரியு மெரியு முரிமை தெரிய விரவி அணுகாதே
செறிவு மறிவு முறவு மனைய திகழு மடிகள் தரவேணும்
பரிய ‡வரையி னரிவை மருவு பரம ரருளு முருகோனே
பழன முழவர் கொழுவி லெழுது பழைய பழநி அமர்வோனே
அரிய மயனும் வெருவ உருவ அரிய கிரியை எறிவோனே
அயிலு மயிலு மறமு நிறமு மழகு முடைய பெருமாளே.

---

124. தமரு மமரு மனையு மினிய தனமு மரசும் அயலாகத்
§தறுகண் மறலி முறுகு கயிறு தலையை வளைய எறியாதே

---

* கடக்கரடம்-மதயானை. † கலுழிக்குணம் - ஆறுபோன்ற கருணைக் குணம். ‡ வரையினரிவை - பார்வதிதேவி. § தறுகண் - அஞ்சாமை.

கமல விமல மரகத மணி கனக மருவும் இருபாதம்
கருத அருளி எனது தனிமை கழிய அறிவு தரவேணும்
குமர *சமர முருக பரம குலவு பழநி மலையோனே
†கொடிய பகடு முடிய முடுகு குறவர் சிறுமி மணவாளா
அமர ரிடரும் அவுண ருடலும் அழிய அமர்செய் தருள்வோனே
அறமு நிறமும் அயிலு மயிலும் அழகு முடைய பெருமாளே.

125. ‡திமிர உததி யனைய நரக செனன மதனில் விடுவாயேல்
செவிடு குருடு வடிவு குறைவு சிறிது மிடியும் அணுகாதே
அமரர் வடிவு மதிக குலமு மறிவு நிலையும் வரவேநின்
அருள தருளி எனையு மனதொ டடிமை கொளவும் வரவேணும்
சமர முகவெ லசுரர் தமது தலைக ளுருள மிகவேநீள்
சலதி அலற நெடிய பதலை நகர அயிலை விடுவோனே
§வெமர வணையி லினிது துயிலும் விழிகள் நளினன் மருகோனே
மிடறு கரியர் குமர பழநி விரவும் அமரர் பெருமாளே. (௨௫)

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான.

126. தகர நறுமலர் பொதுளிய குழலியர்
கலக கெருவித விழிவலை படவிதி
தலையி லெழுதியு மனைவயி னுறவிடு அதனாலே
தனயர் அனைதமர் மனைவியர் சினெகிதர்
சுரபி விரவிய வகையென நினைவுறு
||தவன சலதியின் முழுகியெ இடர்படு துயர்தீர
அகர முதலுள பொருளினை அருளிட
இருகை குவிசெய்து ளுருகிட உருகியெ
அரகரெனவல னிடமுற எழிலுன திருபாதம்

* 'சமர புரியின் முருக' என்றும் பாடம். †கொடிய பகடு-மதயானை.
‡ திமிரவுததி-இருட்கடல். § வெம் அரவணை. ||தவனம்-ஆசை.

அருள அருளுடன் மருளற இருளறு
கிரண அயில்கொடு *குருகணி கொடியொடு
அழகு பெறமர கதமயில் மிசைவர இசைவாயே

†சிகர குடையினி ‡னிரைவர இசைதெரி
சதுரன் விதுரனில் வருபவன் அளையது
திருடி அடிபடு சிறியவ னெடியவன் மதுசூதன்

திகிரி வளைகதை வசிதனு உடையவன்
எழிலி வடிவினன் §அரவுபொன் முடிமிசை
திமித திமிதிமி எனநட மிடுமரி மருகோனே

பகர புகர்முக மதகரி ||உழைதரு
வனிதை வெருவமுன் வர அருள் புரிகுக
பரம குருபர இமகிரி தருமயில் புதல்வோனே

பலவின் முதுபழம் விழைவுசெய் தொழுகிய
நறவு நிறைவயல் கமுகடர் பொழில்திகழ்
பழநி மலைவரு புரவல அமரர்கள் பெருமாளே. (உசு)

127. முருகு செறிகுழல் முகிலென ¶நகில்நறு
முளரி முகையென இயலென மயிலென
முறுவல் $தளவென நடைமட அனமென இருபார்வை

முளரி மடலென இடைதுடி யதுவென
அதர மிலவென அடியிணை மலரென
மொழியு மமுதென முகமெழில் மதியென மடமாதர்

உருவ மினையன எனவரு முருவக
உரைசெய் தவர்தரு கலவியி னிலவிய
உலையின் மெழுகென உருகிய கசடனை யொழியாமல்

உவகை தருகலை பலவுணர் பிறவியின்
உவரி தனிலுறு மவலனை அசடனை
உனது பரிபுர கழலிணை பெறவருள் புரிவாயே

*குருகு-கோழி. †சிகரம்-கோவர்த்தனம். ‡நிரை-பசு. §அரவு-காளிங்கன்.
||உழைதரு வனிதை-வள்ளியம்மை. ¶நகில்-தனம். $தளவு-முல்லையரும்பு.

அரவ மலிகடல் விடமமு துடனெழ
அரிய யனு*நரை இபன்முத லனைவரும்
அபய மிகவென அதையயி லிமையவன் அருள்பாலா

அமர்செய் நிசிச ருடலவை துணிபட
அவனி இடிபட அலைகடல் பொடிபட
அமரர் சிறைவிட அடலயில் நொடியினில் விடுவோனே

பரவு புனமிசை உறைதரு குறமகள்
பணைகொ ளணிமுலை முழுகுப ணிருபுய
பணில சரவணை தனில்முள ரியில்வரு முருகோனே

பரம குருபர எனுமுறை பரசொடு
பரவி அடியவர் துதிசெய மதிதவழ்
பழநி மலைதனி லினிதுறை அமரர்கள் பெருமாளே.(௨௭)

---

தனத்ததனத் தனத்ததனத்
தனத்ததனத் தனத்ததனத்
தனத்ததனத் தனத்ததனத் தனதான.

28. கனத்திறுகிப் பெருத்திளகிப்
பணைத்துமணத் திதத்துமுகக்
கறுப்புமிகுத் தடர்த்துநிகர்த் தலமேராய்

கவட்டையுமெத் தடக்கிமதர்த்
தறக்கெருவித் திதத்திடுநற்
கலைச்சவுரித் தலைக்குலவிக் களிகூரும்

தனத்தியர்கட் கிதத்துமிகுத்
தனற்குண்மெழுக் கெனப்புவியிற்
றவித்திழிசொற் பவக்கடலுற் றயர்வாலே

சலித்தவெறித் துடக்குமனத்
திடக்கனெனச் சிரிக்கமயற்
சலத்தின்வசைக் கிணக்கமுறக் கடவேனோ

---

ஐரையிபன்-வெள்ளையானையை வாகனமாயுடைய தேவேந்திரன்.

புனத்தின்மலைக் குறத்தியுயர்த்
திருக்குதனக் குடத்தினைப்
புயத்தணைதற் கருத்தையுடைக் குகவீரா

பொருப்பரசர்க் கிரக்கமொடுற்
றுறச்சடிலத் தவச்சிவனிற்
*புலச்சிதனக் கிதத்தையிருத் திடுநாதா

சினத்தெதிர்துட் டரக்கர்தமைத்
திகைத்துவிழக் கணப்பொழுதிற்
சிதைத்திடுநற் கதிர்க்கைபடைத் துடையோனே

செருக்கொடுநற் றவக்கமலத்
தயற்குமரிக் கருட்புரிசைத்
திருப்பழநிக் கிரிக்குமரப் பெருமாளே. (௨அ)

129. குறித்தமணிப் பணித்துகிலைத்
திருத்தியுடுத் திருட்குழலைக்
குலைத்துமுடித் திலைச்சுருளைப் பிளவோடே

†குதட்டியதுப் புதட்டைமடித்
‡தயிர்ப்பயிலிட் டழைத்துமருட்
கொடுத்துணர்வைக் கெடுத்துநகக் குறியாலே

பொறித்ததனத் தணைத்துமனச்
செருக்கினர்கைப் பொருட்கவரப்
புணர்ச்சிதனிற் பிணிப்படுவித் திடுமாதர்

புலத்தலையிற் செலுத்துமனப்
ப்ரமத்தையறப் ப்ரசித்தமுறப்
புரித்தருளித் திருக்கழலைத் தருவாயே

பறித்ததலைத் திருட்டமணக்
குருக்களசட் டுருக்களிடைப்
பழுக்களுகக் கழுக்கள்புகத் திருநீறு

* புலச்சி-ஞானமயமானவள், † குதட்டிய, துப்ப, உதட்டை எனப் பிரித்துப்பொருள்கொள்க. ‡ அயிர்ப்பயிலிட்டு மயங்கும்படி அழகு காட்டி.

பரப்பிய *தத் திருப்பதிபுக்
கனற்புனலிற் கனத்தசொலைப்
பதித்தெழுதிப் † புகட்டதிறற் கவிராச

செறித்தசடைச் ‡ சசித்தரியத்
தகப்பன் §மதித் துகப்பனெனச்
||சிறக்கவெழுத் தருட்கருணைப் பெருவாழ்வே

திகழ்ப்படுசெய்ப் பதிக்குளெனைத்
தடுத்தடிமைப் படுத்தவருட்
டிருப்பழநிக் கிரிக்குமரப் பெருமாளே. (உகூ)

---

தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன தனதான.

130\. கலவியி லிச்சித் திரங்கி நின்றிரு
கனதனம் விற்கச் சமைந்த மங்கையர்
கயல்கள்சி வப்பப் பரிந்து நண்பொடும் இன்பமூறிக்

கனியித ழுற்றுற் றருந்தி அங்குறும்
அவச மிகுத்துப் பொருந்தி இன்புறு
கலகம் விளைத்துக் கலந்து மண்டணை ¶அங்கமீதே

குலவிய நற்கைத் தலங்கொ டங்கணை
கொடியிடை மெத்தத் துவண்டு தண்புயல்
குழலள கக்கட் டவிழ்ந்து பண்டையில் அங்கம்வேறாய்க்

குறிதரு வட்டத் தடர்ந்த சிந்துர
முகதல முத்துப் பொலிந்தி லங்கிடு
கொடியம யற்செய்ப் பெருந்த டந்தனில் மங்கலாமோ

---

*தத் திருப்பதி-அந்தத் திருப்பதி-மதுரை †புகட்ட-புகவிட்ட என்பதன் தொகை ‡ சசித்தரி சந்திரனைச் சடாபாரத்தி லணிந்திருக்கின்ற. § மதித்து, உகப்பன், என, என்று பிரித்துக் கொள்க || சிறக்க எழுத்து அருள்-சிறப்புறும்படி பிரணவத்தை உபதேசஞ்செய்த ¶அங்கம்-கட்டில்.

இலகிய சித்ரப் புனந்த னிந்துறை
குறமகள் கச்சுக் கிடந்த கொங்கையின்
இனிதுறு பத்மப் பதம்ப ணிந்தருள் கந்தவேளே

எழுகடல் வற்றப் பெருங்கொ டுங்கிரி
இடிபட மிக்கப் ரசண்டம் விண்டுறும்
* இகலர்ப தைக்கத் தடிந்தி லங்கிய செங்கைவேலா

பலவித நற்கற் படர்ந்த சுந்தரி
பயில்தரு வெற்புத் தருஞ்செ ழுங்கொடி
பணைமுலை மெத்தப் பொதிந்து பண்புறு கின்றபாலா

பலதிசை மெச்சத் தெரிந்த செந்தமிழ்
பகரென இச்சித் துகந்து கொண்டருள்
பழநியில்வெற்பிற் றிகழ்ந்து நின்றருள் தம்பிரானே. ()

---

131. முகிலள கத்திற் கமழ்ந்த வண்பரி
மளவலர் துற்றக் கலந்தி டந்தரு
முகிழ்துதி தைத்துத் துயர்ந்த மங்கையர் அங்கமீதே

முகம்வெயர் வுற்றுப் பரந்து செங்கயல்
விழியிணை செக்கச் சிவந்து குங்கும
ம்ருகமத மத்தத் தனங்க ளின்மிசை எங்குமேவி

உகவுயி ரொத்துப் புயங்க ளின்புற
உறவினை உற்றுத் திரண்டு கொங்கள
வுறுமணை உற்றுத் திரங்கு மஞ்சமில் ஒன்றிமேவி

ஒளிதிகழ் பத்மக் கரங்க ளின்புறம்
உறவளை யொக்கக் கலின்க லென்கவும்
உயர்மய லுற்றுற் றிரங்கு மன்பதொ ழிந்திடாதோ

செகமுழு தொக்கப் பயந்த சங்கரி
அடியவர் சித்தத் துறைந்த சம்ப்ரம
சிவனொரு பக்கத் துறைந்த மங்கைசு மங்கைநீடு

இகலர் - பகைவர்.

திகழ்வன பச்சைப் பசங்கி* அம்பண
கரதலி கச்சுற் றிலங்கு கொங்கையள்
திருவரு ணற்பொற் பரந்தி டும்பரை அண்டமீதே
பகலிர வற்றிட் டுயர்ந்த அம்பிகை
திரிபுர முற்றிட் டிரண்டொ டொன்றலர்
பரிவுற வொக்கச் செயும்ப ரம்ப்ரமி அன்புகூரும்
பதிவ்ரதை மிக்கச் சிறந்தெ ரிந்தருள்
பகிரதி வெற்பிற் பிறந்த பெண்தரு
பழநியில் வெற்பிற் றிகழ்ந்து நின்றருள் தம்பிரானே

---

தனனதன தான தந்த தனனதன தான தந்த
தனனதன தான தந்த தனதான.

132. அவனிதனி லேபி றந்து மதலையென வே† தவழ்ந்து
அழகுபெற வேந டந்து இளைஞோனாய்
அருமழலை யேமி குந்து குதலைமொழி யேபு கன்று
அதிவிதம தாய்வ ளர்ந்து பதினாறாய்
சிவகலைக ளாக மங்கள் மிகவுமறை யோது மன்பர்
திருவடிக ளேநி னைந்து துதியாமல்
தெரிவையர்க ளாசை மிஞ்சி வெகுகவலை யாயு ழன்று
திரியுமடி யேனை உன்றன் அடிசேராய்
மவுனவுப தேச சம்பு மதியறுகு வேணி தும்பை
மணிமுடியின் மீத ணிந்த மகதேவா
மனமகிழ வேய ணைந்து ஒருபுறம தாக வந்த
மலைமகள்கு மார துங்க வடிவேலா
பவனிவர வேயு கந்து மயிலின்மிசை யேதி கழ்ந்து
படியதிர வேந டந்த கழல்வீரா
பரமபத மேசெ றிந்த முருகனென வேயு கந்து
பழநிமலை மேல மர்ந்த பெருமாளே. (௩௨)

அம்பணம்-ஒருவகை யாழ். †தவழ்ந்து-அழகு. "உயிர்வரினுக்குறள் மெய்விட்டோடும்" என்றபடி தவழ்ந்தழகு எனப்புணராது உகரம்நின்று இயல்பாயிற்று. இந்நூலிற் பல இடங்களில்இவ்வாறு வருவதுகாணலாம்.

133. கருவினுரு வாகி வந்து வயதளவி லேவ ளர்ந்து
கலைகள் பல வேதெ ரிந்து மதனாலே
கரியகுழல் மாதர் தங்கள் அடிசுவடு மார்பு தைந்து
கவலைபெரி தாகி நொந்து மிகவாடி
அரகரசி வாய வென்று தினமுநினை யாமல் நின்று
அறுசமய நீதி ஒன்றும் அறியாமல்
அசனமிடு வார்கள் தங்கள் மனைகள் தலை வாசல்நின்று
அநுதினமும் நாணமின்றி அழிவேனோ
உரகபட மேல்வ ளர்ந்த பெரியபெரு மாள ரங்கர்
உலகளவு மால்ம கிழ்ந்த மருகோனே
உபயகுல தீப துங்க விருதுகவி ராஜ சிங்க
உறை*புகலி யூரி லன்று வருவோனே
பரவைமனை மீதி லன்று ஒருபொழுது தூது சென்ற
பரமனரு ளால்வ ளர்ந்த குமரேசா
பகையசுரர் சேனை கொன்று அமரர்சிறை மீள வென்று
பழநிமலை மீதில் நின்ற பெருமாளே. (௩௩)

---

தனதனன தந்த தந்த தனதனன தந்த தந்த
தனதனன தந்த தந்த தனதான.

134. மருமலரி னன்று ரந்து விடவினைய ருந்தி அந்த
†மதியொடுபி றந்து முன்பெய் வதையாலே
வகைதனைம றந்தெ ழுந்து முலைதனைய ருந்தி அந்த
மதலையென வந்து குன்றின் வடிவாகி
இருமயல்கொ டுந்து வண்டு பொதுவையர கம்பு குந்து
இரவுபகல் கொண்டொ டுங்கி அசடாகும்
இருவினைபொ திந்த இந்த ஜனனமர ணந்து றந்துன்
இணையடிவ ணங்க என்று பெறுவேனோ
திருவொடுபெ யர்ந்தி ருண்ட வனமிசைந டந்தி லங்கை
திகழெரியி டுங்கு ரங்கை ‡நெகிழாத

---

*புகலியூர்—சீர்காழி. †மதியொடு-மதிபோல. ‡நெகிழாத-நெகிழவிடாத.

திடமுளமு குந்தர் கஞ்சன் வரவிடுமெல் வஞ்ச கங்கள்
செறிவுடன றிந்து வென்ற பொறியாளர்
பரிவொடும கிழ்ந்தி றைஞ்சு மருதிடைத வழ்ந்து நின்ற
பரமபத நண்ப ரன்பின் மருகோனே
பதுமமிசை வண்ட லம்பு கணைபலவி ளங்கு துங்க
பழநிமலை வந்த மர்ந்த பெருமாளே. (௩௪)

---

தனனதன தனன தந்த தனனதன தனன தந்த
தனனதன தனன தந்த தனதான.

135. விரைமருவு மலர ணிந்த கரியபுரி குழல்ச ரிந்து
விழவதன மதிவி ளங்க அதிமோக
விழிபுரள முலைகு லுங்க மொழிகுழற அணைபு குந்து
விரகமயல் புரியு மின்ப மடவார்பால்
இரவுபக லணுகி நெஞ்ச மறவழிய உருகு மந்த
இருளகல உனது தண்டை அணிபாதம்
எனதுதலை மிசைய ணிந்து அழுதழுது னருள்விரும்பி
இனியபுகழ் தனைவி ளம்ப அருள்தாராய்
அரவில்விழி துயில்மு குந்த னலர்கமல மலர்ம டந்தை
அழகினொடு தழுவு கொண்டல் மருகோனே
அடலசுர ருடல்பி ளந்து நிணமதனில் முழுகி அண்ட
அமரர்சிறை விடுதி ரண்ட வடிவேலா
பரவைவரு விடம ருந்து மிடறுடைய கடவுள் கங்கை
படர்சடையர் விடைய ரன்பர் உளமேவும்
பரமரரு ளியக டம்ப முருகவறு முகவ கந்த
பழநிமலை தனில மர்ந்த பெருமாளே. (௩௫)

---

தனன்தன தானன தானதன தந்த
தனன்தன தானன தானதன தந்த
தனனதன தானன தானதன தந்த தனதான.

136. இருகனக மாமேரு வோகளப துங்க
கடகடின பாடீர வாரமுத கும்ப
மிணைசொலிள நீரோக ராசலவி ரண்டு குவடோயோ

இலகுமல ரேவாளி யாகியவ னங்கன்
அணிமகுட மோதானெ னுமிகவ ளர்ந்த
இளமுலைமி னார்மோக மாயையில்வி ழுந்து தணியாமல்

பெருகியொரு காசேகொ டாதவரை யைந்து
தருவைநிக ரேயாக வேயெதிர்பு கழ்ந்து
பெரியதமி ழேபாடி நாடொறுமி ரந்து நிலைகாணுப்

பிணியினக மேயான பாழுடலை நம்பி
உயிரையவ மாய்நாடி யேபவ நிரம்பு
பிறவிதனி லேபோக மீளவு முழன்று திரிவேனோ

கருணையுமை மாதேவி காரணிய நந்த
சயனகளி கூராய சோதரி * பு ரந்த
கடவுளுடன் வாதாடு காளிமலை மங்கை அருள்பாலா

† கருடனுடன் வீறுன ‡ கேதனம்வி ளங்கு
மதிலினொடு மாமாட மேடைகள்து லங்கு
கலிசைவரு காவேரி சேவகனொ டன்பு புரிவோனே

பரவையிடை யே § பாத காசுரர்வி ழுந்து
கதறியிட வேபாக சாதனனு நெஞ்சு
|| பலிதமென வேயேக வேமயிலில் வந்த குமரேசா

பலமலர்க ளேதூவி யாரணந வின்று
பரவியிமை யோர்சூழ நாடொறுமி சைந்து
பழநிமலை மீதோர்ப ராபரனி றைஞ்சு பெருமாளே ()

---

தனதனன தானந்த தத்ததன தானதன
தனதனன தானந்த தத்ததன தானதன
தனதனன தானந்த தத்ததன தானதன தனதான.

137\. சுருதிமுடி மோனஞ்சொல் சிற்பரம ஞானசிவ
சமயவடி வாய்வந்த அத்துவித மானபர
சுடரொளிய தாய்நின்ற நிட்களசொ ரூபமுதலொருவாழ்வே

---

* புர அந்தக் கடவுள் என்பது புராந்த கடவுள் என்றாயிற்று. † கருடக்கொடி, ‡ வீரக்கொடி. § பாதகாசுரர்-அசுரர் || பலிதம் - அநுகூலம்.

துரியநிலை யேகண்ட முத்தரித யாகமல
மதனில்வினை யாநின்ற அற்புதசு போதசுக
சுயபடிக மாவின்ப பத்மபத மேவடைய உணராதே

கருவிலுரு வேதங்கு சுக்கிலநி தானவளி
பொருமவதி லேகொண்ட முக்குணவி பாகநிலை
கருதவறி யாவஞ்ச கக்கபட மூடியுடல் வினைதானே

கலகமிட வேபொங்கு குப்பைமல வாழ்வுநிச
மெனவுழலு மாயஞ்செ னித்தகுகை யேயுறுதி
கரு*தசுழ மாமிந்த மட்டைதனையாளவுன தருள்தாராய்

ஒருநியம மேவிண்ட சட்சமய வேதவடி
முடிநடுவு மாயண்ட முட்டைவெளி யாகியுயிர்
உடலுணர்வதாயெங்கு†முற்பனமதாகவமருளவோனே

‡உததரிச மாமின்ப புத்தமிர்த போகசுகம்
உதவுமம லாநந்த சத்திகர §மேவுணர
உருபிரண மாமந்த்ர கர்த்தவிய மாகவரு குருநாதா

பருதிகதி ரேகொஞ்ச நற்சரண நூபுரம
தசையநிறை பேரண்ட மொக்கநட மாடுகன
பதகெருவிதாதுங்கவெற்றிமயிலேறுமொருதிறலோனே

பணியுமடி யார்சிந்தை மெய்ப்பொருள தாகநவில்
சரவணப வாவொன்று ‖வற்கரமு மாகிவளர்
பழநிமலை மேனின்ற சுப்ரமணி யாவமரர் பெருமாளே.

---

தனன தனதனன தனன தனதனன
தனன தனதனன தனதான.

138. கடலை பொரியவரை பலக னிதழைநுகர்
கடின குடவுதர விபரீத

---

* அசுழம் - நாய், † உற்பனம் - தோற்றம் ‡ உததரிசம்-ஜலத்தோற்றம் §மேவு உணர் அ உருபிரணமா மந்த்ரம்-பொருந்திய அறிவுருவமாகிய அந்தப் பிரணவ மந்த்ரம் ‖வற்கரமுமாகி-வன்மையும் ஒளியும் உடையதாகி.

கரட தடமுமத நளின சிறுநயன
* கரிணி முகவரது துணைவோனே
வடவ ரையின்முகடு அதிர ஒருநொடியில்
வலம்வ ருமரகத மயில்வீரா
மகப திதருசுதை குறமி னொடிருவரு
மருவு சரசவித மணவாளா
அடல சுரர்கள்குல முழுது மடியவுயர்
அமரர் சிறையைவிட எழில்மீறும்
அருண கிரணவொளி ஒளிரு மயிலைவிடும்
அரக ரசரவண பவலோலா
படல † உடுபதியை இதழி அணிசடில
பசுப திவரநதி அழகான
பழநி மலையருள்செய் மழலை மொழிமதலை
பழநி மலையில்வரு பெருமாளே. (௩அ)

---

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனதான.

139. குழல டவிமுகில் பொழில் ‡வி ரவிநுதல்
குமுத வதரமு றுவலாரம்
குழைம கரம் §வளை மொழிகு யிலமுது
குயமு ளரிமுகை கிரிசூது
விழிக யலயில்ப கழி ‖வ ருணிகரு
விளைகு வளைவிடம் எனநாயேன்
மிகவ ரிவையரை அவநெ றிகள்சொலி
வெறிது ளம்விதனம் உறலாமோ
$ கழல்ப ணியவினை ¶ கழல்ப ணியையணி
கழல்ப ணியவருள் மயில்வீரா

---

*கரிணி-யானை. உடுபதியையிதழி - சந்திரனையும் அழகான கொன்றையும் † விரவில் - வீர வில். ‡வளை-வள்ளை, ஓர்விரத்தண்டு, § வருணி-கடல். ‖கழல் பணிய வினை-பண்ணிய வினை கழல. $கழல் பணியையணி-வீரக்கழலையும், தண்டை, சிலம்பு முதலிய ஆபரணங்களையு மணிந்த.

கமலை திருமரு க*மலை நிருதரு
கமலை துளைசெய்த கதிர்வேலா

†பழனி ‡மலைவரு பழநி மலைதரு
பழநி மலைமுரு கவிசாகா

§பரவு பரவைகொல் ||பரவை வணவரி
பரவு மிமையவர் பெருமாளே.(௩௯)

---

தனன தானன தானு தானு
தனன தானன தானு தானு
தனன தானன தானு தானு தனதான.

140\. கலக வாள்விழி வேலோ சேலோ
மதுர வாய்மொழி தேனோ பாலோ
கரிய வார்குழல் காரோ காரோ துவரோவாய்

¶களமு நீள்கமு கோதோள் வேயோ
உதர மானது மாலோ பாயோ
களப வார்முலை மேரோ கோடோ இடைதானும்

இலைய தோமலர் வேதா ஆனோன்
எழுதி னனிலை யோவாய்பேசீர்
இதென மோனமி னுரே பாரீர் எனமாதர்

இருகண் மாயையி லேழும் காதே
உனது காவிய நூலா ராய்வேன்
இடர்ப டாதருள் வாழ்வே நீயே தரவேணும்

அலைவி லாதுயர் வானோ ரானோர்
நிலைமை யேகுறி வேலா சீலா
அடியர் பாலரு ளீவாய் ✕நீபார் மணிமார்பா

---

* மலை நிருத ருக-எதிர்த்த அசுரர் உதிர்ந்துபோக. † பழனி-கனியை யொத்தவள். ‡ மலைவரு பழநிமலை-மலையரசனுக்குப் புத்திரியாக வந்த பழயனிர்மலி, § பரவு பரவை கொல்-பரவிய சமுத்திரத்தின் மீது பாண மெய்து வருத்திய. || பரவை வண அரி-கடல் வண்ணத்தையுடைய விட்டுணு.பரவு-மெச்சும் ¶களம்-கழுத்து. ✕ நீபார்-நீபம்ஆர்·நீபம்-கடப்பமலர்.

அழகு லாவுவி சாகா வாகார்
இபமி னள்மகிழ் கேள்வா *தாழ்வார்
அயிலு லாவிய சீலா கோலா கலவீரா

†வலவை கேள்வர்பி னானாய் காணார்
குறவர் மாதும ணாளா நாளார்
‡வனச மேல்வரு தேவா மூவா மயில்வாழ்வே

மதுர ஞானவி நோதா நாதா
பழநி மேவுகு மாரா தீரா
மயூர வாகன தேவா வானோர் பெருமாளே. (சய)

---

தந்தத் தனதன தனனா தனனா
தந்தத் தனதன தனனா தனனா
தந்தத் தனதன தனனா தனனா தனதான.

141. கொந்துத் தருகுழ லிருளோ புயலோ
விந்தைத் திருநுதல் சிலையோ பிறையோ
கொஞ்சிப்பயில்மொழி அமிர்தோ கனியோ விழிவேலோ

கொங்கைக் குடமிரு கரியோ கிரியோ
வஞ்சிக் கொடியிடை துடியோ பிடியோ
கொங்குற் றுய§ரது அரவோ ரதமோ எனுமாதர்

திந்தித் திமிதிமி திமிதா திமிதோ
தந்தித் திரிகிட கிடதா எனவே
சிந்திப் படிபயில் நடமா டியபா விகள்பாலே

சிந்தைத் தயவுகள் புரிவே னுனையே
வந்தித் தருள் தரு மிருசே வடியே
சிந்தித் திடமிகு மறையா கியசீர் அருள்வாயே

வெந்திப் புடன்வரு மவுணா சனையே
துண்டித் திடுமொரு கதிர்வே லுடையாய்
வென்றிக் கொருமலை எனவாழ் மலைமே தவவாழ்வே

---

*தாழ்வார்-நீட்சிபொருந்திய. †வலவைகேள்வர்-விநாயகர். ‡வனசம்-சரவணப் பொய்கையிலுள்ள பதுமப்புாயல், §அது-இடக்கரடக்கல்.

விஞ்சைக் குடையவர் தொழுவே வருவாய்
கஞ்சத் தயனுடன் அமரே சனுமே
விந்தைப்பணிவிடை புரிபோதவர்மேல் அருள்கூர்வாய்

தொந்திக் கணபதி மகிழ்சோ தரனே
செங்கட் கருமுகில் மருகா குகனே
சொந்தக் குறமகள் கணவா திறல்சே கதிர்காமா

*சொம்பிற் பலவள முதிர்சோ லைகள்சூழ்
இஞ்சித் திருமதில் புடைசூ ழருள்சேர்
துங்கப் பழநியில் முருகா இமையோர் பெருமாளே. ()

---

தனதன தத்தா தத்தன
தனதன தத்தா தத்தன
தனதன தத்தா தத்தன தனதான.

142. அகல்வினை உட்சார் சட்சம
யிகளொடு†வெட்கா தட்கிடும்
அறிவிலி வித்தா ரத்தன மலிகாரம்

அகில்கமழ் கத்தூ ரித்தனி
அணைமிசை ‡ கைக்கா சுக்கள
வருள்பவர் நட்பே கொட்புறும் ஒருபோதன்

பகலிர விற்போ திற்பணி
பணியற விட்டா ரெட்டிய
பரமம யச்சோ திச்சிவ மயமாநின்

பழநித னிற்போ யுற்பவ
வினை § விள கட்சேர் வெட்சிகு
ரவுபயில் நற்றாள் பற்றுவ தொருநாளே

புகலிவ னப்பே றப்புகல்
மதுரைமன் வெப்பா றத்திகழ்
‖பொடிகொடு புற்பாய் சுற்றிகள் கழுவேறப்

---

* சொம்பில்-இனத்தில். †வெட்கா x தட்கிடும்-அஞ்சாது தடுத்து வாதஞ்செய்யும். ‡ கைக்காசுக்களவருள்பவர் - ஈந்த பணத்துக்குத்தப்படி பிரியங்காட்டுபவர். § விள-விள்ள, நீங்க. ‖ பொடி - திருநீறு.

பொருதசமர்த்தா குத்திர
*தாரகமு கக்கோ தைக்கிடை
புலவரில் நக்கி ரர்க்குத வியவேளே

இகல்படு கெட்டோர் பொட்டெழ
இளநகை இட்டே சுட்டருள்
எழுபுவி துய்த்தார் மைத்துனர் மதலாய்†வென்

றிடரற முப்பால் செப்பிய
கவிதையின் ‡மிக்கா ரத்தினை
எழுதி §வனத்தே எற்றிய பெருமாளே. (சஉ)

---

தனன தனனதன தந்தத்த தந்ததன
தனன தனனதன தந்தத்த தந்ததன
தனன தனனதன தந்தத்த தந்ததன தந்ததான.

143. அதல விதலமுத லந்தத்த லங்களென
அவனி எனவமரர் அண்டத்த கண்டமென
அகில சலதியென எண்டிக்குள் விண்டுவென அங்கிபானு

அமுத கதிர்களென அந்தித்த மந்த்ரமென
அறையு மறையெனவ ருந்தத்து வங்களென
அணுவி லணுவெனநி றைந்திட்டு நின்றதொரு சம்ப்ரதாயம்

உதய மெழவிருள்வி டிந்தக்க ணந்தனிலி
ருதய கமலமுகி ழுங்கட்ட விழ்ந்துணர்வில்
உணரு மநுபவம னம்பெற்றி டும்படியை வந்துநீமுன்

உதவ இயலினியல் செஞ்சொற்ப்ர பந்தமென
மதுர கவிகளில்ம னம்பற்றி ருந்துபுகழ்
உரிய அடிமையுனை அன்றிப்ர பஞ்சமதை நம்புவேனோ

ததத தததததத தந்தத்த தந்ததத
திதிதி திதிதிதிதி திந்தித்தி திந்திதிதி
தகுகு தகுதகுகு தந்தத்த தந்தகுகு திந்திதோதி

---

* தாரகமுகக் கோதை - கற்கிமுகி என்கின்ற ஓர் பூதம். † வென்று இடர்அற எனப்பிரிக்க. ‡ மிக்க ஆரத்தினை - மேலாகிய தேவாரத்தை. § வனத்தே எற்றிய - வைகைநதி ஜலத்தில் எதிரேறும்படி விட்ட.

சகக சகெகணக தந்தத்த குங்கெணக
டிடிடி டிடிடிடிடி டிண்டிட்டி டிண்டிடிடி
தகக தகதகக தந்தத்த தந்தகக என்றுதாளம்

பதலை திமிலைதுடி தம்பட்ட மும்பெருக
அகில நிசிசரர்க டுங்கக்கொ டுங்கழுகு
பரிய குடர்பழுவெ லும்பைப்பி டுங்கரண துங்ககாளி

பவுரி இடநரிபு லம்பப்ப ருந்திறகு
கவரி இடவிகலை வெண்டிச்சி * கண்டிதனில்
பழநிமலையின்மிசைவந் துற்ற இந்திரர்கள்தம்பிரானே ()

---

தனதன தானத் தான தனத்தத்
தனதன தானத் தான தனத்தத்
தனதன தானத் தான தனத்தத் தனதான.

144. † அரிசன வாடைச் சேர்வை குளித்துப்
பலவித கோலச் சேலை உடுத்திட்
டலர்குழல் கோதிக் கோதி முடித்துச் சருளோடே

அமர்பொரு காதுக் கோலை திருத்தித்
திருநுதல் நீவிப் பாளித பொட்டிட்
டகில்புழு காரச் சேறு தனத்திட் டலர்வேளின்

சுரத விநோதப் பார்வை மையிட்டுத்
தருணக லாரத் ‡ தோடைத ரித்துத்
தொழிலிடு தோளுக் கேறவ ரித்திட் டிளைஞோர்மார்

அறவினர் சேரச் சேரந கைத்துப்
பொருள் கவர் மாதர்க் காசைய ளித்தற்
றுயரற வேபொற் பாதமெ னக்குத் தருவாயே

கிரியலை வாரிச் சூரி ரத்தப்
புணரியின் மூழ்கிக் கூளிக ளிக்கக்
கிரணவை வேல்புத் தேளிர்பி ழைக்கத் தொடுவோனே

---

*சிகண்டி - மயில் † அரிசனம் மஞ்சள். ‡ தோடை-தொடை, மாலை.

கெருவித கோலப் பாரத னத்துக்
குறமகள் பாதச் சேகர சொக்கக்
கிளிதெய்வ யானைக் கேபுய வெற்பைத் தருவோனே

பரிமள நீபத் தாரொடு வெட்சித்
தொடைபுனை சேவற் * கேதன துத்திப்
பணியகல் பீடத் தோகைம யிற்பொற் பரியோனே

பனிமல ரோடைச் சேலுக ளித்துக்
ககனம ளாவிப் போய்வரு வெற்றிப்
பழநியில் வாழ்பொற் கோமள சத்திப் பெருமாளே. ()

---

தான தானன தத்தன தத்தன
தான தானன தத்தன தத்தன
தான தானன தத்தன தத்தன தனதான.

145. ஆல காலமெ னக்கொலை முற்றிய
வேல தாமென மிக்கவி ழிக்கடை
யாலு மோகம்வி ளைத்துவி தத்துடன் இளைஞோரை

ஆர வாணைமெ யிட்டும ழித்துவி
கார மோகமெ ழுப்பிய தற்குற
வான பேரைய கப்படு வித்தறி விதமாகச்

சால மாலைய ளித்தவர் கைப்பொருள்
மான வேசிலு கிட்டும ருட்டியெ
சாதி பேதம லத்தழு வித்திரி மடமாதர்

தாக போகமொ ழித்துனி னைக்கடி
யானென் † வேள்விமு கத்தவ முற்றிரு
தாளை நாளும்வ ழுத்திநி னைத்திட அருள்வாயே

வால மாமதி மத்தமெ ருக்கறு
காறு பூளைத ரித்தச டைத்திரு
வால வாயன ளித்தரு ளற்புத முருகோனே

---

* கேதனம் - கொடி. † வேள்வி - ஆராதனை.

மாய மாறெட ரக்கரை வெற்றிகொள்
வாலி மார்புதொ ளைத்திட விற்கொடு
வாளி யேவிய மற்புய னச்சுதன் மருகோனே

நாலு வேதந விற்றுமு றைப்பயில்
வீணை நாதனு ரைத்தவ னத்தட
நாடி யோடுகு றத்திதனைக்கொடு வருவோனே

நாளி கேரம் வருக்கைப ழுத்துதிர்
சோலை சூழ்பழ நிப்பதி யிற்றிரு
ஞான பூரண சத்திதரித்தருள் பெருமாளே. (சரு)

---

தத்தா தனத்தனன தத்தா தனத்தனன
தானத் தனந்தனன தானத்தனந்தனன தனதனதான.

146. இத்தா ரணிக்குள்மனு வித்தாய் முளைத்தழுது
மேவிக் கிடந்துமடி மீதிற் றவழ்ந்தடிகள்

தத்தா தனத்ததன இட்டே தெருத்தலையில்
ஓடித் திரிந்துநவ கோடிப் ரபந்தகலை

இச்சீர் பயிற்றவய தெட்டோடு மெட்டுவர
வாலக் குணங்கள் பயில் கோலப் பெதும்பையர்கள் உடலுறவாகி

இக்கார் சரத்துமத னுக்கே இளைத்துவெகு
வாகக் கலம்பவகை பாடிப் புகழ்ந்துபல

திக்கோடு திக்குவரை மட்டோடி மிக்கபொருள்
தேடிச் சுகந்தவணை மீதிற் றுயின்றுசுகம்

இட்டா தரத்துருகி வட்டார் முலைக்குளிடை
மூழ்கிக் கிடந்துமய லாகித் தளர்ந்துசில பிணியதுமூடிச்

சத்தான புத்தியது கெட்டே கிடக்கநமன்
ஓடித் தொடர்ந்துகயி றாடிக் கொளும்பொழுது

பெற்றார்கள் சுற்றியழ உற்றார்கள் மெத்தவழ
ஊருக் கடங்கலிலர் காலற் கடங்கவுயிர்

தக்கா திவர்க்குமய னிட்டான் விதிப்படியின்
ஓலைப் பழம்படியி னலிற் றிறந்ததென எடுமெனவோடி

சட்டா நவப்பறைகள் கொட்டா வரிச்சுடலை
ஏகிச் சடம்பெரிது வேகப் புடஞ்சமய
இட்டே அனற்குளெரி பட்டா ரெனத்தழுவி
நீடிற் படிந்துவிடு பாசத் தகன்றுணது
சற்போ தகப்பதும முற்றே தமிழ்க்கவிதை
பேசிப் பணிந்துருகு நேசத் தையின்றுதர இனிவரவேணும்
திக்தா திரித்திகுட தத்தா தனத்தகுத
தாகத் தனந்ததனன தானந் தனந்ததன
செச்சே செகுச்செகுகு திக்கா திகுந்தகிகு
தாதத் தசெந்திகுத தீகத் தசெந்தரிக
தித்தா கிடக்கணக டக்கா குகுக்குகுகு
தோரக் கணங்கணக கூகுக் கிணங்கிணென ஒருமயிலேறித்
*திட்டே ரதத்தசுரர் பட்டே விழப்பொருது
வேலைத் துளைந்துவரை ஏழைப் பிளந்துவரு
சித்தா பரத்தமரர் கத்தா குறத்திமுலை
மீதிற் புணர்ந்துசுக லீலைக் கடம்பமணி
சுத்தா உமைக்குமொரு முத்தாய் முளைத்தகுரு
நாதக் குழந்தையென வோடிக் கடம்பமலர் அணிதிருமார்பா
†மத்தா மதக்களிறு பிற்றா னுதிக்குக
னேதத் திலங்கையினி லாதிக் கமுண்டதொரு
முட்டா ளரக்கர்தலை இற்றே விழக்கணைக
ளேதொட் டகொண்டலுரு வாகிச் சமந்தகிக
மட்டார் மலர்க்கமல முற்றா சனத்திருவை
மார்பிற் புணர்ந்தகுர ராமற் குமான்புடைய மருமகனாகி
வற்றா மதுக்கருணை உற்றே மறைக்கலைகள்
ஓதித் தெரிந்துதமிழ் சோதித் தலங்கலணி
அத்தா பரத்தையறி வித்தாவி சுற்றுமொளி
ஆகிப் ரபந்தமணி வேல்தொட் டமைந்தபுய
வர்க்கா மருப்புழுகு முட்டா திருப்பழநி
வாழ்வுக் குகந்தடிய ராவிக்குள் நின்றுலவி வருபெருமாளே. (௬௯)

* திட்டேரதம்-திண், தேர், ரதம். † மத்தா-களிப்பையுடையவனே.

தனதனன தனதனன தானான தனதனன
தனதனன தனதனன தானான தனதனன
தனதனன தனதனன தானான தனதனன தனதான,

147. இரவியென வடவையென ஆலால விடமதென
உருவுகொடு ககனமிசை மீதேகி மதியும்வர
இரதிபதி கணைகளொரு நாலேவ விருதுகுயி லதுகூவ

எழுகடலின் முரசினிசை வேயோசை விடையின்மணி
இசைகுறுகி இருசெவியு ளூாச முறுவதென
இகல்புரிய மதன*குரு வோராத அனையர்கொடு வசைபேச

அரஹரென வனிதைபடு பாடோத அரிதரிது
அமுதமயி லதுகருதி யாரோடு மிகல்புரிவள்
அவசமுற அவசமுற ஆ†மோமல் தரவுமிக மெலிவாளே

‡அகுதியிவள் தலையில்விதி ஆனாலும் விலகரிது
அடிமைகொள உனதுபர மாருத ஒருதனிமை
அவளையணை தரவினிதி§ஞேகார பரியின்மிசை வருவாயே

||நிரைபரவி வரவரையு ளோர்சித ¶மருதினொடு
பொருசகடு உதையதுசெய் தாமாய மழைசொரிதல்
நிலைகுலைய மலைகுடைய தாவேகொள் கரகமலன் மருகோனே

நிருமலிய திரிநயனி வாள்வீச வருகுமரி
கவுரிபயி ரவியரவ பூணாரி திரிபுவனி
நிபுணமலை அரசனருள் வாழ்வான புரணவுமை அருள்பாலா

பரவைகிரி அசுரர்திரள் மாசேனை தவிடுபொடி
படவமரர் துயரகல மேலேவி அமர்பொருத
பதுமகர தலமுருக நால்வேத கரணிகர மயில்வீரா

பனிதப்ருக மதகளப சேரூர வளருமுலை
வனிதைகுற மகள்மகிழும் லீலாவி தரமதுர
பனுவல்தரு பழநிவரு கோலாக லாவமரர் பெருமாளே ()

---

* குரு - பாரம். † ஓமல் - ஊர்ப்பேச்சு. ‡ அகுதி - திக்கற்றவள். § ஓகாரம் - ஓசரம், மயில். || நிரை - பசுக்கூட்டம் ¶ மருதினொடுபொருசகடு - கம்சனுலேவப்பட்டு மருதமரமும் சக்கரமுமாய் வந்த அசுர்கள்.

தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன தனதான.

148. இலகிய களபசு கந்த வாடையின்
ம்ருகமத மதனை மிழ்ந்து பூசியெ
இலைசுருள் பிளவைய ருந்தி யேயதை இதமாகக்
கலவியி லவரவர் தங்கள் வாய்தனில்
இடுபவர் பலபல சிந்தை மாதர்கள்
*நசனையை விடுவது மெந்த நாளது பகர்வாயே
சிலைதரு குறவர்ம டந்தை நாயகி
தினைவன மதனிலு கந்தநாயகி
திரள்தன மதனில ணைந்த நாயக சிவலோகா
கொலைபுரி அசுரர்கு லங்கள் மாளவெ
†அயிலையி லதனையு கந்த நாயக
குருபர பழநியி லென்று மேவிய பெருமாளே. (சஅ)

---

தனத்தான தனதனன தனத்தான தனதனன
தனத்தான தனதனன தனதான.

149. உயிர்க்கூடு விடுமளவு முமைக்கூடி பருவுதொழில்
ஒருக்காலு நெகிழ்வதிலை எனவேசூள்
உரைத்தேமுன் மருவினரை வெறுத்தேம திரவியம
துடைத்தாய்பின் வருகுமவர் எதிரேபோய்
பயிற்பேசி இரவுபகல் அவர்க்கான ‡ பதமைபல
படப்பேசி உறுபொருள்கொள் விலைமாதர்
படப்பார வலைபடுதல் தவிர்த்தாள மணிபொருவு
பதத்தாள மயிலின்மிசை வரவேணும்
தயிர்ச்சோர னெனுமவரை வசைக் § கோவ வனிதையர்கள்
தரத்தாடல் புரியுமரி மருகோனே
தமிழ்க்காழி மருதவன மறைக்காடு திருமருகல்
தநுக்கோடி வருகுழகர் தருவாழ்வே

---

* நசனை - ஈரம், அன்பு. † அயிலயில் - கூர்மையான வேலாயுதம்.
‡ பதமை - வார்த்தைகளை, பதங்களை. § கோவவனிதையர் - கோபிகாஸ்திரீகள்.

*செயிற்சேல்†வி ணுடுவிஞெடுபொரப்போய்‡விமமர்பொருது
செயித்தோடி வருபழநி அமர்வோனே
தினைக்காவல் புரியவல குறப்பாவை யொடுதழுவு
திருத்தோள அமரர்பணி பெருமாளே. (சகூ)

தான தான தனத்த தனத்தன
தான தான தனத்த தனத்தன
தான தான தனத்த தனத்தன தனதான.

150. ஓடி ஓடி அழைத்து வரச்சில
சேடி மார்கள் பசப்ப அதற்குமுன்
ஓதி கோதி முடித்த விலைச்சுருள் அதுகோதி
நீடு வாச நிறைத்த அகிற்புழு
கோட மீது திமிர்ந்த தனத்தினில்
நேச மாகி அணைத்த சிறுக்கிகள் உறவாமோ
§நாடி வாயும் வயற்ற லையிற்புனல்
ஓடை மீதி னி||லத்த திவட்கையின்
¶நாத கீத மலர்த்து ளிபெற்றளி இசைபாடும்
கோடு லாவி யமுத்துநி ரைத்தவை
காவர் நாட தனிற்பழ நிப்பதி
கோதி லாத குறத்திய ணைத்தருள் பெருமாளே. (ருய)

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனனத் தனனத் தனதான.

151. கடலைச் சிறைவைத் துமலர்ப் பொழிலிற்
ப்ரமரத் தையுடற் பொறியிட் டுமடுக்
கமலத் தைமலர்த் திவிடத் தையிரப் பவனூணுக்

* செய்யில்சேல்-வயல்களிலிருக்கும் கெண்டைமீன்கள். †விண்ணுடு-வான்மீன்கள். ‡விமமர் - விம்மு அமர் §நாடி - பூந்தாள் ||அத்த திவட்கையின் - அர்த்தம் விளங்கும்படி. ¶நாதகீத மலர்த்துளி பெற்றளி இசைபாடும் - அளி மலர்த்துளி பெற்று நாதகீத இசைபாடும் எனக்கூட்டுக.

கருதிச் சருவிக் கயலைக் கயமுட்
படுவித் துழைபைக் கவனத் தடைசிக்
கணையைக் கடைவித் துவடுத் தனையுப் பினில்மேவி

அடலைச் செயல்சத் தியையக் கிளியிற்
புகுவித் துயமப் ப்ரபுவைத் துகைவித்
தரிகட் கப்விதிர்த் துமுறித் துமதித் தசகோரம்

அலறப் பணிரத் னமணிக் குழையைச்
சிலுகிட் டுமைபிட் டொளிவிட் டுமருட்
டுதலுற் றபொறிச் சியர்கட் சடையிற் படுவேனை

சடிலத் தவனிட் டவிசிட் டகுலத்
தொருசெட் டியிடத் திலுதித் தருள்வித்
தகருத் ரஜன்மப் பெயர்செப் பியிடப் பரிவாலே

*சனகர்க் குமகஸ்த் யபுலஸ்த் யசனற்
குமரர்க் குமநுக் க்ரக†மெய்ப் பலகைச்
‡சதுபத் துநவப் புலவர்க் கு§விபத் தியில்ஞான

படலத் துறுலக் கணலக் ய||தமிழ்த்
த்ரயமத் திலகப் பொருள்வ்ருத் தியினைப்
¶பழுதற் றுணர்வித் தருள்வித் தகசற் குருநாதா

பவளக் கொடிசுற் றியபொற் கமுகிற்
றலையிற் குலையிற் பலமுத் துதிர்செய்ப்
பழநிப் பதிவெற் பினில்நற் குமரப் பெருமாளே. (௱க)

---

தனதன தத்த தானன தனதன தத்த தானன
தனதன தத்த தானன தனதான.

152. கதியைவி லக்கு மாதர்கள் புதியவி ரத்ந பூஷண
கனதன வெற்பு மேல்மிகு மயலான

கவலைம னத்த னாகிலும் உனதுப்ர சித்த மாகிய
கனதன மொத்த மேனியும் முகமாறும்

---

*சனகர்க்கும் என்பது முதலாகக்கூறிய இவர்களே சனகாதிநால்வர். †மெய்ப்பலகை-சங்கப்பலகை. ‡சது பத்து நவப்புலவர் - சங்கத்தார் நாற்பத்தொன்பதின்மர் § விபத்தியில் - வேற்றுமை இல்லாத. || தமிழ்த்த்ரயமத்தில் - தமிழ்த்திரயம் அதில். ¶பழுதற்று - பழுதற; வினையெச்சத் திரிபு.

அதிபல வஜ்ர வாகுவும் அயில்நுனை வெற்றி வேலதும்
அரவுபி டித்த தோகையும் உலகேழும்

அதிரவ ரற்று கோழியும் அடியர்வ ழுத்தி வாழ்வுறும்
அபிநவ பத்ம பாதமும் மறவேனே

*இரவிகு லத்தி ராசத மருவியெ திர்த்து வீழ்கடு
ரணமுக சுத்த வீரிய குணமான

இளையவ னுக்கு நீண்முடி அரசது பெற்று வாழ்வுற
இதமொட ளித்த ராகவன் மருகோனே

பதினொரு ருத்தி ராதிகள் தபனம்வி ளக்கு மாளிகை
பரிவொடு நிற்கு மீசுர சுரலோக

பரிமள கற்ப காடவி யரியளி சுற்று பூவுதிர்
பழநிம லைக்குள் மேவிய பெருமாளே. (௫௨)

---

தனன தந்தன தந்த தானன
தனன தந்தன தந்த தானன
தனன தந்தன தந்த தானன தந்ததான.

153. கனக கும்பமி ரண்டு நேர்மலை
எனநெ ருங்குக ரும்பை மாமணி
கதிர்சி றந்தவ டங்கு லாவிய முந்துசூதம்

†கடையில் நின்றுப ரந்து நாடொறும்
இளகி விஞ்சியெ ழுந்த கோமள
களப குங்கும கொங்கை யானையை இன்பமாக

அணைவ ருங்கொளு மென்று மேவிலை
இடும டந்தையர் தங்கள் தோதகம்
அதின்ம ருண்டுது வண்ட வாசையில் நைந்துபாயல்

அவச மண்கொளு மின்ப சாகர
முழுகும் வஞ்சக நெஞ்சை யேயொழி
தருப தங்கதி எம்பிரானருள் தந்திடாயோ

---

*இர என்பது எதுகை வழு அன்று, இவ் எதுகை ஆரிடத்தை ஒத்து தண்டியலங்கார ஒழிபியலிற் கூறிய வழுவமைதியானது. †கடை-வாயில்.

தனத னந்தன தந்த னாவென
டிகுகு டிங்குகு டிங்கு பேரிகை
தகுதி திந்திகு திந்த தோவென உந்துதாளந்

தமர சஞ்சலி சஞ்ச லாவென
முழவு டுண்டுடு டுண்டு டூவென
தருண கிண்கிணி கிண்கி ணாரமு முந்தவோதும்

பணிப தங்கய மெண்டி சாமுக
கரிய டங்கலு மண்ட கோளகை
பதறி நின்றிட நின்று தோதக என்றுதோகை

பவுரி கொண்டிட மண்டி யேவரு
நிசிச ரன்கிளை கொன்ற வேலவ
பழநி யங்கிரி யின்கண் மேவிய தம்பிரானே. (ருங)

---

தனதத்தத் தனதத் தத்தத்
தனதத்தத் தனதத் தத்தத்
தனதத்தத் தனதத் தத்தத்
தனதத்தத் தனதத் தத்தத்
தனதத்தத் தனதத் தத்தத்
தனதத்தத் தனதத் தத்தத் தனதான.

154. சகடத்திற் குழைவிட் டெற்றிக்
குழலுக்குச் சரம்வைத் தெற்றிப்
புளகித்துக் குவளைக் கட்பொற்
கணையொத்திட் டுழலச் சுத்தித்
தரளப்பற் பவளத் தொட்டக்
*களப்பொட் டுதலிட் டத்திக் குவடான

தனதுத்திப் படிகப் பொற்பிட்
டசையப் †பெட் பசளைத் துப்புக்
கொடியொத்திட் டிடையிற் பட்டைத்
தகையிற்றொட் ‡டுகளப் பச்சைச்

---

* களப அப்பு ஒட்டுதல் இட்ட அத்திக் குவடான எனப் பிரித்துப் பொருள் கொள்க. † பெள்-விரும்பத்தக்க. ‡ உகளம்-இரண்டு.

சரணத்துக் கியலச் சுற்றிச்
சுழலிட்டுக் கடலைப் பற்றிக் — கொளுமாதர்

சுகமுற்றுக் கவலைப் பட்டுப்
பொருள் கெட்டுக் கடைகெட் டுச்சொற்
குளறிட்டுத் தடிதொட் டெற்றிப்
பிணியுற்றுக் *கசதிப் பட்டுச்
சுகதுக்கத் திடர்கெட் டுற்றுத்
தளர்பட்டுக் கிடைபட் டுப்பிக் — †கிடைநாளில்

சுழலச்சக் கிரியச் சுற்றிட்
டிறுகக்கட் டுயிரைப் பற்றிக்
கொளுகப்‡பற் பலரைக் கட்டிக்
கரம்வைத்துத் தலையிற் குத்திச்
சுடுகட்டைச் சுடலைக் கட்டைக்
கிரையிட்டுப் பொடிபட் டுக்கிச் — சடமாமோ

திகுடத்திக் குகுடட் டுட்டுட்
டமடட்டட் டமடட் டிக்குட்
டிமிடிட்டிட் டிமிடிட் டிக்குத்
தொகுதொக்குத் தொகுதத் தொக்குச்
செகணக்கச் செகணச் செக்குத்
தகுடத்தத் தகுடத் தட்டுட் — டிடிபேரி

திமிலைக்கைத் துடிதட் டெக்கைப்
பகடிட்டுப் பறையொத் தக்§கட்
டிகையெட்டுக் கடல்வற் றித்||தித்
தரவுக்கக் கிரியெட் டுத்தைத்
தியருக்குச் சிரமிற் றுட்கச்
சுரர்¶பொற்புச் சொரியக் கைத்தொட் — டிடும்வேலா

பகலைப்பற் சொரியத் தக்கற்
பதிபுக்கட் டழலிட் டுத்திட்
புரமட்கிக் கழைவிற் புட்பச்

கசதி-கஸதி, வருத்தம். †கிடைநாள்-கிடக்கின்ற நாள். ‡பற்பலரை-பற்பலர் ஐ-சாரியை §கண்டிகை எட்டு-இடமகன்ற எட்டுத் திக்கும். ||தித் தர-தித் தா, தியைத்தா. ¶பொற்பு-பொற்பூ, கற்பகப் பூமாரி,

சரணைச்சுட் டயனைக் கொத்திப்
பரிவுக்கொட் பரமர்க் குச்சற்
குருவொத்துப் பொருளைக் கற்பித் தருள்வோனே

பவளப்பொற் கிரித்துத் திப்பொற்
றனகொச்சைக் கிளிசொற் பற்றிப்
பரிவுற்றுக் கமலப் புட்பத்
திகழ்பற்றிப் புணர்சித் ரப்பொற்
படிகத்துப் பவளப் பச்சைப்
பதமுத்துப் பழநிச் சொக்கப் பெருமாளே. (ருச)

---

தந்தன தானன தத்தத் தந்தன
தந்தன தானன தத்தத் தந்தன
தந்தன தானன தத்தத் தந்தன தனதான.

155. சிந்துர கூரம ருப்புச் செஞ்*சரி
செங்கைகு லாவந டித்துத் தென்பயில்
செண்பக மாலைமு டித்துப் பண்புள செருவூடே

சிந்துகள் பாடிமு ழக்கிச் செங்கயல்
அம்புகள் போலவி ழித்துச் †சிங்கிடை
செம்பவ ளாடைது லக்கிப் பொன்பறி விலைமாதர்

வந்தவ ராரென ழைத்துக் கொங்கையை
அன்புற மூடிநெ கிழ்த்திக் கண்பட
மஞ்சணி ராடிமி னுக்கிப் பஞ்சணை தனிலேறி

மந்திர மோகமெ ழுப்பிக் கெஞ்சிட
முன்றலை வாயில டைத்துச் சிங்கிகொள்
மங்கைய ராசைவி லக்கிப் பொன்பதம் அருள்வாயே

இந்திர நீலவ னத்திற் செட்புவி
அண்டக டாகம ளித்திட் டண்டர்கள்
‡எண்படு §சூரைய ழித்துக் கொண்டருள் ஒருபேடி

---

* சரி வளையல். † சிங்கிடை - சிங்கி இடை, சிங்கி-வியப்பு. § சூர்-துன்பம்.

இன்கன தேரை நடத்திச் செங்குரு
மண்டல நாடும ளித்துப் பஞ்சவர்
இன்புறு * தோழ்மை யுடைக்கத் தன்திரு மருகோனே
சந்திர சூரியர் திக்கெட் டும்புகழ்
அந்தமில் வாழ்வது பெற்றுத் தங்கிய
சங்கர னுர்செவி புக்கப் பண்பருள் குருநாதா
சம்ப்ரம மானகு றத்திக் கின்புறு
கொங்கையின் மேவுச மர்த்தச் சுந்தர
தண்டமிழ் சேர்பழ நிக்குட் டங்கிய பெருமாளே.(நுரு)

---

தனனதன தனனதன தத்தத் தனத்ததன
தனனதன தனனதன தத்தத் தனத்ததன
தனனதன தனனதன தத்தத் தனத்ததன தனதான.

156. சிறுபறையு முரசுதுடி சத்தக் கணப்பறையு
மொகுமொகென அதிரவுட னட்டிப் பிடித்துமுடி
சிறுகயிறு நெடிதுகொடு கட்டிட் டிழுக்கவினி அணுகாதே
சிலதமர்க ளுறவுகிளை கத்திப் பிதற்றியெடு
சுடலைதனி விடுகனலை இட்டுக் கொளுத்துபுனல்
திரைகடலில் முழுகெனவு ரைக்கப் படிக்†குடிலை ஒழியாதே
மறைமுறையி னிறுதிநிலை முத்திக் கிசைத்தபடி
உடலுயிர்கள் கரணவெளி பட்டுக் குணத்திரயம்
வழிபடவும் நினதடிமை இச்சைப் படுத்துவதும் ஒருநாளே
வருதுரக மயில்மணிகள் சத்திக்க நிர்த்தமிட
ஒருபதுட னிருபுயமு மட்டுத் தொடைக்கிசைய
மனமகிழ இனியமொழி செப்பிச் சிவத்தபதம் அருள்வாயே
நறையிதழி அறுகுபல புட்பத் திரட்களொடு
சிறுபிறையு மரவுமெழி லப்புத் திருத்தலையில்
நளினமுற அணிசடையர் மெச்சிப் ரியப்படவு மயிலேறி
நவநதிகள் குமுகுமென வெற்புத் திரட்சுழல
அகிலமுத லெழுபுவன மெத்தத் திடுக்கிடவும்
நவமணிகள் உரகனுடல் கக்கத் துரத்திவரு முருகோனே

---

* தோழ்மை - தோழமை. † குடில்-குடியிருப்பு ஐ-சாரியை.

குறவர்முனை கெடமனது வெட்கப் படக்குடிலில்
மலையிலெழு தினை *யிதணில் வைத்துச் சிறுக்கியிரு
குவிமுலையு மணிபிடையுமெச்சிப் புணர்ச்சிசெயு மணவாளா

குறுமுனிவ னிருபொழுது மர்ச்சித்து முத்திபெற
அறிவுநெறி தவநிலைகள் செப்புத் தமிழ்க்கினிய
குருகுமர பழநிவளர் வெற்புத் தனிற்†றிகழு பெருமாளே()

தானந்த தனன தான தானந்த தனன தான
தானந்த தனன தான தனதான.

157. ஞானங்கொள் பொறிகள் கூடி வானிந்து கதிரி லாத
நாடண்டி நமசி வாய வரையேறி

நாவின்ப ரசம தான ஆநந்த அருவி பாய
நாதங்க ளொடுகு லாவி விளையாடி

ஊனங்க ளுயிர்கள் மோக நானென்ப தறிவிலாமல்
ஓமங்கி உருவ மாகி இருவோரும்

ஓரந்த மருவி ஞான மாவிஞ்சை முதுகி னேறி
‡ லோகங்கள் வலம தாட அருள்தாராய்

தேனங்கொ ளிதழி யான தாரிந்து § சலில வேணி
|| சீரங்க னெனது தாதை ஒருமாது

சேர்பஞ்ச வடிவி மோகி யோகங்கொள் மவுன சோதி
சேர்பங்கி னமல நாதன் அருள்பாலா

கானங்கள் வரைகள் தீவு ¶ ஓதங்கள் பொடிய நீற
$ காடந்த மயிலி லேறு முருகோனே

ராமன்கை மலர்கள் நாண வேடப்பெ ணமளி சேர்வை
காணொங்கள் பழநி மேவு பெருமாளே. (ருஎ)

---

* இதண் - பரண். † திகழு - உகரச்சாரியை. ‡ லோகங்கள் - புவனங்கள். § சலிலம் - கங்கை. || சீரங்கன் - சிறிய அங்கத்தை யுடையவன். அங்கம்-எலும்பு; எலும்பைக் கோத்தணித்த சிவபிரான். ¶ ஓதங்கள்-கடல்கள். $ காடந்த-காடு அந்த-வனத்திலுள்ள அழகிய.

தனதன தனத்தான தானன தானதன
தனதன தனத்தான தானன தானதன
தனதன தனத்தான தானன தானதன தனதான.

158. தலைவலி மருத்திடு காமாலை சோகைசுரம்
விழிவலி வறட்சூலை காயாசு வாசம்வெகு
சலமிகு விஷப்பாக மாயாவி காரபிணி அணுகாதே

தலமிசை அதற்கான பேரோடு கூறியிது
பரிகரி எனக்காது கேளாது போலுமவர்
சரியும்வய தாக்கேது தாரீர்சொ லீரெனவும் விதியாதே

உலைவற விருப்பாக நீள்காவின் வாசமலர்
வகைவகை எடுத்தே * தொ டாமாலி காபரணம்
உனதடி யினிற்சூட வேநாடு மாதவர்கள் இருபாதம்

உளமது தரித்தேவி னாவோடு பாடியருள்
வழிபட எனக்கேத யாவோடு தாளுதவ
உரகம தெடுத்தாடு † மேகார மீதின்மிசை வரவேணும்

அலைகட லடைத்தேமகா கோர ராவணனை
மணிமுடி துணித்தாவி யேயான சானகியை
அடலுடனழைத்தேகொள் மாயோனை மாமனெனுமருகோனே

அறுகினை முடித்தோனை ஆதார மானவனை
மழுவுழை பிடித்தோனை மாகாளி நாணமுனம்
அவைதனில்நடித்தோனை மாதாதை யேயெனவும்வருவோனே

பலகலை படித்தோது பாவாணர் நாவிலுறை
இருசரணவித்தார வேலாயு தாவுயர்செய்
பரண்மிசை குறப்பாவை தோள்மேவ மோகமுறு மணவாளா

பதுமவ யலிற்பூக மீதேவ ரால்கள் துயில்
வருபுனல் பெருக்காறு காவேரி சூழவளர்
பழநிவ ருகற்பூர கோலாக லாவமரர் பெருமாளே. (௫அ)

* தொடா - தொடுத்து † மேகாரம் - மயில்.

தனனதன தந்த தத்த தானன
தனனதன தந்த தத்த தானன
தனனதன தந்த தத்த தானன தனதான.

159. *நிகமமெனி லொன்று மற்று நாடொறு
†நெருடுகவி கொண்டு வித்தை பேசிய
நிழலர்சிறு புன்சொல் கற்று வீறுள பெயர்கூறு

நெளியமுது ‡தண்டு சத்ர சாமரம்
§நிபிடமிட வந்து கைக்கு மோதிரம்
நெடுகியதி குண்டலப்ர தாபமும் உடையோராய்

முகமுமொரு சம்ப மிக்க நூல்களும்
முதுமொழியும் வந்திருக்கு மோவெனில்
முடிவிலவை ஒன்று மற்று வேறொரு நிறமாகி

முறியுமவர் தங்கள் வித்தை தானிது
முடியவுனை நின்று பத்தியால்மிக
மொழியும்வளர் செஞ்சொல் வர்க்க மேவர அருள்வாயே

திகுதிகென மண்ட விட்ட தீயொரு
செழியனுடல் சென்று பற்றி யாருகர்
திகையினமண் வந்து விட்ட போதினும் அமையாது

சிறியகர பங்க யத்து நீறொரு
திணையளவு சென்று பட்ட போதினில்
தெளியவுடன் வென்றி விட்ட மோழைகள் கழுவேற

மகிதலம ணைந்த ||அத்த மாதரை
வரைவறம ணந்து நித்த நீடருள்
வகைதனைய கன்றி ருக்கு மூடனை மலரூபம்

வரவரம னந்தி கைத்த பாவியை
வழியடிமை கொண்டு மிக்க மாதவர்
வளர்பழநி வந்த கொற்ற வேலவ பெருமாளே. (௫௯)

---

*நிகமம்-வேதம். †நெருடு-நூலிழையைப் பொருத்துதல்போலச்சேர்க்கின்ற. ‡தண்டு-சிவிகை. §நிபிடமிட-நெருங்க. ||அத்த-அத்தனே.

தத்தன தத்தன தனத்த தானன
தத்தன தத்தன தனத்த தானன
தத்தன தத்தன தனத்த தானன தனதான.

160. நெற்றிவெ யர்த்துளி துளிக்க வேயிரு
குத்துமு லைக்குட மசைத்து வீதியில்
நிற்பவர் மைப்படர் விழிக்க லாபியர் மொழியாலே

நித்தம யக்கிகள் மணத்த பூமலர்
மெத்தையில் வைத்ததி விதத்தி லேயுடல்
நெட்டிவ ரத்தொழில் கொடுத்து மேவியும் உறவாடி

உற்றவ கைப்படி பொருட்கள் யாவையு
மெத்தவு நட்பொடு பறித்து நாடொறும்
உற்பன வித்தைகள் தொடுக்கு மாதர்கள் உறவாமோ

உச்சித மெய்ப்புற அணைத்த யாவுடன்
மெய்ப்படு பத்தியி னிணக்க மேபெற
உட்குளிர் புத்தியை எனக்கு நீதர வருவாயே

* கற்றத மிழ்ப்புல வனுக்கு மேமகிழ்
வுற்றொரு † பொற்கொடி களிக்க வேபொரு
கற்பனை நெற்பல அளித்த காரணன் அருள்பாலா

‡ கற்பந கர்க்களி றளித்த மாதனை
பொற்புய மைப்புயல் நிறத்த வானவர்
கட்டிறை உட்கிட அருட்கிரு பாகர எனநாளும்

நற்றவ ரர்ச்சனை இடத்த யாபர
வத்துவெ னப்புவி இடத்தி லேவளர்
நத்தணி § செக்கரன் மகிழ்ச்சி கூர்தரு மருகோனே

நட்டுவர் மத்தள மிலக்க மாமென
மைக்குல மெத்தவு முழக்க மேதரு
நற்பழ நிப்பதி செழிக்க மேவிய பெருமாளே. (கசய)

---

* கற்றதமிழ்ப் புலவன்-சுந்தர மூர்த்தி சுவாமிகள். † பொற்கொடி-பரவை நாச்சியார். ‡ கற்பநகர் - தேவலோகம். § செக்கரன்-செங்கரன்.

தந்த தானனந் தானதன தானதன
தந்த தானனந் தானதன தானதன
தந்த தானனந் தானதன தானதன தனதான.

161. பஞ்ச பாதகன் பாவிமுழு மூடன்வெகு
வஞ்ச லோபியன் சூதுகொலை காரன்மதி
பண்கொ ளாதவன் பாவகட லூடுறழு பவுஷாசா
பங்கன் மோகியம் பாழ்நரகில் வீழவுறு
பெண்டிர் வீடுபொன் தேடிநொடி மீதில்மறை
பஞ்ச மாபலம் பாசமொடு கூடிவெகு சதிகார
அஞ்சு பூதமுண் டாகடிய கோரரிவர்
தங்கள் வாணிபங் காரியம லாமலருள்
அன்பர் பாலுடன் கூடியறி யாத*புகழ்* *அடியேனை
அண்டர் மாலயன் தேடியறி யாதவொளி
சந்த்ர சேகரன் பாவைவிளை யாடு†படி
கந்த நாடுடன் கூடிவிளை யாடவருள் புரிவாயே
வஞ்ச மாசுரன் சேனைகட லோடுருவ
டுண்க வேயினன் போலவொளிர் வேலைவிடு
வண்கை யாடகம் பேடுதொடையாடுமுடி முருகோனே
மங்கை மோகசிங் காரரகு ராமரிட
தங்கை சூலியங் காளியுமை ‡ஈனுபுகழ்
மங்க ளாயிசங் தானசிவ காமியுமை அருள்பாலா
கொஞ்சு மா§சுகம் போலமொழி நீலவிழி
பெண்கள் நாயகந் தோகைமயில் போலிரச
கொங்கைமால்குறம்பாவை||யவல் நிரவர அணைவோனே
கொண்டல் சூழமஞ் சோலைமலர் வாவிகயல்
கந்து பாயநின் றுடு¶துவர் பாகையுதிர்
+கந்தி யோடகஞ் சேர்பழநி வாழ்குமர பெருமாளே()

* புகழ்-இழிவுசிறப்பு.* * அடியேனை-அடியேன், ஐ, சாரியை. † படிக அந்த நாடு-படிகம்போல் தாவள்ளியமான நாடு, ‡ ஈனு-ஈன்ற § சுகம்-கிளி. || அவல்-ஆவல், ¶ துவர்பாகு-துவர்த்த பாக்கு. + கந்தி-கமுகமரம்.

தனதந தனதன தந்த தானன
தனதந தனதன தந்த தானன
தனதந தனதன தந்த தானன   தனதான.

162. பெரியதோர் கரியிரு கொம்பு போலவெ
வடிவமார் புளகித கும்ப மாமுலை
பெருகியே ஒளிசெறி தங்க வாரமு   மணியான

பிறையதோ வெனுநுதல் துங்க பீறு*வை
அழலதோ வெனுமிரு கண்க ளாரவெ
பிறகெலாம் விழுகுழல் சங்கு லாரவெ   வருமானார்

உரியதோர் பொருள்கொடு வந்த பேர்களை
மனையிலே வினவியெ கொண்டு போகியெ
உளவிலே மருவிய வஞ்ச மாதர்கள்   மயலாலே

உருகியே உடலற வெம்பி வாடியெ
வினையிலே மறுகியெ நொந்த பாதகன்
உனதுதாள் தொழுதிட இன்ப ஞானம   தருள்வாயே

அரியதோ ரமரர்க ளண்ட மேறவெ
கொடியதோ ரசுரர்க ளங்க மாளவெ
அடலதோ டமர்புரி கின்ற சூரிய   வடிவேலா

அரகரா எனமிக அன்பர் சூழவெ
கடியதோர் மயில்மிசை அன்றை ஏறியெ
அவனியோர் நொடிவரு கின்ற காரண   முருகோனே

பரியதோர் கயிறனை கொண்டு வீசவெ
† உறியதோய் தயிர்தனை உண்டு நாடியெ
பசியதோ கெடவருள் கொண்டமாயவன் மருகோனே

பரமமா நதிபுடை கொண்‡ட ணுவவெ
வனசமா மலரினில் வண்டு லாவவெ
பழநிமா மலைதனி லென்று மேவிய பெருமாளே. (கூ௨)

* வை-கூர்மை. † உறிய-உறியினிடத்துள்ள. ‡ அணுவ-நெருங்க.

தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன தனதான.

163. மலரணி கொண்டைச் சொருக்கி லேயவள்
சொலுமொழி இன்பச் செருக்கி லேகொடு
மையுமடர் நெஞ்சத் * திருக்கி லேமுக மதியாலே

மருவுநி தம்பத் தடத்தி லேநிறை
பரிமள கொங்கைக் குடத்தி லேமிக
வலியவும் வந்தொத் திடத்தி லேவிழி வலையாலே

நிலவெறி அங்கக் குலுக்கி லேயெழில்
வளைபுனை செங்கைக் கிலுக்கி லேகன
நிதிபறி அந்தப் பிலுக்கி லேசெயும் ஒயிலாலே

நிதமிய லுந்தூர்க் குணத்தி லேபர
வசமுட னன்புற் றிணக்கி லேயொரு
நிமிஷமி ணங்கிக் கணத்தி லேவெகு மதிகேடாய்

அலையநி னைந்† துற் பனத்தி லேயனு
தினமிகு மென்சொற் பனத்தி லேவர
அறிவும ழிந்‡ தற் பனத்தி லேநிதம் உலைவேனை

அசடனை வஞ்சச் சமர்த்த னாகிய
கசடனை உன்சிற் கடைக்க ணாடியும்
அலர்கொடு நின்பொற் பதத்தை யேதொழ அருள்தாராய்

பலபல பைம்பொற் பதக்க மாரமும்
அடிமைசொ லுஞ்சொற் றமிழ்ப்ப னீரொடு
பரிமள மிஞ்சக் கடப்ப மாலையும் அணிவோனே

பதியினில் || மங்கைக் கதித்த மாமலை
யொடுசில குன்றிற் றரித்து வாழ்வுயர்
பழநியி லன்புற் றிருக்கும் வானவர் பெருமாளே. (சுரு)

---

* திருக்கு-திருகுதாளம். † உற்பனம் - தோற்றம். ‡ அற்பனத்திலே-அற்பன் அதிலே. || மங்கைக்கதித்த மாமலை - வள்ளிமலை.

தனதனன தனதான தனதனன தனதான
தனதனன தனதான தனதான.

164, முகைமுளரி ப்ரபைவீசும் எழில்கனக மலைபோலு
முதிர்விளி தனபார மடவார்தோள்
முழுகியமி ழநுபோக விழலனென உலகோர்கள்
மொழியுமது மறியாது தலைகீழ்வீழ்ந்
தகமகிழ விதமான நகையமுத மெனவூறல்
அசடாக மெழவாகி மிகவேயுண்
டழியுமொரு தமியேனு மொழியுமுன திருதாளின்
அமுதுபரு கிடஞானம் அருளாயோ
மகரமெறி திரைமோது பகரகடல் தடவாரி
மறுகுபுனல் கெடவேலை விடுவோனே
வரிசையவுண் மகசேனை யுகமுடிய மயிலேறி
வருபனிரு கரதீர முருகோனே
பகர்வரிய ரெனலாகு முகைகொழுந ருளமேவு
பரமகுரு வெனநாடும் இளையோனே
பணிலமணி வெயில்வீசு மணிசிகர மதிசூடு
பழநிமலை தனில்மேவு பெருமாளே. (கசச)

தனன தனன தனத்த தனன தனன தனத்த
தனன தனன தனத்த தனதான.

165. முதிர உழையை வனத்தில் *முடுகி வடுவை அழித்து
முதிர கயல்கள் கயத்தி னிடையோடி
முரண வளரும் விழிக்குள் மதன விரகு பயிற்றி
முறைமை கெடவு மயக்கி வருமாதர்
மதுர அமுத மொழிக்கு மகுட களப முகைக்கு
வலிய அடிமை புகுத்தி விடுமாய
மனதை உடைய அசட்டு மனிதன் முழுது புரட்டன்
மகிழ உனது பதத்தை அருள்வாயே

*முடுகி-முடுக்கி, துரத்தி.

சதுரன் வரையை யெடுத்த நிருத னுடலை வதைத்தொர்
சகடு மருத முதைத்த தகவோடே
தழையு மரமு நிலத்தில் மடிய அமரை விளைத்த
தனுவை உடைய சமர்த்தன் மருகோனே
அதிர முடுகி எதிர்த்த அசுர ருடலை வதைத்தும்
அமரர் சிறையை விடுத்தும் வருவோனே
அரிய புகழை அமைத்த பெரிய பழநி மலைக்குள்
அழகு மயிலை நடத்து பெருமாளே. (சுரு)

---

தத்தத்தத் தத்தத் தத்தன
தத்தத்தத் தத்தத் தத்தன
தத்தத்தத் தத்தத் தத்தன தனதான.

166. முத்துக்குச் சிட்டுக் குப்பிமு
டித்துச்*சுக் கைப்பிற் சுற்றியு
முற்பக்கத் திற்பொற் புற்றிட ஈதல்மீதே
முக்யப்பச் சைப்பொட் டிட்டணி
ரத்னச்சுட் டிப்பொற் புற்றிட
முச்சட்டைச் சித்ரக் கட்டழ கெழிலாடத்
தித்திக்கச் சொற்சொற் றுப்பிதழ்
நச்சுக்கட் †கற்புச் சொக்கியர்
செப்புக்கொக் கக்கச் சுப்பெறு தனமேரு
திட்டத்தைப் பற்றிப் பற்பல
லச்சைக்குட் பட்டுத் தொட்டுயிர்
சிக்கிச்சொக் கிக்கெட் டிடபடி உழல்வேனோ
‡மெத்தத்துக் கத்தைத் தித்தியி
னிச்சித்தத் திற்பத் தத்தொடு
மெச்சிச்சொர்க் கத்திற் சிற்பரம் அருள்வாயே
வித்தைக்குக் கர்த்தத் தற்பர
முக்கட்சித் தர்க்குப் புத்திர
விச்சித்ரச் செச்சைக் §கத்திகை புனைவோனே

---

சுக்கை-பூமாலை † கற்பு-கற்பனை ‡ மெத்த துக்கத்தை நித்தியினி சித்தத்தில் பத்தத்தொடு என்று பிரித்துக் கொள்க § கத்திகை-பூமாலை.

நித்யக்கற் பத்திற் சித்தர்கள்
எட்டுத்திக் குக்குட் பட்டவர்
நிஷ்டைக்கற் புற்றப் பத்தர்கள் அமரோரும்
நெட்டுக்குப் புட்பத் தைக்கொடு
முற்றத்துற் றர்ச்சிக் கப்பழ
நிக்குட்பட் டத்துக் குற்றுறை பெருமாளே. (கசுசு)

தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதன தனதான.

167. முருகுசெறி குழலவிழ முகைபுளக மெழுநிலவு
முறுவல்தர விரகமெழ அநுராகம்
முதிரவச மற*விதரி எழுகைவளை கலகலென
முகநிலவு குறுவெயர்வு துளிவீச
அருமதுர மொழிபதற இதழமுது பருகிமிக
அகமகிழ இருகயல்கள் குழையேற
† அமளிபடு மமளிமல ரணையின்மிசை துயிலுகினும்
அலர்கமல மலரடியை மறவேனே
நிருதனொடு வருபரியும் அடுகரியும் ரதநிரையும்
நெறுநெறன முறியவிடும் வடிவேலா
நிக‡ழகள சகள குரு நிருபகுரு பரகுமர
நெடியநெடு ககனமுக டுறைவோனே
வருமருவி நவமணிகள் மலர்கமுகின் மிசைசிதற
மதுவினிரை பெருகு||வளி மலைமீதே
வளர்குறவர் சிறுமியிறு வளர்தனமு மிருபுயமு
மருவிமகிழ் பழநிவரு பெருமாளே. (கசுஎ)

தானந்தன தானன தானன
தானந்தன தானன தானன
தானந்தன தானன தானன தனதான.

168. மூலங்கிள ரோருரு வாய்§நடு
நாலங்குல ¶மேனடு வேரிடை
மூள்பிங்கலை நாடியொ டாடிய முதல்வோர்கள்

* விதரி - பிளவுபட்டுள்ள விரல்கள் † அமளிபடும் - ஒலிதருகின்ற அல்லது, பள்ளியறையிலுள்ள. ‡ அகளசகள குருநிருப - அருவமாகியும் உருவமாகியும் உள்ள குருராஜனே. § வளிமலை-வள்ளிமலை || நடு - சரீர மத்திய ஸ்தானம். ¶ மேல் நடுவேர் - சுழுமுனை என்னுமிடம்.

மூணும்பிர காசம தாயொரு
சூலம்பெற வோடிய வாயுவை
*மூலந்திகழ் தூண்வழி யேயள விடவோடி

†பாலங்கிள ராறுசி காரமொ
டாருஞ்சுட ராடுப ராபர
பாதம்பெற ஞானச தாசிவ மதின்மேவிப்

பாடுந்தொனி நாதமு நூபுரம்
ஆடுங்கழ லோசையி லேபரி
வாகும்படி யேயடி யேனையும் அருள்வாயே

சூலங்கலை மான்மழு வோர்துடி
வேதன்தலை யோடும ராவிரி
தோடுங்குழை சேர்பர னார்தரு முருகோனே

சூரன்கர மார்சிலை வாளணி
தோளுந்தலை தூள்பட வேயவர்
சூளுங்கெட வேல்விடு சேவக மயில்வீரா

காலின்கழ லோசையு நூபுர
வார்வெண்டைய மோசையு மேயுக
காலங்களி லோசைய தாநட மிடுவோனே

கானங்கலை மான்மக ளார்தமை
நாணங்கெட வேயணை வேள்பிர
காசம்பழ னாபுரி மேவிய பெருமாளே. (௧௬௮)

தானந் தத்தன தானன தானன
தானந் தத்தன தானன தானன
தானந் தத்தன தானன தானன தனதான.

169. வாதம் பித்தமி டாவயி றீளைகள்
சீதம் பற்சனி சூலைம கோதர
§மாசங் கட்பெரு மூலவி யாதிகள் குளிர்காசம்

மாறுங் கக்கலொ டேசில நோய்பிணி
யோடுந் தத்துவ காரர்தொ ணூறறு
வாருஞ் சுற்றினில் வாழ்சதி காரர்கள் வெகுமோகர்

* மூலந்திகழ் தூண் வழி-சுழுமுனை மார்க்கம் †பாலங்கிளராறு-புருவ மத்தியஸ்தான வழி ‡ 'மாசங்கண்' என்பதை 'அங்கண்மாசு' எனமாற்றுக, அங்கண்மாசு என்பது நேத்திர ரோகம்.

சூழ்துன் சித்ர*க பாவையமு வாசைகொ
டேடதுஞ் சற்றுண ராமலெ மாயைசெய்
சோரம் பொய்க்குடி லேசுக மாமென இதில்மேவித்

தூசின் பொற்சர மோடுகு லாயுல
கேழும் பிற்பட வோடிடு மூடனை
†தூவஞ் சுத்தடி யாரடி சேரநின் அருள்தாராய்

திதந் தித்திமி தீதக தோதிமி
டுடுண் டுட்டுடு டேடுடு டேடுடு
சேசெஞ் செக்கெண தோதக தீகுட வெனபேரி

சேடன் சொக்கிட வேலைக டாகமெ
லாமஞ் சுற்றிட வேயச ரார்கிரி
தீவும் பொட்டெழ வேயனல் வேல்விடு மயில்வீரா

வேதன் பொற்சிர மீது ‡க டாவிந
லீசன் சற்குரு வாயவர் காதினில்
மேவும் § பற்றிலர் பேறரு ளோதிய முருகோனே

||வேஷங் கட்டியு மேகி × ம காவளி
மாலின் பித்துற வாகிவி ணோர்பணி
வீரங் கொட்பழ னுபுரி மேவிய பெருமாளே. (௬க)

---

தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன தனதான.

170. விதமி சைந்தினி தாமலர் மாலைகள்
குழல ணிந்தநு ராகமு மேசொலி
விதர ணஞ்சொலி வீறுக ளேசொலி அழகாக

விரிகு ரும்பைக ளாமென வீறிய
கனக சம்ப்ரம மேருவ தாமதி
விரக ¶ மொங்கிய மாமுலை யாலெதிர் அமர்நாடி

*பாய் - கவசம், தேகம். † தூவஞ் சுத்தடியார் - தூ அம சுத்த அடியார் - தூய்மை வாய்ந்த அழகிய சுத்த அடியார். ‡ கடாவி - பிரயோகித்து, குட்டி. § பற்றிலர் பேறருள் - பற்றற்றவர்பெறத்தக்க அருளாகிய பிரணவப்பொருள். ||வேஷங்கட்டி-விருத்தாப்பியமான வேஷங்கொண்டு. × மகாவளி - மகிமைதங்கிய வள்ளிநாயகி. ¶ மொங்கிய - பருத்த.

இதமி சைந்தன மாமென வே * யின
நடைந டந்தனர் வீதியி லேவர
எவர்க ளுஞ் † சித மால்கொளு மாதர்கண் வலையாலே

எனது சிந்தையும் வாடிவி டாவகை
அருள்பு ரிந்தழ காகிய தாமரை
இருப தங்களி னாலெனை யாள்வதும் ஒருநாளே

மிதமி சைந்தெதி ரேபொரு சூரனை
உடலி ரண்டு ‡ கு றாய்விழ வேசின
வடிவு தங்கிய வேலினை யேவிய அதிதீரா

மதுர இன்சொலி மாதுமை நாரணி
கவுரி அம்பிகை யாமளை பார்வதி
மவுன சுந்தரி காரணி யோகினி சிறுவோனே

மதமி சைந்தெழு லோகமு மேவலம்
நொடியில் வந்திடு மாமயில் மீதொரு
பவனி வந்தருள் பாகர சேவக விறல்வீரா

பருதி யின்ப்ரபை கோடிய தாமெனும்
வடிவு கொண்டருள் காசியின் மீறிய
பழநி யங்கிரி மீதினில் மேவிய பெருமாளே. (எ0)

---

தனத்த தானன தனதன தனதன தனதான.

171. அருத்தி வாழ்வொடு § தனகிய மனைவியும் உறவோரும்
அடுத்த பேர்களு மிதமுறு மகவொடு வளநாடும்

தரித்த வூரு ‖ மெ யெனமன நினைவது நினையாதுன்
தனைப்ப ரவியும் வழிபடு தொழிலது தருவாயே

எருத்தி லேறிய இறையவர் செவிபுக உபதேசம்
இசைத்த நாவின இதணுறு குறமகள் இருபாதம்

பரித்த சேகர மகபதி தரவரு தெய்வயானை
பதிக்கொ ளாறிரு புயபழ நியிலுறை பெருமாளே. (எக)

---

* இன நடை - விதம் விதமான நடை. † சிதம் - சித்தம். ‡ கூறாய் என்பது குறாய் என்றாயிற்று. § தனகிய-சரசமாய்ப் பேசிய. ‖ மெயென-மெய்யென

தனதன தனதத்த தனதன தனதத்த
தனதன தனதத்த தனதான.

172. அறமிலா நிலைகற்ற கொடியவேல் விழிவிட்டு
எறிவுதா னறவைத்து விலைபேசி
அமளிமீ தினில்ழுத்து பவளவா யமுதத்தை
அதிகமா வுதவிக்கை வளையாலே
உறவினா லுடலத்தை இறுகவே தழுவிக்கொ
ளுலையிலே மெழுகொத்த மடவாரோ
டுருகியே யுருபெற்றி மதனநா டகபித்தும்
ஒழியுமா றொருமுத்தி தரவேணும்
மறவர்மா தொருரத்ந விமலகோ கநகத்தி
மயிலனாள் புணர்செச்சை மணிமார்பா
மருள்நிசா சரன்வெற்பி னுருகிவீழ் வுறமிக்க
மயிலிலே றியவுக்ர வடிவேலா
பறைகள்பே ணியருத்ரி கரியகா ளசத்தி
பரமர்பா னுறைசத்தி எமதாயி
பழையபார் வதிகொற்றி பெரியநா யகிபெற்ற
பழநிமா மலையுற்ற பெருமாளே. (௭௨)

---

தனனதன தந்த தனனதன தந்த
தனனதன தந்த தனதான.

173. இலகுகனி மிஞ்சு மொழியிரவு துஞ்ச
மிருவிழியெ னஞ்சு முகமீதே
இசைமுரல்க ரும்பு மிளமுலையு ரும்பும்
இளகியக ரும்பு மயலாலே
நிலவிலுடல் வெந்து கரியஅல மந்து
நெகிழுமுயிர் நொந்து மதவேளால்
நிலையழிவு நெஞ்சி லவர்குடிபு குந்த
நினைவொடுமி றந்து படலாமோ
புலவினைய ளைந்து படுமணிக லந்து
புதுமலர ணிந்த கதிர்வேலா

புழுகெழும ணந்த குறமகள்கு ரும்பை
பொரமுலையு டைந்த தொடைமார்பா
பலநிறமி டைந்த விழுசிறைய லர்ந்த
பருமயில டைந்த குகவீரா
*பணைபணிசி றந்த தரளமணி சிந்து
பழநிமலை வந்த பெருமாளே. (எங)

---

தனனதன தான தந்த தனதான.

174. உலகபசு பாச தொந்த மதுவான
உறவுகிளை தாயர் தந்தை மனைபாலர்
மலசலசு வாச சஞ்ச லமதாலென்
மதிநிலைகெ டாம லுன்றன் அருள்தாராய்
சலமருகு பூளை தும்பை அணிசேயே
சரவணப வாழு குந்தன் மருகோனே
பலகலைசி வாக மங்கள் பயில்வோனே
பழநிமலை வாழ வந்த பெருமாளே. (எச)

---

தனதனன தனதனன தானத் தானத் தனதான.

175. ஒருபொழுது மிருசரண நேசத் தேவைத் துணரேனே
உனதுபழ நிமலையெனு மூரைச் சேவித் தறியேனே
பெருபுவியி லுயர்வரிய வாழ்வைத் தீரக் குறியேனே
பிறவியற நினைகுவனெ னாசைப் பாடைத் தவிரேனோ
துரிதமிடு நிருதர்புர சூரைக் காரப் பெருமாளே
தொழுதுவழி படுமடியர் காவற் காரப் பெருமாளே
விருதுகவி விதரணவி நோதக் காரப் பெருமாளே
விறன்மறவர் சிறுமிதிரு வேளைக் காரப் பெருமாளே. (எரு)

---

தனதன தனன தான தனதன தனன தான
தனதன தனன தான தனதான.

176. ஒருவரை ஒருவர் தேறி அறிகிலர் மதவி காரர்
ஒருகுண வழியு றாத பொறியாளர்

---

பணை - மூங்கில்.

உடலது * சதமெ னொடி களவுபொய் கொலைக ளாடி
உறநம னரகில் வீழ்வர் அதுபோ"

வருமொரு வடிவ மேவி இருவினை அலையு ளாடி
மறைவரி னனைய கோல மதுவாக

மருவிய பரம ஞான சிவகதி † பெறுக நீறு
வடிவுற உதவு பாதம் அருள்வாயே

திரிபுர மெரிய ‡ வேழ சிலைமத னெரிய மூரல்
திருவிழி அருள்மெய்ஞ் ஞான குருநாதன்

திருசரஸ் வதிம யேசு வரியிவர் தலைவ ரோத
திருநட ம்ருளு நாதன் அருள்பாலா

சுரர்பதி அயனு மாலு முறையிட அசுரர் கோடி
துகளெழ விடுமெஞ் ஞான அயிலோனே

சுககுற மகள்ம ணாள னெனமறை பலவு மோதி
தொழமுது பழநி மேவு பெருமாளே. (எகு)

—

தனதனத் தானனத் தனதனத் தானனத்
தனதனத் தானனத் தனதான.

177. கரியிணைக் கோடெனத் தனமசைத் தாடிநற்
கயல்விழிப் பார்வையிற் பொருள்பேசிக்

கலையிழுத் தேகுலுக் கெனநகைத் தே § மயற்
கலதியிட் டேயழைத் தணையூடே

செருமிவித் தாரசிற் றிடைதுடித் தாடமற்
றிறமளித் தேபொருட் பறிமாதர்

செயலொழுக் காமவிக் கலியுகத் தேபுகழ்ச்
சிவபதத் தேபதித் தருள்வாயே

திரிபுரக் கோலவெற் பழல்கொளச் சீர்நகைச்
சிறிதருட் டேவருட் புதல்வோனே

---

* சதமெ னொடி-சதம் என நாடி; அகரம் தொக்கது. † பெறுக-பெற.
‡ வேழசிலை - கரும்பாகிய வில். § மயற்கலதி-காதலெனும் மூதேவி.

திரைகடற் கோவெனக் குவடுகட் டேர்படத்
திருடர்கெட் டோடவிட் டிடும்வேலா

பரிமளப் * பாகலிற் கனிகளைப் பீறிநற்
படியினிட் டேகுரக் கினமாடும்

பழநியிற் சீருறப் புகழ்குறப் பாவையைப்
பரிவுறச் சேர்மணப் பெருமாளே. (எஎ)

---

தனதன தந்த தனதன தந்த
தனதன தந்த தனதான.

178. † கருகிய கன்று வரிசெறி கண்கள்
கயல்நிக ரென்று துதிபேசிக்

கலைசுருண் டொன்று மிடைபடு கின்ற
கடிவிட முண்டு பலநாளும்

விரகுறு சண்ட வினையுடல் கொண்டு
விதிவழி நின்று தளராதே

விரைகமழ் தொங்கல் மருவிய துங்க
விதபத மென்று பெறுவேனோ

முருகக டம்ப குறமகள் பங்க
முறையென அண்டர் முறைபேச

முதுதிரை ஒன்ற வருதிறல் வஞ்ச
‡ முரணசுர் வென்ற வடிவேலா

பரிமள இன்ப மரகத துங்க
§ பகடித வென்றி மயில்வீரா

பறிதலை குண்டர் கழுநிரை கண்டு
பழநிய மர்ந்த பெருமாளே. (எஅ)

* பாகல்-பலா. † 'கருமுகில் கொண்ட' என்றும் பாடம் ‡ முரணசுர்-மாறுபாடுள்ள அசுரர். § பகடித வென்றி பெருமையும் வெற்றியுமுள்ள.

தனதனன தான தந்த தனதனன தான தந்த
தனதனன தான தந்த தனதான.

179. சுருளளக பார கொங்கை மகளிர்வச மாயி சைந்து
சுரதவகை யால்வி ளங்கு மதனாலே
சுருதியென வேதி னைந்து அறிவிலிக ளோடி ணங்கு
தொழிலுடைய யானு மிங்குன் அடியார்போல்
அருமறைக ளோதி னைந்து மனுநெறியி லேந டந்து
அறிவையறி வால றிந்து நிறைவாகி
அகிலபுவ னாதி எங்கும் வெளியுறமெய்ஞ் ஞான இன்ப
அமுதையொழி யாத ருந்த அருள்வாயே
பருதிமகன் வாசல் மந்த்ரி அநுமனொடு நேர்ப ணிந்து
பரிவினமை யாமுன் வந்து பரிவாலே
பரவியவி பீஷ ணன்பொன் மகுடமுடி சூட நின்ற
படைஞரொடு ராவ ணன்றன் உறவோடே
எரிபுகுத மாறி லண்டர் குடிபுகுத மாறு கொண்ட
ரகுபதியி ராம சந்த்ரன் மருகோனே
இளையகுற மாது பங்க பழநிமலை நாத கந்த
இமயவள்த னல்ம கிழ்ந்த பெருமாளே. (எகூ)

---

தனதனதத் தனதனதத் தனதனதத் தனதான.

180. இடமிலிசற் குணமிலிநற் றிறமிலியற் புதமான
செயலிலிமெய்த் தவமிலிநற் செபமிலிசொர்க் கமுமீதே
இடமிலிகைக் கொடையிலிசொற் கியல்பிலிநற் றமிழ்பாட
இருபதமுற் றிருவினையற் றியல்கதியைப் பெறவேணும்
கெடுமதியுற் றிடுமசுரக் கிளை மடியப் பொரும்வேலா
கிரணகுறைப் பிறையறுகக் கிதழ்மலர்கொக் கிறகோடே
படர்சடையிற் புனைநடனப் பரமர்தமக் கொருபாலா
பலவயலிற் றரளநிரைப் பழநிமலைப் பெருமாளே. (அ0)

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தந்ததான.

181. ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம்
ஆறுமுகம் ஆறுமுகம் என்றுபூதி
ஆமமணி மாதவர்கள் பாதமலர் சூடுமடி
யார்கள்பத மேதுணைய தென்றுநாளும்
ஏறுமயில் வாகனகு காசரவ ணாவெனது
ஈசவென மானமுற என்றுமோதும்
ஏழைகள்வி யாகுலமி தேதெனவி னாவிலுனை
ஏவர்புகழ் வார்மறையும் என்சொலாதோ
நீறுபடு *மாழைபொரு மேனியவ வேலவணி
நீலமயில் வாகவுமை தந்தவேளே
நீசர்கட மோடெனது தீவினையெ லாமடிய
நீடுதனி வேல்விடும டங்கல்வேலா
சீறிவரு மாறவுண னாவியுணு மானைமுக
தேவர்துணை வாசிகரி அண்டகூடம்
சேருமழ கார்பழநி வாழ்குமர னேபிரம
தேவர்வர தாமுருக தம்பிரானே. (கஅ)

---

தனதனன தாத்த தனதான.

182. †வசனமிக வேற்றி மறவாதே
மனதுதுய ராற்றி லுழலாதே
இசைபயில்ச டாக்ஷ ரமதாலே
இகபரசெள பாக்யம் அருள்வாயே
‡பசுபதி§சி வாக்யம் உணர்வோனே
பழநிமலை வீற்ற ருளும்வேலா
அசுரர்கிளை வாட்டி மிகவாழ
அமரர்சிறை மீட்ட பெருமாளே. (கஉ)

---

மாழை-பொன். † வசனமேற்றல்-உருவேறச் செபித்தல். ‡ பசுபதிவாக்யம்-வேதசிவாகமங்கள். §சி-ஸ்ரீ என்பது சீ என்றாகி, சி எனக்குறுகியது.

தனனா தனனா தனதான.

183. வரதா மணிநீ எனவோரில்
வருகா தெதுதான் அதில்வாரா
திரதா திகளால் நவலோகம்
இடவே கரியாம் இதிலேது
சரதா மறையோ தயன்மாலும்
சகலா கமநூல் அறியாத
பரதே வதையாள் தருசேயே
பழனா புரிவாழ் பெருமாளே. (அரு)

---

தந்தந் தந்தந் தந்தந் தந்தந்
தனதன தனதன தனதன தனதன தனதான.

184. * குன்றுங் குன்றுஞ் செண்டுங் கன்றும்
படிவளர் முலையினில் ம்ருகமத மெழுகியர்
இந்துஞ் சந்தந் தங்குந் தண்செங்
கமலமு மெனவொளிர் தருமுக வனிதையர்
நெஞ்சுங் கொஞ்சுஞ் † செஞ்சும் வஞ்சஞ்
சமரச முறவொரு தொழில்வினை புரிபவர் விரகாலும்

கும்பும் பம்புஞ் சொம்புந் தென்புங்
குடியென வளர்தரு கொடியவர் கடியவர்
எங்கெங் கெம்பங் கென்றென் றென்றுந்
தனதுரி மையதென நலமுட னணைபவர்
கொஞ்சந் தங்கின் பந்தந் தென்றன்
பொருளுள தெவைகளு நயமொடு கவர்பவர் மயலாலும்

என்றென் றுங் ‡ கன் றுந்துன் புங்கொண்
டுனதிரு மலரடி பரவிட மனதினில்
நன்றென் றுங்கொண் டென்றுஞ் சென்றுந்

---

குன்றுங்குன் றும்படி, செண்டுங்கன் றும்படி எனத் தனித்தனி கூட்டுக † செஞ்சும் செய்தும். ‡கன்றுதலையும் துன்பத்தையுங்கொண்டேன்.

தொழுமகி மையினிலே உணர்விரி னருள்பெற
இன்பும் பண்புந் தென்புஞ் சம்பந்
தமுமிக வருள்பெற விடைதருவிதமினி அருள்வாயே

* எங்குங் கஞ்சன் வஞ்சன் கொஞ்சன்
அவன்விடு மதிசய வினையுறு † மலகையை
வென்றுங் கொன்றுந் துண்டந் துண்டஞ்
செயுமரி யொருமுறை இரணிய வலனுயிர்
நுங்குஞ் சிங்கம் ‡ வங்கந் தன்கண்
துயில்பவ § னெகினனை உதவிய கருமுகில் மருகோனே

|| ஒன்றென் றென்றுந் துன்றுங் குன்றுந்
துளைபட மதகரி முகனுடல் நெரிபட
டுண்டுண் டுண்டுண் டிண்டிண் டிண்டிண்
டிடியென விழுமெழு படிகளு மதிர்பட
ஒண்சங் கஞ்சஞ் சஞ்சஞ் சஞ்சென்
றொலிசெய மகபதி துதிசெய அசுரரை அடுவோனே

உன்றன் தஞ்சந தஞ்சந் தஞ்சஞ்
சிவனருள் குருபர எனமுநி வரர்பணி
யுந்தொந் தந்தொந் தந்தொந் தந்தென்
றொலிபட நடமிடு பரனருள் அறுமுக
உண்கண் வண்டுங் கொண்டுந் தங்கும்
விரைபடு குரவல ரலர்தரு மெழில்புனை புயவீரா

¶ அன்றென் றொன்றுங் கொண்டன் பின்றங்
கடியவர் தமையிகழ் சமணர்கள் கழுவினில்
அங்கஞ் சிந்தும் பங்கந் துஞ்சும்
படியொரு தொகுதியி னுரைநதி எதிர்பட
அண்பின் பண்பெங் குங்கண் டென்பின்
அரிவையை எதிர்வர விடுகவி புகல்தரு திறலோனே

* எங்கும் என்பது குறுகிற்று. † அலகை-பூதகி. ‡ வங்கம் - தோணி; தோணிபோற்கடலிற்கண்வளர்பவன். § எகினன - அன்னவூர்தியாகிய பிரமன். || ஒன்றென்றஎன்றுந்துன்றுங்குன்று - ஒன்றாகிய சூரியமண்டலத்தை யளாவுங் கிரவுஞ்சகிரி. ¶ அன்றென்ற ஒன்றுங்கொண்டு அன்பின்று - பிறமதங்கள் முத்திவழி அன்று என்றஒன்றைமாத்திரங்கொண்டு அன்பில்லாமல், அத்தி நாத்தியென்ற ஒன்றையேகொண்டென்றலும் பொருந்தும்.

அண்டங் கண்டும் பண்டுண் டும்பொங்
கமர்தனில் விஜயவ னிரதமை நடவிய
துங்கன் *வஞ்சன் சங்கன் தங்கைக்
கொருமகன் முனிகழல் வருதகர் †இவர்வல
அங்கம் ‡ கஞ்சஞ் சங்கம் பொங்குந்
நயனிறை வளமுறு சிவகிரி மருவிய பெருமாளே. (அச)

---

தனத்ததன தனத்ததன தனத்ததன தனத்ததன
தனத்ததன தனத்ததன
தனத்தன தனதன தனதான

185. கருப்புவிலில் மருப்பகழி தொடுத்துமதன் விடுத்தனைய
கடைக்கணொடு சிரித்தணுகு
கருத்தினால் விரகுசெய் மடமாதர்
§ கதக்களிறு திடுக்கமுற மதர்த்துமிக எதிர்த்துமலை
கனத்தவிரு தனத்தின்மிசை
கலக்குமோ கனமதில் மருளாமே
ஒருப்படுதல் விருப்புடைமை மனத்தில்வர நினைத்தருளி
உனைப்புகழு மெனைப்புவியில்
ஒருத்தனும் வகைதிரு வருளாலே
உருத்திரனும் விருத்திபெற வனுக்கிரகி எனக்குறுகி
உரைக்கமறை அடுத்தபொருள்
உணர்த்துநா ளடிமையு முடையேனோ
பருப்பதமு முருப்பெரிய அரக்கர்களு மிரைக்குமெழு
படிக்கடலு மலைக்கவல
பருத்ததோ கையில்வரு முருகோனே
பதித்தமர கதத்தினுட னிரத்நமணி நிரைத்தபல
பணிப்பனிரு புயச்சயில
பரக்கவே இயல்தெரி வயலூரா

---

*வஞ்சன் வாட்படையை உடையவன். †இவர்வல ஏறிநடத்தவல்ல.
‡ கஞ்சம்-அன்னம். §கதம்-கோபம்.

திருப்புகழை உரைப்பவர்கள் படிப்பவர்கள் மிடிப்பகைமை
செயித்தருளு மிசைப்பிரிய
திருத்தமா தவர்புகழ் குருநாதா

சிலைக்குறவ ரிலைக்குடிலில் புகைக்கழுக முகிற்புடைசெல்
திருப்பழநி மலைக்குளுறை
திருக்கைவே லழகிய பெருமாளே. (அரு)

---

தான தந்தன தத்தன தத்தந்
தான தந்தன தத்தன தத்தந்
தான தந்தன தத்தன தத்தந் தனதான

186. கோல குங்கும கற்புர மெட்டொண்
ருன சந்தன வித்துரு மத்தின்
கோவை செண்பக *தட்பம கிழ்ச்செங் கழுநீரின்

கோதை சங்கிலி உற்றக முத்தும்
பூஷ ணம்பல ஒப்பனை மெச்சுங்
கூறு கொண்டப ணைத்தனம் விற்கும் பொதுமாதர்

பாலு டன்கனி சர்க்கரை கந்தந்
தேனெ னும்படி மெத்தரு சிக்கும்
பாத கம்பகர் சொற்களி லிட்டம் பயிலாமே

பாத பங்கய முற்றிட உட்கொண்
டோது கின்றதி ருப்புகழ் நித்தம்
பாடு மென்பது செய்ப்பதி யிற்றந் தவளியே

தால முன்புப டைத்தப்ர புச்சந்
தேக மின்றிம திக்கவ திர்க்குஞ்
சாக ரஞ்சுவ றக்கிரி எட்டுந் தலைசாய

* சாடு குன்றது பொட்டெழ மற்றுஞ்
சூர னும்பொடி பட்டிட யுத்தஞ்
சாத கஞ்செய்தி ருக்கைவி திர்க்குந் தனிவேலா
ஞால முண்டக ழூத்தினி லக்குந்
தேவ ரென்புநி ரைத்தெரி யிற்சென்
றூடு நின்றத கப்பனு கக்குங் குருநாதா
ஆட கம்புனை பொற்குடம் வைக்குங்
கோபு ரங்களி னுச்சியு டுத்தங்
காவி னன்குடி வெற்பினில் நிற்கும் பெருமாளே. (௮௬)

---

தனதன தனதன தத்தத் தத்தத் தாந்தாந் தனதான.

187. கொடியன பிணிகொடு விக்கிக் கக்கிக்
கூன்போந் தசடாகும்
குடிலுற வருமொரு வித்தைச் சித்தக்
† கோண்டீர்ந் தமையாதே
பொடிவன பரசம யத்துத் தப்பிப்
போந்தேன் தலைமேலே
பொருளது பெறவினி நட்புச் சற்றுப்
பூண்டாண் டருள்வாயே
துடிபட அலகைகள் கைக்கொட் டிட்டுச்
சூழ்ந்தாங் குடனாடத்
தொகுதொகு திகுதிகு தொக்குத் திக்குத்
தோந்தாந் தரி ‡ தாளம்
படிதரு பதிவ்ரதை ஒப்பச் சுத்தப்
பாழ்ங்கான் தனிலாடும்
பழநியுள் குமரகு ருத்தத் தைக்குப்
பாங்காம் பெருமாளே. (௮௭)

---

* சாடுகுன்று-மோதியடித்தமலை, † கோண்-மாறுபாடு. ‡ தாளம் படிதரு பதிவ்ரதை ஒப்ப-படிதரு பதிவ்ரதை தாளம் ஒப்ப எனக்கூட்டுக.

தனதன தனனத் தனனத் தனதன தனனத் தனனத்
தனதன தனனத் தனனத் தனதான.

188. கொலைவிழி சுழலச் சுழலச் சிலைநுதல் குனியக் குனியக்
கொடியிடை துவளத் துவளத் தனபாரக்
குவடணி சிதறச் சிதறக் கரவளை கதறக் கதறக்
குயில்மொழி பதறப் பதறப் ப்ரியமோகக்
கலவியி லொருமித் தொருமித் திலகிதழ் பருகிப் பருகிக்
கரமொடு தழுவித் தழுவிச் சிலநாளிற்
கையிலுள பொருள்கெட் டருள்கெட் டனைவரும் விடுசிச் சியெனக்
கவலைகள் பலபெற் றுலகிற் றிரிவேனோ
சலநிதி சுவறச் சுவறத் திசைநிலை பெயரப் பெயரத்
தடவரை பிதிரப் பிதிரத் திடமேருத்
தமனிய நெடுவெற் பதிரக் கணபண சிரம்விட் டகலச்
சமனுடல் கிழியக் கிழியப் பொருசூரன்
பெலமது குறையக் குறையக் கருவிகள் * பறையப் பறையப்
பெருநரி தொடரத் தொடரத் திரள்கூகை
பெடையொடு குழறக் குழறச் சுரபதி பரவச் சாரப்
பிரபல பழநிக் குமரப் பெருமாளே. (௮௮)

---

தானன தனன தானன தனன
தானன தனன தனதான.

189. தோரண கனக வாசலின் முழவு
தோன்முர சதிர முதிராத
தோகையர் கவரி வீச †வயிரியர்
தோள்வலி புகழ மதகோப
வாரண ரதப தாகினி துரக
மாதிர நிறைய அரசாகி
வாழினும் வறுமை கூரினு முனது
வார்கழ லொழிய மொழியேனே

---

பறைதல் ஒழிதல் †வயிரியர்-புகழ்ந்து பாடுவோர்.

பூரண புவன காரண * சவரி
பூதர களப தனபார
பூஷண நிருதர் தூஷண விபுதர்
பூபதி நகரி குடியேற
ஆரண வரத ‡ நீரிரு குடிமி
ஆனனன் வெருவ மயிலேறும்
ஆரிய பழநி வாழ்குக அழகும்
ஆண்மையு முடைய பெருமாளே. (அகூ)

தனதன தனதனத் தனதன தனதனத்
தனதன தனதனத் தனதான.

190. பரிமள மலரடுத் தகில்மண முழுகிமைப்
பரவிய ம்ருகமதக் குழல்மானர்
பருமணி வயிரமொத் திலகிய குழையினிற்
படைபொரு வனவிழிக் கயலாலே
எரியுறு மெழுகெனத் தனிமன மடையநெக்
கினிமையொ டுருவவிட் டவமேயான்
இருவினை நலியமெய்த் திறலுட னறிவுகெட்
டிடர்படு வதுகெடுத் தருள்வாயே
சொரிமத வருவிவிட் டொழுகிய புகர்முகத்
தொலைபடு கரமலைக் கிளையோனே
துடியிடை ஒருகுறக் குலமயில் தனையணைத்
தருண்மிகு பழநியுற் றிடுவோனே
அரியய னமரருற் றிடுதுய ரறவுடுக்
கையுமொகு மொகுவெனச் சதகோடி
அலகையு முடனடித் திடவடி அயிலெடுத்
தமர்செயு மறுமுகப் பெருமாளே. (கூ0)

---

* சவரி-குறத்தி, வள்ளிநாயகி. ‡ நீரிருகுடிமி-கங்கை தங்குஞ் சடை.

நான்காவது.

## திருவேரகம் என்னும்

## சுவாமிமலை.

இது கும்பகோணத்துக்கு மேற்கே 4-மைல் தூலைவிலிருக்கிறது.
இது முருகக்கடவுளது நான்காம் படை வீடு.

---

தனனதன தனனதன தனனா தனத்ததன
தனனதன தனனதன தனனா தனத்ததன
தனனதன தனனதன தனனா தனத்ததன தனதான.

91. குமரகுரு பரமுருக குகனே குறச்சிறுமி
கணவசர வணநிருதர் கலகா பிறைச்சடையர்
குருவெனந வுரையுதவு மயிலா எனத்தினமும் உருகாதே
குயில்மொழிநன் மடவியர்கள் விழியா லுருக்குபவர்
தெருவி * லன வரதமன மெனவே நடப்பர்நகை
கொளுமவர்களுடைமைமனமுடனே பறிப்பவர்கள் அனேவோரும்
தமதுவச முறவசிய முகமே மினுக்கியர்கள்
முலையிலுறு துகில்சரிய நடுவீ திநிற்பவர்கள்
தனமிலியர் மனமுறிய நழுவாஉழப்பியர்கண்வலையாலே
சதிசெய்தவ ரவர்மகிழ அணைமீ துருக்கியர்கள்
வசமொழுகி அவரடிமை எனமா தரிட்டதொழில்
தனிலுழலு மசடனையு னடியே வழுத்தவருள் தருவாயே
சமரமொடு மசுரர்படை களமீ தெதிர்த்தபொழு
தொருநொடியி லவர்கள்படை கெடவே லெடுத்தவனி
தனில்நிருதர் சிரமுருள ரணதூள் படுத்திவிடு செருமீதே
†தவனமொடு மலைகைநட மிடவீர பத்திரர்கள்
அதிரநிண மொடுகுருதி குடிகாளி கொக்கரிசெய்
தசையுணவு தனின்மகிழ விடுபேய் நிரைத்திரள்கள் பலகோடி
திமிதமிட நரி‡கொடிகள் கழுகா டரத்தவெறி
வயிரவர்கள் சுழலவொரு தனியா யுதத்தைவிடு
திமிரதின கரவமரர் பதிவாழ்வுபெற்றுலவு முருகோனே
திருமருவு புயனயனொ டயிரா வதக்குரிசில்
அடிபரவு பழநிமலை கதிர்காம முற்றுவளர்
சிவசமய அறுமுகவ திருவே ரகத்திலுறை பெருமாளே.

---

*அனவரதம்-எப்போதும். †தவனம்-தாகம். ‡கொடிகள்-காகம்.

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனதான.

192. குமர குருபர முருக சரவண
குகசண் முககரி பிறகான
குழக சிவசுத சிவய நமவென
குரவ னருள் குரு மணியேயென்
றமுத இமையவர் திமிர்த மிடுகட
லதென அநுதினம் உனையோதும்
அமலை அடியவர் கொடிய வினைகொடும்
அபய மிடுகுரல் அறியாயோ
*திமிர எழுகட லுலக முறிபட
திசைகள் பொடிபட வருசூரர்
சிகர முடியுடல் புவியில் விழ†வுயிர்
திறைகொ டமர்பொரு மயில்வீரா
நமனை உயிர்கொளு மழலி னிணைகழல்
நதிகொள் சடையினர் குருநாதா
நளின ‡குருமலை மருவி அமர்தரு
நவிலு மறைபுகழ் பெருமாளே.(உ)

தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன தனதான.

193. கோமள வெற்பினை ஒத்தத னத்தியர்
காமனை ஒப்பவர் சித்தமு ருக்கிகள்
கோவையி தழ்க்கனி நித்தமு விற்பவர் மயில்காடை
§கோகில நற்டற வத்தொடு குக்குட
||ஆரணி அப்புள்வ கைக்குரல் கற்றவர்
கோலவி ழிக்கடை இட்டும ருட்டிகள் விரகாலே

*திமிர-இருண்ட †உயிர்திறைகொள்-உயிர்வதை செய்கின்ற. ‡குருமலை என்பது சுவாமிமலை §கோகிலம்-கிளி. || ஆரணிபப்புள்-குயில்.

தூமம லர்ப்பளி மெத்தைப டுப்பவர்
யாரையு மெத்திம னைக்குள ழைப்பவர்
சோலைவ னக்கிளி யொத்தமொ ழிச்சியர் நெறிகூடா

தூசுநெ கிழ்த்தரை சுற்றியு டுப்பவர்
காசுப றிக்கம றித்துமு யக்கிகள்
தோதக வித்தைப டித்துந டிப்பவர் உறவாமோ

*மாமர மொத்துவ ரிக்குள்நெ ருக்கிய
சூரனை வெட்டிநி ணக்குட லைக்கொடி
வாரண மெச்சவ ளித்தவ யிற்குக கதிர்காம

மாமலை யிற்பழ நிப்பதி யிற்றனி
மாகிரி யிற்றணி கைக்கிரி யிற்பர
மாகிரி யிற்றிரை சுற்றிவ ளைத்திடும் அலைவாயில்

ஏமவெ யிற்பல வெற்பினி னற்பதி
ஞாலல கத்தினி லுற்றுறு பத்தர்கள்
ஏதுநி னைத்தது மெத்தவ ளித்தருள் இளையோனே

ஏரக வெற்பெனு மற்புத மிக்கசு
வாமிம லைப்பதி மெச்சிய சித்தவி
ராஜத லக்ஷண லக்ஷ்மி பெற்றருள் பெருமாளே. (௩)

---

தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன தந்ததான.

194. வார்குழ லைச்சொரு கிக்†கரு†விற்குழை
காதொடி ணைத்தசை யக்கதிர் பற்கொடு
வாயிதழ் §பொற்பம லர்க்குமி ழொத்துள கண்டக்ரீவ

வார்கமு கிற்புய நற்கழை பொற்குவ
டாமெனு மற்புத பொற்குட மொத்திணை
மார்பழ கிற்பொறி முத்தொளிர் சித்திர ரம்பைமாதர்

---

*மாமரம் ஒத்துஉவரிக்குள் நெருங்கிய எனப்பிரிக்க; உவரி சமுத்திரம்.
† கரு-பெரிய. † வில்-பிரகாசம் பொருந்திய § பொற்ப-அழகு செய்ய.

காருறும் * வித்திடை யிற்கத வித்தொடை
சேர்தரு நற்பிர சத்தட முட்கொடு
கால்மறை யத்துவ ளச்செறி பொற்கலை ஒண்குலாவக்

கார்குயி லைக்குர லைக்கொடு நற்றெரு
வீதில்நெ ளித்துந கைத்துந டிப்பவர்
காமனு கப்பம ளிச்சுழல் குத்திரர் சந்தமாமோ

சூரர்†ப தைக்கர வுட்கிநெ ளித்துயர்
ஆழியி ரைப்பதி ணக்குட லைப்புடை
சூழநரிக்கெரு டற்‡கொடி பற்பல சங்கமாகச்

சூழ்கிரி யைக்§கைத டித்தும லைத்திகை
யானையு ழக்கிந டுக்கிம தப்பொறி
சோரந கைத்தயி லைக்கொடு விட்டருள் செங்கைவேலா

ஏரணி நற்குழ லைக்கக னச்சசி
மோகினி யைப்புணர் சித்தவொ ரற்புத
வேடமு தச்சொரு பத்தகு றத்திம ணங்கொள்வோனே

ஏரக வெற்பெனு மற்புத மிக்கசு
வாமிம லைப்பதி நிற்குமி லக்ஷண
ராஜத லக்ஷண லக்ஷ்மி பெற்றருள் தம்பிரானே. (ச)

---

தனதான தத்த தனதான தத்த
தனதான தத்த தனதான.

195 செகமாயை உற்றெ னகவாழ்வில் வைத்த
திருமாது கெர்ப்பம் உடலூறித்

தெசமாத முற்றி வடிவாய்நி லத்தில்
திரமாய ளித்த பொருளாகி

‖ மகவாவி னுச்சி விழியான னத்தில்
மலைநேர்பு யத்தில் உறவாடி

---

*வித்து-மின்னல். †பதைக்கரவுட்கி-பதைக்க அரவு உட்கி. ‡கொடி-காகம். §கைதடித்து-அவயவச்சிதவுசெய்து. ‖மகவாவின்-மக அவாவின்.

மடிமீத டுத்து விளையாடி நித்த
மணிவாயில் *முத்தி தரவேணும்

முகமாய மிட்ட குறமாதி னுக்கு
முலைமேல ணைக்க வருநீதா

முதுமாம றைக்கு ளொருமாபொ ருட்கு
மொழியேயு ரைத்த குருநாதா

தகையாதெ னக்கு னடிகாண வைத்த
தனியேர கத்தில் முருகோனே

தருகாவி ரிக்கு வடபாரி சத்தொர்
சமர்வேலெ டுத்த பெருமாளே. (ரு)

---

196. மருவே செறித்த †குழலார் மயக்கி
மதனா கமத்தின் விரகாலே

மயலே யெழுப்பி இதழே அருத்த
மலைபோல் முலைக்குள் உறவாகிப்

பெருகாத லுற்ற தமியேனை நித்தல்
பிரியாது பட்ச மறவாதே

பிழையேபொ றுத்து னிருதாளி லுற்ற
பெருவாழ்வு பற்ற அருள்வாயே

குருவா யரற்கு முபதேசம் வைத்த
குகனே குறத்தி மணவாளா

குளிர்காமி குத்து வளர்பூக மெத்து
குடகா விரிக்கு வடபாலார்

திருவே ரகத்தி லுறைவா யுமைக்கொர்
சிறுவா கரிக்கு மிளையோனே

திருமால் தனக்கு மருகா அரக்கர்
சிரமே துணித்த பெருமாளே. (சா)

---

*முத்தி - முத்தம். †குழலார் - குழலோடுகூடிய பெண்கள்.

தனனதன தானந் தனனதன தானந்
தனனதன தானந் தனதான.

197. இராவினிருள் போலும் பராவுகுழ லாலும்
இராமசர மாகும் விழியாலும்

இராகமொழி யாலும் பொருதமுலை யாலும்
இராதவிடை யாலும் இளைஞோர்நெஞ்

சராவியிரு போதும் பராவிவிழ வேவஞ்
தடாதவிலை கூறும் மடவாரன்

படாமலடி யேனும் சுவாமியடி தேடும்
அநாதிமொழி ஞானந் தருவாயே

குராவினிழல் மேவுங் குமாரனென நாளும்
குலாவியினி தோதன் பினர்வாழ்வே

*குணாலமிடு சூரன் பணாமுடிக டோறுங்
குடாவியிட வேலங் கெறிவோனே

†துராலுமிகு தீமுன் பிராதவகை போலும்
தொடாமல்வினை ஓடும் படிநாளும்

‡சுபானமுறு ஞானந் தபோதனர்கள் சேருஞ்
சுவாமிமலை வாழும் பெருமாளே. (எ)

---

198. கடாவினிடை வீரங் கெடாமலினி தேறுங்
கடாவினிக ராகுஞ் சமனாரும்

கடாவிவிடு தூதன் கெடாதவழி போலுங்
கனாவில்விளை யாடுங் கதைபோலும்

§இடாதுபல தேடுங் கிராதர்பொருள் போலிங்
கிராமலுயிர் சோரும் படிமாள்வேன்

இதாமெனிரு போதும் சதாவின்மொழி யாலின்
றியானுமுனை ஓதும் படிபாராய்

---

* குணாலம்-குணாலை,வீராவேசத்தாற்கொக்கரித்தல். † துரால்-துரும்பு. ‡ சுபானம் - நன்மையாக உட்கொளல். § இடாது பல தேடுங்கிராதர்-கொடாது பல பொருளைத் தேடி வைக்குங் கொடிய உலோபியர்.

விடாதுாட நாளும் பிடாரியுட னாடும்
வியாகரண ஈசன் பெருவாழ்வே
விகாரமுறு சூரன் *பகாரமுயிர் வாழ்வும்
விகாதமுற வேலங் கெறிவோனே
தொடாதுநெடு தூரந் தடாதுமிக வோடுஞ்
சுவாசமது தானும் புலனோடும்
சுபானமுறு ஞானந் தபோதனர்கள் சேருஞ்
சுவாமிமலை வாழும் பெருமாளே. (அ)

---

தனனா தனத்த தந்த தனனா தனத்த தந்த
தனனா தனத்த தந்த தனதான.

199. கடிமா மலர்க்கு ளின்ப முளவே ரிகக்கு நண்பு
தருமா கடப்ப மைந்த தொடைமாலை
கனமேரு வொத்தி டும்ப னிருமாபு யத்த ணிந்த
கருணா கரப்ர சண்ட கதிர்வேலா
வடிவார் குறத்தி தன்பொ னடிமீ துநித்த முந்தன்
முடியான துற்று கந்து பணிவோனே
வளவாய்மை சொற்ப்ர பந்த முளகீர னுக்கு கந்து
மலர்வாயி லக்க ணங்கள் இயல்போதி
அடிமோனை சொற்கி ணங்க †உலகாமு வப்ப என்றும்
அருளா ‡லளிக்கு கந்த பெரியோனே
அடியே னுரைத்த புன்சொ லதுமீ துநித்த முந்தன்
அருளே தழைத்து கந்து வரவேணும்
§செடிநே ருடற்கு டம்பை தனின்மே வியுற்றி டுந்த
படிதா னலக்க ணிங்ஙன் உறலாமோ
திறமா தவர்க்க ணிந்து னிருபாத பத்ம முந்து
திருவே ரகத்த மர்ந்த பெருமாளே. (௯)

---

* பகாரம்-பகரம், அலங்காரம். †உலகம் என்பது உலகாம்என்றாயிற்று. 'உலகம் உவப்ப என்று உன் அருளால் அளிக்க'' என்றது நக்கீரர்முருகக் கடவுளின் அருள்பெற 'உலகம் உவப்பவலனேர்புதிரிதரு' என்றெடுத்து அருளிச்செய்த திருமுருகாற்றுப்படையைக் குறித்தது. ‡அளிக்க-உகந்த எனப்பிரிக்க. § செடிநேருடற் குடம்பை - அற்பாயுளோடு கூடிய சரீரம்.

200. விழியால் மருட்டி நின்று முலைதூ சகற்றி மண்டு
* விரகான லத்த ழுந்த நகையாடி
விலையா கமிக்க செம்பொன் தரவே பரப்பி வஞ்ச
விளையா டலுக்கி சைந்து சிலநாள்மேல்
மொழியா தசொற்கள் வந்து சிலுகாகி விட்ட தொந்த
முழுமாயை யிற்பி ணங்கள் வசமாகி
முடியா துபொற்ச தங்கை தருசீத வெட்சி துன்று
முதிரா தநற்ப தங்கள் தருவாயே
பொழிகார் முகிற்கி ணைந்த யமராஜ னுட்க அன்று
பொருதா னெடுத்த தந்தை மகிழ்வோனே
புருகூ தனுட்கு ளிர்ந்த கனகா புரிப்ர சண்ட
புனிதா †ம்ருகக்க ரும்பு புணர்மார்பா
செ‡ழுவா ரிசத்தி §லொன்று முதுவே தன்வெட்க அன்று
திருவாய் மைசெப்பி நின்ற முருகோனே
திரளா மணிக்கு லங்கள் அருணோ தயத்தை வென்ற
திருவே ரகத்த மர்ந்த பெருமாளே. (சo)

---

தனதன்ன தானதன தானதன தானதன
தானதன தானந் தனதான.

201. அவாமருவி னாவுசுவை காணுமட வாரெனுமய
|| வார்கனலில் வாழ்வென் றுணராதே
அராநுகர வாதையுறு தேரைகதி நாடுமறி
வாகியுள மால்கொண் டதனாலே
சிவாயமெனு நாமமொரு காலுநினை யாத¶திமி
ராகரனை வாவென் றருள்வாயே
திரோதமல மாறுமடி யார்களரு மாதவர்தி
யானமுறு பாதந் தருவாயே

---

* விரக அனலம்-விரகாக்கினி. †ம்ருகக் கரும்பு-மான்மகளாகிய வள்ளியம்மை. ‡ வாரிசம் - தாமரை. § ஒன்று - உகிக்கின்ற. || அவார் - அவர் - அல்லது அ, ஆர் எனப்பிரித்து அந்த நிறைந்த எனக்கொள்ளினும் பொருந்தும். ¶ திமிராகரன் - திமிர ஆகரன், இருட்கிட மானவன்.

உவாவினிய காவினினு லாவுமயில் வாகனமு
லாசமுட னேறுங் கழலோனே

உலாவுதய பானுசத கோடியுரு வானவொளி
வாகுமயில் வேலங் கையிலோனே

துவாதசபு யாசலச டானனவ ராசிவசு
தாவெயினர் மானைன் புடையோனே

சுராதிபதி மாலயனு மாலொடு சலாமிடுசு
வாமிமலை வாழும் பெருமாளே. (கக)

---

தனதன தனந்த தான தனதன தனந்த தான
தனதன தனந்த தான தனதான.

202. *இருவினை புனைந்து ஞான விழி†முனை திறந்து நோயின்
‡இருவினை இடைந்து போக மலமூட

இருளற விளங்கி ஆறு முகமொடு கலந்து பேதம்
இலையென இரண்டு பேரும் அழகான

§பரிமள சுகந்த வீத மயமென மகிழ்ந்து தேவர்
பணியவிண் மடந்தை பாத மலர்தூவப்

பரிவுகொ டநந்த கோடி முனிவர்கள் புகழ்ந்து பாடு
பருமயி லுடன்கு லாவி வரவேணும்

அரியய னறிந்தி டாத அடியிணை சிவந்த பாதம்
அடியென விளங்கி யாடு நடராஜன்

அழலுரு மிரும்பின் மேனி மகிழ்மர கதம்பெ ணாகம்
‖அயலணி சிவன்பு ராரி அருள்சேயே

மருவலர் கடிண்ப ணார முடியுடல் நடுங்க ஆவி
மறவியு ணவென்ற வேலை உடையோனே

வளைகுல¶மலங்கு காவி ரியின்வட புறஞ்சு வாமி
மலைமிசை விளங்கு தேவர் பெருமாளே. (கஉ)

---

*இருவினை-பெருஞ்செயல், சிவயோகம். †முனை-லலாட சந்திச்சுழி ‡ இருவினை-புண்ணியபாவங்கள். §பரிமளசுகந்த வீதம்மயம்என்ன மலரும்அதன் மணமும்கலந்திருக்குந் தன்மையென்று சொல்லும்படி. ‖அயல்-அருகுற.

தந்தத் தனதன தனதன தனதன
தந்தத் தனதன தனதன தனதன
தந்தத் தனதன தனதன தனதன தனதான.

203. எந்தத் திகையினும் மலையினும் உவரியின்
எந்தப் படியினு முகடினு முளபல
எந்தச் சடலமும் *உயிரியை பிறவியின் உழலாதே
இந்தச் சடமுட னுயிர்நிலை பெறநளி
னம்பொற் கழலிணை களில்மரு மலர்கொடு
என்சித் தமுமன முருகிநல் சுருதியின் முறையோடே
சந்தித் தரகர சிவசிவ சரணென
கும்பிட் டிணையடி அவையென தலைமிசை
தங்கப் புளகித மெழவிரு விழிபுனல் குதிபாயச்
சம்பைக் கொடியிடை விபுதையி னழகுமு
னந்தத் திருநட மிடுசர ணழகுற
சந்தச் சபைதனி லெனதுள முருகவும் வருவாயே
தொந்தத் திகுகுட தகுகுட டிமுடிமி
தந்தத் தனதன டுடுடுடு டமடம
துங்கத் திசைமலை உவரியு மறுக†ச லரிபேரி
‡துன்றச் சிலைமணி கலகல கலினென
சிந்தச் சுரர்மல ரயன்மறை புகழ்தர
துன்புற் றவுணர்கள் நமனுல குறவிடும் அயில்வேலா
கந்தைச் சடைமுடி கனல்||வடி வடலணி
எந்தைக் குயிரெனு மலைமகள் மரகத
கந்தப் பரிமள தனகிரி உமையருள் இளையோனே
கஞ்சப் பதமிவர் திருமகள் குலமகள்
அம்பொற் கொடியிடை புணரரி மருகநல்
கந்தப் பொழில்திகழ் குருமலை மருவிய பெருமாளே. ()

* உயிரியை - உயிரிலைசந்த. † சலரி - சல்லரி, பம்பை என்னும் மேளம். ‡ துன்ற - நெருங்க. || வடிவடல் - வடிவு அடல். அடல், வெற்றி.

தனதனன தனதனன தான தந்தனந்
தனதனன தனதனன தான தந்தனந்
தனதனன தனதனன தான தந்தனந் தனதான.

204. ஒருவரையு மொருவரறி யாம லுந்திரிந்
திருவினையி னிடர்கலியொ டாடி நொந்துநொந்
துலையிலிடு மெழுகதென வாடி முன்செய்வஞ் சனையாலே

ஒளிபெறவெ *எழுபு†மர பாவை துன்றிடுங்
கயிறுவித மெனமருவி ஆடி விண்பறிந்
தொளிருமின லுருவதென ஓடி அங்கம்வெந் திடுவேனைக்

கருதியொரு பரமபொரு ளீது என்றுவென்
செவியிணையி னருளியுரு வாகி வந்தவென்
கருவினையொ டருமலமு நீறு கண்டுதண் டருமாமென்

கருணைபொழி கமலமுக மாறு மிந்துளந்
தொடைமகுட முடியுமொளிர் நூபு ரஞ்சரண்
கலகலென மயிலின்மிசை ஏறி வந்துகந் தெனையாள்வாய்

திரிபுரமும் மதனுடலும் நீறு கண்டவன்
தருணமழ விடையனட ராஜ னெங்களுந்
திகழருண கிரிசொருப ஜோதி அந்தமங் கறியாத

சிவயநம நமசிவய கார ணன்சுரந்
தமுதமதை அருளியெமை ஆளு மெந்தைதன்
திருவுருவின் மகிழெனது தாய்பயந்திடும் புதல்வோனே

குருகுகொடி உடன்மயிலி லேறி மந்தரம்
புவனகிரி சுழலமறை யாயி ரங்களும்
குமரகுரு எனவலிய சேட னஞ்சவந் திடுவோனே

குறமகளி னிடைதுவள பாத செஞ்சிலம்
பொலியிடொரு சசிமகளொ டேக லந்துதிண்
குருமலையின் மருவுகுரு நாத உம்பர்தம் பெருமானே.

* எழுபு-எழுந்து. † மரப்பாவை என்பது சந்தம் நோக்கி இயல்பாயிற்று.

தனதனன தந்த தான தனதனன தந்த தான
தனதனன தந்த தான தனதான.

205. கதிரவனெ ழுந்து லாவு திசையளவு கண்டு மோது
கடலளவு கண்டு மாய மருளாலே
கணபணபு யங்க ராஜன் முடியளவு கண்டு தாள்கள்
கவினறந டந்து தேயும் வகையேபோய்
இதமிதமி தென்று நாளு மருகருகி ருந்து கூடும்
இடமிடமி தென்று சோர்வு படையாதே
இசையொடுபு கழ்ந்த போது நழுவியப்ர சண்டர் வாசல்
இரவுபகல் சென்று வாடி உழல்வேனோ
மதுகரமி டைந்து வேரி தருநறவ முண்டு பூசு
மலர்வளநி றைந்த பாளை மலரூடே
வகைவகையெ ழுந்து சாம வதிமறை*வி யந்து பாட
மதி†நிழலி டுஞ்சு வாமி மலைவாழ்வே
அதிரவரு சண்ட வாயு எனவருக ருங்க லாப
அணிமயில்வி ரும்பி ஏறும் இளையோனே
அடைவொடுல கங்கள் யாவு முதவிநிலை கண்ட பாவை
அருள்புதல்வ அண்ட ராஜர் பெருமாளே. (கரு)

---

தனதனன தந்த தானனத்
தனதனன தந்த தானனத்
தனதனன தந்த தானனத் தனதான

206. கறைபடுமு டம்பி ராதெனக்
கருதுதலொ ழிந்து வாயுவைக்
‡ கருமவச னங்க ளால்மறித் § தனலூதிக்
கவலைபடு கின்ற யோககற்
பனைமருவு சிந்தை போய்விடக்
கலகமிடு மஞ்சும் வேரறச் செயல்மாளக்

---

* வியந்து-வியக்க. † நிழலிடும்-குளிர்ச்சியைத்தரும். ‡ கருமவசனம்-மந்திரங்கள். § அனலூதல்-வாயுவால் மூலாக்கினியை எழுப்புதல்.

குறைவறநி றைந்த மோனநிற்
குணமதுபொ ருந்தி வீடுறக்
குருமலைவிளங்கு ஞானசற் — குருநாதா

குமரசர ணென்று கூதளப்
புதுமலர்சொ ரிந்து கோமளப்
பதயுகள புண்ட ரீகமுற் — றுணர்வேனோ

சிறைதளவி ளங்கு பேர்*முடிப்
புயலுடன டங்க வேபிழைத்
திமையவர்கள் தங்க ளூர்புகச் — சமராடித்

திமிரமிகு சிந்து வாய்விடச்
சிகரிகளும் வெந்து நீறெழத்
†திகிரிகொள நந்த சூடிகைத் — திருமாலும்

பிறைமவுலி மைந்த கோவெனப்
பிரமனைமு னிந்து காவலிட்
டொருநொடியில் மண்டு சூரனைப் — பொருதேறிப்

பெருகுமத கும்ப ‡லாளிதக்
கரியுதவு மண்டர் வாரணப்
பிடிதனைம ணந்த சேவகப் — பெருமாளே. (கஏ)

---

தனதனன தான தத்த தனதனன தான தத்த
தனதனன தான தத்த தனதான.

207. சரணகம லால யத்தை அரைநிமிஷ நேர மட்டில்
தவமுறைதி யானம் வைக்க — அறியாத

சடகசட மூட மட்டி பவவினையி லேச னித்த
தமியன்மிடி யால்ம யக்கம் — உறுவேனோ

கருணைபுரி யாதிருப்ப தெனகுறையி வேளை செப்பு
கயிலைமலை நாதர் பெற்ற — குமரோனே

கடகபுய மீதி ரத்ந மணியணிபொன் மாலை செச்சை
கமழுமணி மார்க டப்ப — மணிவோனே

---

* முடிப்புயல்-இந்திரன். † திகிரி-சக்கரம். ‡ லாளிதம்-லளிதம், அழகு.

* தருணமிதை யாமி குத்த கனமது றுநீள்ச வுக்ய
சகலசெல்வ யோக மிக்க பெருவாழ்வு

தகைமைசிவ ஞான முத்தி பரகதியு நீகொ டுத்து
தவிபுரிய வேணு நெய்த்த வடிவேலா

அருணதள பாத பத்ம மதுநிதமு மேது திக்க
அரியதமிழ் தான ளித்த மயில்வீரா

அதிசயம நேகமுற்ற பழநிமலை மீது
அழகதிரு வேரகத்தின் முருகோனே. (கள)

---

தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
தத்ததன தத்ததன தத்ததன தத்ததன தந்ததான.

208. † சுத்திய நரப்புடனெ லும்புறுத சைக்குடலொ
டப்புடனி ணச்சளிவி ழுப்புடனி ரத்தகுகை
சுக்கிலம்வி ளைப்புழுவொ டக்கையும லக்குமயிர் சங்குலாவே

துக்கம்வினை வித்தபிணை யற்‡சரைமு ளைப்பெருகு
குட்டமொடு விப்புருதி புற்றெழுதல் முட்டுவலி
துச்சிபிள வைப்பொருமல் பித்தமொடு றக்கமிக அங்கமூடே

எத்தனைநி னைப்பையுமி னைப்பையும யக்கமுறல்
எத்தனைச லிப்பொடுக லிப்பையுமி டற்பெருமை
எத்தனைக சத்தையும லத்தையும டைத்தகுடில் பஞ்சபூதம்

எத்தனைரு ணக்கையுமி ணக்கையும னக்கவலை
எத்தனைக வட்டையுமு டக்கையுமு யிர்க்குவரும்
எத்தனைபி றப்பையுமி றப்பையுமெ டுத்தலகில் மங்குவேனோ

தத்தனத னத்தனத னத்தனென வொத்தியிலை
ஒத்தமுர சத்துடியி டக்கையுமு டுப்பறைகள்
சத்தமறை யத்தொகுதி யொத்தசெவி ரத்தவெள மண்டியோடச்

§சக்கிரிநெ ளிப்பவவு ணப்பிணமி தப்பமரர்
கைத்தலமி ரிக்கநற ரச்சிவமி ழைத்தமென
சக்கிரகி ரிச்சுவர்க ளக்கணமெ பக்குவிட வென்றவேலா

---

* தருணமிதையா—தருணம் இது ஐயா. † சுத்திய-இது சுற்றிய என்பதன் மரூஉ. ‡ சரைமுளை—அருவருக்கத்தக்க ரத்தநீர் § சக்கிரி-சேடன்.

தனதனன தான தந்த தனதனன தான தந்த
தனதனன தான தந்த தனதான.

210. தருவரிவ ராகு மென்று பொருணசையி னூடிவண்டு
தனைவிடுசொல் தூது * தண்ட முதலான

சரசகவி மாலை சிந்து கலிநிலைக ளேச லின்ப
† தருமுதல தான செஞ்சொல் வகையாடி

மருவுகையு மோதி நொந்து அடிகள்முடி யேடெ ரிந்து
வரினுமிவர் வீத மெங்கள் இடமாக

வருகுமது போது மென்ற ஒருபணமு தாசி னஞ்சொல்
மடையரிட மேந டந்து மனம்வேறாய்

உருகிமிக ஆகம் வெந்து கவிதைசொலி யேறி நிந்துள்
உழல்வதுவு மேத விர்ந்து விடவேநல்

உபயபத ‡ மால்வி ளங்கி இகபரமு மேவ இன்பம்
உதவியெனை யாள அன்பு தருவாயே

குருகினொடு நாரை அன்றில் இரைகள்மிக நாடி டங்கள்
குதிகொளிள வாளை கண்டு பயமாகக்

குரைகடல்க ளேய திர்ந்து வருவதென வேவி ளங்கு
குருமலையின் மேல மர்ந்த பெருமாளே. (௨௦)

---

தானன தான தத்த தானன தான தத்த
தானன தான தத்த தனதான.

211. நாவேறு பாம ணத்த § பாதார மேநி னைந்து
|| நாலாறு நாலு பற்று வகையான

¶ நாலாரு மாக மத்தி னூலாய ஞான முத்தி
நாடோறு நாலு ரைத்த நெறியாக

---

* தண்டம் - தண்டகம். † தருபதகீர்த்தனை இசைப்பாட்டு. ‡ மால்-ஆசை. § பாதாரம் - பாதாரவிந்தம். || நாலாறு நாலுபற்று வகையான ஆகமம் - இருபத்தெட்டு சிவாகமங்கள். ¶ நாலாரும் - சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நாலு பாதங்கள் பொருந்தியுள்ளனவான,

நீவேறெ னாதிருக்க நான்வேறெ னாதிருக்க
நேராக வாழ்வ தற்குன் அருள்கூர

நீடார்*ச டாதா ரத்தின் மீதேப ராப ரத்தை
நீகாணெ னா†வ னைச்சொல் அருளவாயே

சேவேறு மீசர் சுற்ற மாஞான போத புத்தி
சீராக வேயு ரைத்த குருநாதா

தோரார்கள் நாடு சுட்ட சூரார்கள் மாள வெட்டு
தீராகு காகு றத்தி மணவாளா

காவேரி நேர்வ டக்கி லேவாவி பூம ணத்த
காவார்சு வாமி வெற்பின் முருகோனே

கார்போலு மேனி பெற்ற மாகாளி வாலை சத்தி
காமாரி வாமி பெற்ற பெருமாளே. (உக)

---

தனதன தான தந்த தனதன தான தந்த
தனதன தான தந்த தனதான.

212. நிலவினி லேயி ருந்து வயாகால வேதெ ரிந்து
நிறைகுழல் மீத ணிந்து குழைபுதாவும்

நிகரறு வேலி னங்கள் வரிபர வாச கங்கள்
நினைவற வேயொ ழிந்து பரிதாவிசர்

கலபம தேக யங்க ளனவர வேபு ரிந்து
கனியித ழேப ருந்தி அநுராக

கலவியி லேமு யங்கி வனிதையர் பால்ம யங்கு
கபடனை யாள உன்றன் அருள்கூராய்

உலகமொ ரேழு மண்டர் உலகமும் ஈசர் தங்கு
முயர்கயி லாய முர்பொன் வரைதானும்

உயிரொடு பூதமைந்து பொருளுமு லாவி நின்ற
உமைபரு வால்வ ளர்ந்த குமரேசா

* சடாதாரம்-மூல தாரம் முதலிய ஆறு தாரம். † அனைசொல்-ஐக்கிய பதம்.

குலைபடு சூர னங்க மழிபட வேலெறிந்த
குமாரக டோர அங்கண் மயில்வாழ்வே
கொடுமுடி யாய்வ ளர்ந்து புயனிலை போலு யர்ந்த
குருமலை மீது யர்ந்த பெருமாளே. (உஉ)

---

தனதன தானன தனதன தானன
தனதன தானன தனதான.

213. பரவரி தாகிய வரையென நீடிய
பணைமுலை மீதினி லுருவான
பணிகளு லாவிட இழையிடை சாய்தரு
பயிலிகள் வாள்விழி அயிலாலே
*நிரவரி யோடியல் குழல்களி னுள்மலர்
நிரைதரு மூரலின் நகைமீது
நிலவியல் சேர்முக மதிலுயர் மாமயல்
நிலையெழு வேயலை வதுவாமோ
† அரவணை யார்குழை பரசிவ ஆரண
அரனிட பாகம துறைசோதி
அமையுமை டாகினி திரிபுரை நாரணி
அழகிய மாதருள் புதல்வோனே
குரவணி பூஷண சரவண தேசிக
குககரு ணாநிதி அமரேசா
குறமக ளானைமின் மருவிய பூரண
குருகிரி மேவிய பெருமாளே. (உங)

---

தனன தான தத்த தனன தான தத்த
தனன தான தத்த தனதான.

214. மகர கேத னத்த னுருவி லானெ டுத்து
மதுர நாணி இட்டு நெறிசேர்வார்
மலைய வேவ ளைத்த சிலையி னூடெ ளித்த
வலிய ‡ சாய கக்கண் படமாதர்

* நிரவரியோடு - நிரம்பிய வண்டுகளோடு. † அரவணையார் குழை - விஷ்ணுவானவர் மனங்குழைந்து அன்பு செய்யப்பட்ட. ‡ சாயகம் - அம்பு.

இகழ வாச முற்ற தலையெ லாம்வெ ளுத்தும்
இளமை போயொ ளித்து விடுமாறும்

இடைவி டாதெ டுத்த பிறவி வேரறுத்துன்
இனிய தாள ளிப்ப தொருநாளே

அகில மேழு மெட்டு வரையின் மீது முட்ட
அதிர வேந டத்து மயில்வீரா

அசுரர்சேனை கெட்டு முறிய வான வர்க்கு
அடைய வாழ்வ ளிக்கும் இளையோனே

மிகநி லாவெ றித்த * அமுத வேணி நிற்க
விழைசு வாமி வெற்பில் உறைவோனே

விரைய ஞான வித்தை அருள்செய் தாதை கற்க
வினவ ஓது வித்த பெருமாளே. (உ [illegible])

---

தனன தான தனன தந்த
தனன தான தனன தந்த
தனன தான தனன தந்த தனதான.

215. முறுகு காள விட†ம யின்ற
இருகண் வேலி னுளம யங்கி
முளரி வேரி முகைய டர்ந்த முலைமீதே

முழுகு காதல் தனைம றந்து
பரம ஞான ஒளிசி றந்து
முகமொ ராறு மிகவி ரும்பி அயராதே

அறுகு தாளி நறைய விழ்ந்த
குவளை வாச மலர்க ரந்தை
அடைய வாரி மிசைபொ ழிந்துன் அடிபேணி

அவச மாகி உருகு தொண்ட
ருடன தாகி விளையு மன்பின்
அடிமை யாகு முறைமை யொன்று அருள்வாயே

---

* அமுதவேணி - சிவபெருமான் † அயின்ற உண்ட.

தறுகண் வீரர் தலைய ரிந்து
பொருநர் சூர னுடல்பி ளந்து
தமர வேலை சுவற வென்ற வடிவேலா
தாள மூல வுமைம டந்தை
முலையி லார வமுத முண்டு
தரணி ஏழும் வலம்வ ருந்தின் மயில்வீரா
மறுவி லாத தினைவி ளைந்த
புனம்வி டாம லிதணி ருந்து
வலிய காவல் புனைய ணங்கின் மணவாளா
மருவு *ஞாழ லணிசெ ருந்தி
அடவி †சூத வனநெ ருங்கி
வளர்சு வாமி மலைய மர்ந்த பெருமாளே. (உ௫)

தான தத்த தந்த தான தத்த தந்த
தான தத்த தந்த தனதான.

216. வார முற்ற பண்பின் மாத முற்ற நண்பின்
ஈடு மெய்த்து யர்ந்து வயதாகி
வாலை யிற்றி ரிந்து கோல மைக்கண் மங்கை
மார்க ளுக்கி சைந்து பொருள்தேடி
ஆர மிக்க பொன்க ளால மைத்த மர்ந்த
மாப ணிக்கள் விந்தை அதுவான
‡ஆட கொப்ப மைந்த ஓலை முத்த முங்கொ
டாவி மெத்த நொந்து திரிவேனோ
சூரனைத்து றந்து வேர றப்பி ளந்து
சூழ்சு ரர்க்க ணன்பு செயும்வீரா
சூக ரத்து ரம்பு தானெ டுத்து வந்த
சூத னுக்கி சைந்த மருகோனே
ஏரெ திர்த்து வந்து நீர்கள் கட்டி அன்று
தானி றைக்க வந்த தொரு§சாலி
யேமி குத்து யர்ந்த மாவ யற்கள் மிஞ்சும்
ஏர கத்த மர்ந்த பெருமாளே. (உசு)

* ஞாழல் - குங்குமமரம் † சூதவனம்-பவளவனம். ‡ஆடகொப்பு-ஆடகொப்பு, பொன்னாலாகிய காதணி § சாலி - நெற்பொதி.

தனனதன தான தனதன தந்தன
தனனதன தான தனதன தந்தன
தனனதன தான தனதன தந்தன தனதான.

217. விடமும் *வடி வேலு மதனச ரங்களும்
வடுவுநிக ரான மகரநெ டுங்குழை
விரவியுடன் மீளும் விழிகளு மென்புழு கதுதோயும்

ம்ருகமதப டீர பரிமள குங்கும
மணியுமிள நீரும் வடகுல குன்றமும்
வெருவுவன பார புளகித னங்களும் வெகுகாம

நடனபத நூபு ரமுமுகில் கெஞ்சிட
மலர்சொருகு கேச †பாரமு மிலங்கிய
நளினமலர் சோதி மதிமுக விம்பமும் அனநேராம்

நடையுநளிர் ‡மாதர் §நிலவுதொ ழுந்தனு
முழுதுமபி ராம மணியொளி துன்றிய
நகையுமுள மாதர் கலவியி னின்புறு நிலைபோமோ

வடிவுடைய மானு மிகல்கர னுந்திகழ்
எழுவகைம ராம ரமுநிக ரொன்றுமில்
வலியதிறல் வாலி உரமுநெ டுங்கடல் அலையேழும்

மறநிருதர் சேனை முழுதுமி லங்கைமன்
வகையிரவி போலு மணியும லங்க்ருத
மணிமவுலி யான வொருபதும் விந்திர பதநாளும்

அடைவலமு மாள விடுசர அம்புடை
தசரதகு மார ரகுகுல புங்கவன்
அருள்புனைமு ராரி மருகவி ளங்கிய மயிலேறி

அடையலர்கள் மாள வொருநிமி டந்தனில்
உலகைவல மாக நொடியினில் வந்தவ
அழகியசு வாமி மலையில மர்ந்தருள் பெருமாளே. (உஎ)

---

* வடி - கூர்மை † பாரம் - பாரம் ‡ மாதர் - அழகிய. § நிலவு தொழல் - நல்ல நாயகன் கிடைக்கவேண்டுமென்று சந்திரனைத் தொழுதல்.

தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன
தனத்த தந்தன தனதன தனதன தனதான.

218. விரித்த பைங்குழ லொளிர்மல ரளிதனை
தனத்த னந்தன தனதன வெனவொலி
விரிப்ப வண்கயல் விழியுறை குழையொடு மலைபாய
மிகுத்த வண்சிலை நுதல்மிசை திலதமொ
டசைத்த பொன்குழை அழகெழ முகவொளி
வெயிற்ப ரந்திட *நகையிதழ் முருகலர் வரிபோதத்
தரித்த தந்திரி மறிபுய மிசைபல
பணிக்கி லங்கிய பரிமள குவடிணை
தனக்கொ ழுந்துகள் ததைபடு கொடியிடை படுசேலை
தரித்த சுந்தர மிகவடர் பரிபுர
பதச்சி லம்பொடு நடமிடு கணிகையர்
சழக்கர் விஞ்சையர் மயல்களின் முழுகுவ தொழியாதோ
உரித்த வெங்கய மறியொடு புலிகலை
தரித்த சங்கரர் மதிநதி சடையினர்
ஒருத்தி பங்கின ரவர்பணி குருபர முருகோனே
உவட்டி வந்திடு மவுணரொ டெழுகடல்
குவட்டை யும்பொடி படமக முடிவுற
உழைத்த இந்திரர் மனை மகிழ்வுற விடும்வேலா
வரித்த ருந்துள வணிதிரு மருவிய
§உரத்த பங்கயர் மரகத மழகிய
வணத்த ரம்பர முறவிடு கணையினர் மருகோனே
வனத்தில் வந்தொரு பழையவ னெனவொரு
குறத்தி மென்புன மருவிய கிளிதனை
மயக்கி மந்திர குருமலை தனிலமர் பெருமாளே. (உஅ)

* நகை இதழ் முருகு அலர் வரி போத - தந்தங்களும் அதரமும் பொருந்திய வாசனையுள்ள ஆம்பல் மலரை யொத்த வாயினின்றும் இசைப் பாட்டுகள் எழ; வரி-இசைப்பாட்டு. § உரத்த பங்கயர்-திருமருவுதலால் மார்பின் கண் தாமரையை அல்லது மார்பாகிய தாமரையையுடையவர்.

தான தத்த தந்த தனதான.

219. காமி யத்த ழுந்தி இளையாதே
காலர் கைப்ப டிந்து மடியாதே
ஓமெ ழுத்தி லன்பு மிகவூறி
ஓவி யத்தி லந்தம் அருள்வாயே
தூம மெய்க்க ணிந்த சுகலீலா
சூர னைக்க டிந்த கதிர்வேலா
ஏம வெற் புயர்ந்த மயில்வீரா
ஏர கத்த மர்ந்த பெருமாளே. (உக)

தனதன தனன தனன தனந்த னத்த தனதான.

220. தெருவினில் நடவா மடவார் திரண்டொ ருக்கும் வசையாலே
தினகர னெனவே லையிலே சிவந்து திக்கும் மதியாலே
பொருசிலை வளையா இளையா மதன்தொ டுக்குங் கணையாலே
புளகித முலையா லலையா மனஞ்ச லித்தும் விடலாமோ
ஒருமலை இருகூ றெழவே உரம்பு குத்தும் வடிவேலா
ஒளிவளர் திருவே ரகமே உகந்து நிற்கும் முருகோனே
அருமறை தமிழ்நூ லடைவே தெரிந்து ரைக்கும் புலவோனே
*அரியரி பிரமா தியர்கால் விலங்க விழ்க்கும் பெருமாளே.

தானதந் தனதனன தனனதா னத்த தந்த தனதான.

221. நாசர்தங் கடையதனில் விரவிநான் மெத்த நொந்து தடுமாறி
ஞானமுங் கெடவடைய வழுவியா முத்த மூர்த்தி யறியாதே
பாசகந் தொழுமுனது புகழினோர் சொற்ப கர்ந்து சுகமேவி
மாமணங் கமழுமிரு காலபா தத்தை நின்று பணிவேனோ
வாசகம் புகலவொரு பரமர்கா மெச்சு கின்ற குருநாதா
வாசவன் தரு†திருவை ஒருதெய்வா னைக்கி ரங்கு மணவாளா
‡கீசகஞ் சூழ்தருவு மகிழுமா வத்தி சந்து புடைசூழும்
கேசவன் பரவுகுரு மலையில்யோ கத்த மர்ந்த பெருமாளே
(ந.க)

* அரி-தேவேந்திரன். † திருவை - திரு. ஐ சார்யை. ‡ கீசகம் - மூங்கில்.

தனதன தனதன தனதானா.

222. நிறைமதி முகமெனும் ஒளியாலே
நெறிவிழி கணைபுரி *நிகராலே
உறவுகொள் மடவர்கள் உறவாமோ
உனதிரு வடியினி அருள்வாயே
மறைபயி லரிதிரு மருகோனே
மருவல ரசுரர்கள் குலகாலா
குறமகள் தனைமணம் அருள்வோனே
குருமலை மருவிய பெருமாளே. (௩௨)

தான தனதன தான தனதன
தான தனதன தனதான.

223. பாதி மதிநதி போது மணிசடை
நாத ரருளிய குமரேசா
பாகு கனிமொழி மாது குறமகள்
†பாதம் வருடிய மணவாளா
காதுமொருவிழி காக முறவருள்
மாய னரிதிரு மருகோனே
கால னெனையணு காம லுனதிரு
காலில் வழிபட அருள்வாயே
ஆதி அயனொடு தேவர் சுராருல
காளும் வகையுறு சிறைமீளா
ஆடு மயிலினி லேறி அமரர்கள்
சூழ வரவரும் இளையோனே
சூத மிகவளர் சோலை மருவுசு
வாமி மலைதனில் உறைவோனே
சூர னுடலற வாரி சுவறிட
வேலை விடவல பெருமாளே. (௩௩)

*நிகர்-போர். † 'பாதம் வருடிய குறமகளுக்கு' எனப்பிரிக்க.

தானதன தந்த தானன தானதன தந்த தானன
தானதன தந்த தானன தனதான.

224\. ஆனனமு கந்து தோளொடு தோளிணைக லந்து பாலனை
ஆரமுது கண்டு தேனென இதழூறல்
ஆதரவி னுண்டு வேல்விழி பூசலிட நன்று காமனை
ஆனையுர மெங்கு மோதிட அபிராம
மானனைய மங்கை மார்மடு நாபியில்வி ழுந்து விலனில்
மாயமனு பவ்ப வாசைய றுபவேயுன்
வாரிசப தங்கள் நாயடி யேன்முடிபு னைந்து போதக
வாசகம்வ ழங்கி யாள்வதும் ஒருநாளே
ஈனவதி பஞ்ச பாதக தானவர்ப்ர சண்ட சேனைகள்
ஈடழிய வென்று வானவர் குலசேனை
ஏவல்கொளு மிந்த்ர லோகவ சீகரவ லங்க்ரு தாகர
ராசத மறிந்த கோமள வடிவோனே
‡சோனைசொரி குன்ற வேடுவர் பேதைபயில் கின்ற ஆறிரு
தோளுடைய கந்த னேவய லயில்வாழ்வே
†சூளிகையு யர்ந்த கோபுர மாளிகைபொ ளிஞ்சி சூழ்தரு
ஸ்வாமிமலை நின்று லாவிய பெருமாளே. (௩௪)

தானான தனதனத் தான தனதன
தானான தனதனத் தான தனதன
தானான தனதனத் தான தனதன தனதான.

225\. ஆனாத பிருதிவிப் பாச நிகளமும்
மாமாய விருளுமற் றேகி பவமென
ஆகாச பரமசிற் சோதி பரையைய டைந்துளாமே
*ஆறாறி னதிகமக் ராய மனுதினம்
யோகீச ரெவருமெட் டாத பரதுரி
யாதீத மகளமெப் போது முளதுபய னாந்தயோகம்

*ஆறாறினதிகமக் ராயும் முப்பத்தாறு ஞான தத்துவங்கட்கும் மேற்பட்ட தலைமையிடம். †சூளிகை-அரமனை ‡சோனை-அடிக்கடி பெய்மழை.

வாறுதி சகலவிஸ் தார விபவரம்
லோகாதி முடிவுமெய்ப் போத மலரயன்
மாலீச ரெனுமவர்க் கேற விபுலம சங்கையால்நீள்

மாளாத தனிசமுற் றுய தரியநி
ராதார மூலவில்ரிற் சோதி நிருபமு
மாருத சுகவெளத் தாணுவுடனினி தொன்றுசேர்வேன்

நாறுவி தகருவிச் சேனை வகைவகை
சூழ்போது பிரபலச் சூரர் கொடுநெடு
நாவாய்செல் கடலடைத் தேறி நிலையயி லங்கைசாய

நாலாறு மணிமுடிப் பாவி தலையடு
சீராமன் மருகமைக் காவில் பரிமள
நாவீசு வயலியக் கீசர் குமரக டம்பவேலா

காறுரு மெயினர்தற் சாதி வளர்குற
மாதோடு மகிழ்கருத் தாகி மருடரு
காதாடு முனதுகட் பாண மெனதுடை நெஞ்சுபாய்தல்

காணாது மமதைவிட் டாவி உயவருள்
பாராயெ னெனவெகுப் ரீதி இளையவ
காவேரி வடகரைச் சாமி மலையுறை தம்பிரானே. (நடு)

---

தானதன தான தந்த தானதன தான தந்த
தானதன தான தந்த தனதான.

226. வாதமொடு சூலை கண்ட மாலைசூலை நோவு சந்து
மாவலிவி யாதி குன்ம மொடுகாசம்

வாயுவிட னேப ரந்த நோயதிக பீனசம்பின்
மாதர் தரு பூஷ ணங்கள் எனவாகும்

பாதகவி யாதி புண்கள் ஆனதுட னேதொ டர்ந்து
பாயலைவி டாது மங்க இவையால்நின்

பாதமல ரான தொய்ய லோயமற வேம றந்து
பாவமது பான முண்டு வெறிமூடி

ஏதமுறு பாச பந்த மானவலை யோடு ழன்று
ஈனமிகு சாதி யின்க ணாதிலேயான்

ஈடழித லான நின்பின் மூடனென ஓதுமுன்பு
ஈரவருள் கூர வந்து வேளையாள்வாய்

சூதமகிழ் பாலை தெங்கு தாதுவளர் சோலை முன்பு
சூழுமதில் தாவி மஞ்சின் அளவாகத்

தோரணநன் மாடமெங்கு நீடுகொடி யேது மைந்த
ஸ்வாமிமலை வாழ வந்த பெருமாளே. (௩௰)

---

தனனத்தானன தாத்தத்தனதன
தனனத்தானன தாத்தத்தனதன
தனனத்தானன தாத்தத்தனதன தனதான.

227. வறுமைப்பாழ்பிணி ஆற்றப்படாதுளம்
உருகிப்போனது தேற்றப்படாதினி
மகிமைக்கேடுகள் பார்க்கப்படாதென அழையாயோ

வலியப்போயுடல் கூச்சப்படாமையும்
இடியப்பேசிய நாச்சிக்கலாமையும்
மறுசொற்காதுகள் கேட்கப்படாமையும் வரலாமோ

கறுவிப்பாய்புலி வேட்டைக்குளேவரு
பசுவைப்போல்மிடி யாற்பட்டபாடெழு
கதையைப் பாரினி லார்க்குச்சொல் வேனினம் அறியாயோ

கவலைச்சாகர நீச்சுக்குளேயுயிர்
தவறிப்போமென ஓட்டத்திலோடியெ
கருணைத்தோணியி லேற்றிக்கொள்வாயினி அலையாதே

குறைபட்டேயுயிர் காத்துக்கொள்வாயென
முறையிட்டோர்கரி கூப்பிட்டநாளொரு
குரலிற்போயுயிர் காத்துக்கொள்வோர்திரு மருகோனே

குளிர்முத்தாவணி மூக்குத்தியோடணி
களபப்பூண்முலை பார்த்தப்பெண்போகிலி
குவளைப்பார்வையில் மாட்டிக்கொளாதருள் குருநாதா

நிறையத்தேன்விழ பூக்கொத்திலேகனி
கிழியத்தான்விழ காய்க்கொத்திலேமயில்
நடனக்கால்படு தோப்புக்குளேவயல் கயலூடே
நதியைக்காவிரி யாற்றுக்குளேவரு
வளமைச்சோழநன் னாட்டுக்குளேரக
நகரிற்சீர்பெறு போட்சத்தைகயேதரு பெருமாளே. ()

தனதான தத்த தனதான தத்த
தனதான தத்த தனதான.

228. ஒழுகூனி ரத்த மொடுநோனு டுக்கி
உயர்கால்க ரத்தின் உருவாகி
ஒருநாய்வ யிற்றி னிடையேயு தித்துள்
உழல்மாய மிக்கு வருகாயம்
பழசாவி ரைப்பொ டிணையாவி ருக்க
பரிதாப முற்று மடியாமுன்
பரிவானு ளத்தின் முருகாவெ னச்சொல்
பகர்வாழ்வெ னக்கு மொழிவாயே
எழுவான கத்தி லிருநானு திக்கில்
இமையோர்த மக்கும் அரசாகி
எதிரேறு மத்த மதவார ணத்தின்
இனிதேறு கொற்ற முடன்வாழுஞ்
செழுமாம ணிப்பொ னகராயு தித்த
திருவேர கத்தில் உறைவோனே
திடமோட ரக்கர் கொடுபோய டைத்த
சிறைமீள விட்ட பெருமாளே. (உஅ)

தானதனத் தனதான தானதனத் தனதான.

229. காலனிடத் தணுகாதே காசினியிற் பிறவாதே
சீலவகத் தியஞான தேனமுதைத் தருவாயே
மாலயனுக் கரியானே மாதவரைப் பிரியானே
சோலைமலைக் குரியானே ஸ்வாமிமலைப் பெருமாளே. (உக)

உ

ஐந்தாவது

## குன்றுதோறாடல்

தந்தன தான தான தந்தன தான தான
தந்தன தான தான தன தான.

230. வஞ்சக லோப மூடர் தம்பொரு ளூர்கள் தேடி
மஞ்சரி கோவை தூது பலபாவின்
வண்புகழ் *பாரி காரி என்றிசை வாதுகூறி
†வந்தியர் போல வீணில் அழியாதே
செஞ்சர ணாத கீத கிண்கிணி நீப மாலை
திண்டிறல் வேல்மயூர முகமாறும்
செந்தமிழ் நாளு மோதி உய்ந்திட ஞான மூறு
செங்கனி வாயி லோர்சொல் அருள்வாயே
‡பஞ்சவ னீடு கூனு மொன்றிடு தாபமோடு
பஞ்சற வாது கூறு சமண்மூகர்
பண்பறு பீலியோடு வெங்கழு வேறவோது
பண்டித ஞான நீறு தருவோனே
குஞ்சரம் யாளிமேவு பைம்புன மீது லாவு
குன்றவர் சாதி கூடி வெறியாடிக்
கும்பிட நாடி வாழ்வு தந்தவ ரோடு வீறு
குன்றுதொ றாடல் மேவு பெருமாளே. (க)

தனனந் தனன தந்த தனதான.

231. அதிருங் கழல்ப ணிந்துன் அடியேனுன்
அபயம் புகுவ தென்று நிலைகாண
இதயந் தனிலி ருந்து க்ருபையாகி
இடர்சங் கைகள்க லங்க அருள்வாயே
எதிரங் கொருவ ரின்றி நடமாடும்
இறைவன் தனது பங்கில் உமைபாலா
பதிபெங் கிலுமி ருந்து விளையாடிப்
பலகுன் றிலுமமர்ந்த பெருமாளே. (உ)

---

* பாரி - கடையெழுவள்ளல்களி லொருவன். காரி - இவனும் அவர்களி லொருவன். † வந்தியர் - புகழ்ந்து கூறுவோர். ‡ பஞ்சவன்-பாண்டியன்.

தனதன தனன தனதன தனன
தனதன தனன தனதான.

232. எழுதிகழ் புவன நொடியள வதனில்
இயல்பெற மயிலில் வருவோனே
இமையவர் பரவி அடிதொழ அவுணர்
மடிவுற விடுவ தொருவேலா
*வழுதியர் தமிழி †னொருபொரு ளதனை
வழிபட மொழியும் முருகேசா
மலரடி பணியு மடமகள் பசலை
மயல்கொடு தளர்வ தழகோதான்
முழுகிய புனலி லினமணி தரள
§முறுகிடு பவள மிகவாரி
முறையொடு குறவர் மடமகள் சொரியு
முதுமலை அழக குருநாதா
பழகிய வினைகள் பொடிபட அருளில்
படிபவ ரிதயம் உறுகோவே
பருவரை துணிய வொருகணை ‡தெரிவ
பலமலை உடைய பெருமாளே. (ந)

---

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தந்ததான.

233. தறையின் மானுட ராசையி னால்மடல்
எழுது மாலருள் மாதர்கள் தோதக
சரசர் மாமல ரோதியி னுலிரு கொங்கைபாலும்

* வழுதியர்தமிழ்-பாண்டியர்களால் விருத்தி செய்யப்பட்ட தமிழ். †ஒருபொருளதனை வழிபட மொழியும் முருகேசன் என்றது இறையனுரகப்பொருளுக்குச் சங்கப்புலவர்பலரும்செய்துவந்த உரைகளையெல்லாம் தனித்தனி கேட்டு ஒரோரிடங்களிற் சிரக்கம்பஞ் செய்து, நக்கீரர் செய்த உரையை முற்றும் வியந்து சிரக்கம்பஞ்செய்துஸ்தாபித்தருளிய உருத்திரசன்மரை. §முறுகிடு-முதிர்ந்து விளைகிற. ‡தெரிவ-தெரியவனே.

தளர்மி னேரிடை யாலுடை யால்நடை
அழகி னால்மொழி யால்விழி யால்மருள்
சவலை நாயடி யேன்மிக வாடிம யங்கலாமோ
பறவை யானமெய்ஞ் ஞானிகள் மோனிகள்
அணுகொ ணாவகை நீடு*மி ராசிய
பவன பூரக வேகிக மாகிய விந்துநாதம்
பகரொ ணாதது சேரவொ ணாதது
நினையொ ணாதது வானத யாபர
பகிய தானச மாதிம னோலயம் வந்துதாராய்
சிறைவி டாதநி சாசரர் சேனைகள்
மடிய நீலக லாபம தேறிய
திறல்வி நோத†ச மேளத யாபர அம்புராசி
திரைகள் போலலை மோதிய சீதள
குடக காவிரி நீளலை சூடிய
திரிசி ராமலை மேலுறை வீரகு றிஞ்சிவாழும்
மறவர் நாயக ஆதிவி நாயகர்
இளைய நாயக காவிரி நாயக
வடிவி னாயக ‡ஆனைத னாயக எங்கள்மானின்
மகிழு நாயக தேவர்கள் நாயக
கவுரி நாயக னார்குரு நாயக
வடிவ தாமலை யாவையு மேவிய தம்பிரானே. (௪)

கயிலைமலை.

**இது இமயமலையின் மீதுள்ளது.**

தனதன தனனத் தான தனதன தனனத் தான
தனதன தனனத் தான தனதான.

234. திருநில மருவிக் காலி §னிருவழி அடைபட் டோடி
சிலவழி உடனுற் றேக பாமீதே
சிவசுட ரதனைப் ‖பாவை மணமென மருவிக் கோல
¶திரிபுர மெரியத் தீயில் நலகமேவி

*இராசியம் - இரகசியம். †சமேளம் - சமேளனம், கலப்பு. ‡ஆனை-தெய்வானை. §இருவழி-இடைகலை பிங்கலை மார்க்கம். ‖பாவை மணம் என மருவல்-பதுமை விவாகம்போலப் பாவித்தல். ¶திரிபுரம்-மும்மலம்.

இருவினை பொரியக் கோல திருவரு ளுருவத் தேகி
இருள்கதி ரிலிபொற் பூமி தவமூடே
இருவரு முருகிக் காய நிலையென மருவித் தேவர்
இளையவ னெனவித் தாரம் அருள்வாயே
பரிபுர கழ*லெட் டாசை செவிடுகள் படமுத் தேவர்
பழமறை மணியச் சூல மழுமானும்
பரிவொடு சுழலச் சேடன் முடிநெறு நெறெனக் †கோவு
பரியினை மலர்விட் டாடி அடியோர்கள்
‡அரஹர வுருகிச் சேசெ எனதிரு நடனக் கோலம்
அருள்செயு முறையிற் பாகர் அருள்பாலா
அலரணி குழல்பொற் பாவை §திருமக ளமளிப் போரா
டடியவர் கயிலைக் கான பெருமாளே. (௫)

---

தானந்த னத்ததன தானந்த னத்ததன
தானந்த னத்ததன தனதான.

235. தேனுந்து முக்கனிகள் பால்செங்க ருப்பிளநீர்
சீரும்ப ழித்தசிவம் அருளூறத்
தீதும்பி டித்தவினை ஏதும்பொ டிப்பவுறு
சீவன்சி வச்சொரூபம் எனநாடி
நானென்ப தற்றுயிரொ டூனென்ப தற்றுவெளி
நாதம்ப ரப்பிரம ஒளிமீதே
ஞானஞ்சு ரப்பமகி ழாநந்த சித்தியொடெ
நாளுங்க ளிக்குநிலை அருள்வாயே
வானந் தழைக்கவடி யேனுஞ்செ ழிக்கவயன்
மாலும்பி ழைக்கவலை விடமான
வாருங்க ரத்தனெமை ஆளுந்த கப்பன்மழு
மானின்க ரத்தனருள் முருகோனே

---

*எட் டாசை-அஷ்டதிக்கு. †கோவு பரியினை மலர்விட்டு-இடபமாகிய பரியைப் பூமியில் விட்டு. ‡அரஹர உருகி-அரஹர என உருகி; என-சொல்லெச்சம். §திரு மகள்-இலக்குமியின் புத்திரியாகிய வள்ளியம்மை.

தானந்த னத்ததன னுவண்டு சுற்றிமது
தானுண்க டப்பமலர் அணிமார்பா
தானங்கு றித்துவெமை யாளுந்தி ருக்கயிலை
சாலுங்கு றத்திமகிழ் பெருமாளே. (சு)

---

தனத்த தனத்த தனத்த தனத்த
தனத்த தனத்த தனதான.

236. நகைத்து ளுருக்கி விழித்து மிரட்டி
நடித்து விதத்தில் அதிமோகம்
நடத்து சமத்தி முகத்தை மினுக்கி
நலத்தி லணைத்து மொழியாலும்
திகைத்த வரத்தி லடுத்த பொருட்கை
திரட்டி எடுத்து வரவேசெய்
திருட்டு முலைப்பெண் மருட்டு வலைக்குள்
தெவிட்டு கலைக்குள் விழுவேனோ
பகைத்த அரக்கர் சிரத்தை அறுத்த
படர்ச்சி கறுத்த மயிலேறிப்
பணைத்த கரத்த குணத்த மணத்த
பதத்த கனத்த தலைமாதை
மிகைத்த புனத்தி லிருத்தி அணைத்து
*வெளுத்த பொருப்பில் உறைநாதா
விரித்த சடைக்கு ளொருத்தி இருக்க
†மருக்கை கொளத்தர் பெருமாளே. (எ)

---

தனன தந்தன தானன தனதனன
தனன தந்தன தானன தனதனன
தனன தந்தன தானன தனதனன தனதான.

237. பனியின் விந்‡துளி யாகவே கருவினூறும்
அளவி லங்கொரு §குசமாய் மிளகு ||துவர்
பனைதெ னங்கனி போலவே ¶பலகனியின் வயிறுகிப்

---

*வெளுத்த பொருப்பு-வெள்ளிமலை, கயிலை. †மருக்கை கொளத்தர்-மானேந்திய கையையுடைய சிவபெருமான். ‡உளியாக-இடமாக. §குசம்-குறி. ||துவர்-பாக்கு; ஆகுபெயர். ¶பலகனி-பலாக்கனி.

பருவ முந்தலை கீழதாய் நழுவிநில
மருவி ஒன்பது வாசல்சே ருருவமுள
பதுமை யின்செயல் போலவே வளிகயிறின் உடனுடி
மனவி தந்தெரி யாமலே மலசலமொ
டுடல்ந கர்ந்தழு தாறியே அனைமுலையின்
மயம யின்றொரு பாலனா யிகமுடைய செயல்மேவி
வடிவ முன்செய்த தீமையா *லெயுமுனையும்
அறம றந்†தக மீறுபோய் அறுதினமு
மனம ழிந்துடல் நாறினே னினியுனது கழல்தாராய்
தன்ன தந்தன தானனா தனதனன
தின்ன திந்தன தீததோ திகுததிகு
தகுத குந்ததி தாகுதோ வெனமுழவு வளைபேரி
தவில்க ணம்பறை காளமோ டிமிலையொலி
இனமு ழங்கெழு வேலைபோ லதிரவொரு
சமர்மு கந்தனின் மேவியே விருதுசொலும் அவுணோர்கள்
சினம ழிந்துறு தேர்கள் ‡தோ லரிபரிகள்
குருதி எண்டிசை மூடவே அலகைநரி
சிறையி னங்களி கூரவே நகையருளி விடும்வேலா
சிவன்ம கிழ்ந்தரு ளானைமா முகன்மருவி
மனம கிழ்ந்தருள் கூரவோர் கயிலைமகிழ்
திகழ்கு றிஞ்சியின் மாதுமால் மருவுபுகழ் பெருமாளே ()

---

தனனதனத் தனதான தனனதனத் தனதான.

238. §புமியதனிற் ப்ரபுவான புகலியில்வித் தகர்போல
அமிர்தகவித் தொடைபாட அடிமைதனக் கருள்வாயே
சமரி||லெதிர்த் தசுர்மாளத் தனியயில்விட் டருள்வோனே
நமசிவயப் பொருளானே ¶ரசதகிரிப் பெருமாளே, (கூ)

---

* எயு முனையும்-எயும் உனையும். † அகம்-பாவம். ‡ தோல் யானை. புமி-பூமி. || எதிர்த்த சுர்-எதிர்த்த சூரன், ¶ ரசதகிரி-வெள்ளியங்கிரி.

தனத்தத் தனத்த தத்த தனத்தத் தனத்த தத்த
தனத்தத் தனத்த தத்த தனதான.

239. முகத்தைப் பிலுக்கி மெத்த மினுக்கித் தொடைத்து ரத்ந
முலைக்கச் சவிழ்த்த சைத்து முசியாதே
முழுக்கக் கழப்பி எத்தி மழுப்பிப் பொருட்ப றித்து
மொழிக்குட் படுத்த ழைத்து மனைமீதே
நகைத்திட் டழைத்தி ருத்தும் அளித்துக் களித்து மெத்த
நயத்திற் கழுத்தி றுக்கி அணைவார்பால்
நடுக்குற் றவர்க்கு மெத்த மனத்தைப் பெருக்க வைத்து
நயத்துத் தியக்கி நித்தம் அழிவேனோ
செகக்கச் செகக்க செக்க தரிக்கத் தரிக்க தக்க
திமித்திக் திமித்தி தித்தி எனா ஆடும்
செகத்துக் கொருத்தர் புத்ர நினைத்துத் துதிக்க பத்த
செனத்துக் கினித்த சித்தி அருள்வோனே
மிகுத்துத் திடத்தொ டுற்று மலைத்துப் பொருத்த ரக்கன்
மிதித்துப் பெயர்த்தெ டுத்த கயிலாய
மிசைக்குற் றடுத்துயர்த்த பொருப்பைப் பொடித்தி டித்து
மிகுத்துத் துகைத்து விட்ட பெருமாளே. (௰)

---

தனனதன தனனதன தனனதன தனனதன
தனனதன தனனதன தனதான.

240. குதறுகுரு வறிவுகொடு பதறியெதிர் கதறிமிகு
குழறியிடு பரசமயம் ஒருகோடி
குருடர்தெரி வரியதொரு பொருடெரிய நிகழ்மனது
கொடியவிரு வினையெனு *ம ளறுபோக
உதறிவிசி றியகரண மரணமற விரணமற
உருகியுரை பருகியநு திருஞானம்
உணர்வுகதி பெறவுனது மிருகமத வெழிலொளிர
உபயபத முனருள்வகை அருள்வாயே

* மளறு - பிறவித்துன்பமாகிய குற்றம்.

சிதறிவெளி முழுதுமொளி திகழுமுடு படலமவை
சிறுபொறிக ளெனவுரக பிலமேழுந்

செகதலமு முருகசிக ரிகள்குலவு கஜபுபக
திசையுமுட னுருகவரு கடைநாளிற்

கதறுமெழு கடல்பருகி வடவைவிடு கரியபுகை
எனமுடிவில் ககனமுக டதிலோடும்

கலபமயில் மிசையசுரர் கலகமற அமர்பொருது
கயிலைமலை தனில்மருவு பெருமாளே. (கக)

---

## ஸ்ரீ சைலம்.

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதான.

241\. ஒருபது மிருபது மறுபது முடனறும்
உணர்வுற இருபதம் உளநாடி

உருகிட முழுமதி தழலென ஒளிதிகழ்
வெளியொடு மொளிபெற விரவாதே

தெருவினில் மரமென எவரொடு முரைசெய்து
திரிதொழி லவமது புரியாதே

திருமகள் மருவிய திரள்புய அறுமுக
தெரிசனை பெறவருள் புரிவாயே

பரிவுட னழகிய பழமொடு கடலைகள்
பயறொடு சிலவகை பணியாரம்

பருகிடு பெருவயி றுடையவர் *பழமொழி
எழுதிய கணபதி இளையோனே

பெருமலை உருவிட அடிமலர் பணிபவர்
பிணிகெட அருள்தரு குமரேசா

பிடியொடு களிறுகள் நடைபயில் கலைதிரள்
பிணையமர் திருமலை பெருமாளே. (கஉ)

---

*பழமொழி-பாரதம். திருமலை என்பது ஸ்ரீசைலத்துக்கோர் பெயர்.

## திருவேங்கடம்.

இது திருப்பதி ஸ்டேஷனுக்கு வடமேற்கே 4 மயில் தூலவிலிருக்கிறது.
இது முருகக்கடவுளது ஐந்தாம் படைவீடு.

தனதாந்தன தானன தானன
தனதாந்தன தானன தானன
தனதாந்தன தானன தானன தனதான.

242. வரிசேர்ந்திடு சேல்கய லோவெனு
முழைவாழ்ந்திடு வேலையு நீலமும்
வடுவாங்கிடு வாள்விழி மாதர்கள் வலையாலே

வளர்கோங்கிள மாமுகை யாகிய
தனவாஞ்சையி லேமுக மாயையில்
வளமாந்தளிர் போல்நிற மாகிய வடிவாலே

இருள்போன்றிடு வார்குழல் நீழலில்
மயல்சேர்ந்திடு பாயலின் மீதுற
இனிதாங்கனி வாயமு தூறல்கள் பருகாமே

* எனதாந் தன தானவை போயற
மலமாங்கடு மோகவி காரமும்
இவைநீங்கிட வேயிரு தாள்மலர் அருள்வாயே

கரிவாம்பரி தேர்திரள் சேனையும்
உடனாந்துரி யோதன னாதிகள்
களமாண்டிட வேயொரு பாரதம் அதிலேகிக்

கனபாண்டவர் தேர்தனி லேயெழு
பரிதூண்டிய சாரதி யாகிய
கதிரோங்கிய நேமிய னாமரி ரகுராமன்

திரைநீண்டிரை வாரியும் வாலியும்
நெடிதோங்கும ராமர மேழொடு
தெசமாஞ்சிர ராவண னார்முடி பொடியாகச்

சிலைவாங்கிய நாரண னார்மரு
மகனாங்குக னேபொழில் சூழ்தரு
திருவேங்கிட மாமலை மேவிய பெருமாளே. (கரு)

---

* எனதாந் தன தானவை-என்னது நின்னது என்னும் ஆசா பாசம்.

தாந்தன தானதன தாந்தன தானதன
தாந்தன தானதன தனதான.

243. கோங்கிள நீரளக வீங்குப யோதரமும்
வாங்கிய வேல்விழியும் இருள்கூரும்
கூந்தலும் நீள்வளைகொள் காந்தளு நூலிடையும்
மாந்தளிர் போல்வடிவும் மிகநாடிப்
பூங்கொடி யார்கலவி நீங்கரி தாகிமிகு
தீங்குட னேயுழலும் உயிர்வாழ்வு
பூண்டடி யேனெறியில் மாண்டிடு னேநரகில்
வீழ்ந்தலை யாமலருள் புரிவாயே
பாங்கியும் வேடுவரும் ஏங்கிட மாமுனியும்
வேங்கையு மாய்மறமின் உடன்வாழ்வாய்
பாண்டவர் தேர்கடவும் நீண்டபி ரான்மருக
பாண்டிய னீறணிய மொழிவோனே
வேங்கையும் வாரணமும் வேங்கையும் மானும்வளர்
வேங்கிட மாமலையில் உறைவோனே
வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
வேண்டவெ றுதவு பெருமாளே. (௧௪)

---

244. சாந்தமில் மோகவெறி காந்தி*ய வாவநில
மூண்டவி யாதசம யவிரோத
சாங்கலை வாரிதியை நீந்தவொ ணாதுலகர்
தாந்துணை யாவரென மடவார்மேல்
ஏந்திள வார்முளரி சாந்தணி மார்பினொடு
தோய்ந்துரு காவறிவு தடுமாறி
ஏங்கிட ஆருயிரை வாங்கிய காலன் வசம்
யான்தனி போய்விடுவ தியல்போதான்
காந்தளி னனகர மான்தரு கானமயில்
காந்தவி சாகசர வணவேளே

* அவாவநிலம்-ஆசைக்காற்று.

காண்டருதேவர்பதி ஆண்டவனோருதி
ஆண்டகையேயிபமின் மணவாளா
வேந்தகு மாரகுக சேந்தமயூரவட
வேங்கட மாமலையில் உறைவோனே
வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
வேண்டவெ றுதுதவு பெருமாளே. (கடு)

தனத்ததன தனன தனந்த தனத்ததன தனன தனந்த
தனத்ததன தனன தனந்த தனதான.

245. கறுத்ததலை வெளிறு மிகுந்து மதர்த்தவிணை விழிகள் குழிந்து
*கதுப்பிலுறு தசைகள் வறண்டு செவிதோளாய்க்
கழுத்தடியு மடைய வளைந்து கனத்தநெடு முதுகு குனிந்து
கதுப்புறுப லடைய விழுந்து †நடுநீர்சோர்
உறக்கம்வரு மளவி லெலும்பு குலுக்கிவிடு மிருமல் தொடங்கி
உரத்தகன குரலு நெரிந்து தடிகாலாய்
உரத்தநடை தளரு முடம்பு பழுத்திடுமுன் மிகவும் விரும்பி
உனக்கடிமை படுமவர் தொண்டு புரிவேனோ
சிறுத்த ‡செலு வதனு ளிருந்து பெருத்ததிரை உததி கரந்து
செறித்தமறை கொணர நிவந்த செயமா§லே
செறித்தவளை கடலில் வரம்பு புதுக்கியிளை யவனொ டறிந்து
செயிர்த்தவுரு மனையு முகந்து படையோடு
மறப்புரிசை வளையு மிலங்கை அரக்கனொரு பதுமு டிசிந்த
வளைத்தசிலை விஜய முகுந்தன் மருகோனே
மலர்க்கமல வடிவு ளசெங்கை அயிற்குமர ||குகைவழி வந்த
மலைச்சிகர வடமலை நின்ற பெருமாளே. (கசா)

* கதுப்பு - கன்னம். † உதடு நீர்சோர் - உறக்கம் வருமளவில்எனப் பிரிக்க. ‡ செலு - மீன்சிறை. § ஏ செறித்து அவளை கடலில் - பாணப் பிரயோகஞ் செய்து அந்த வளைந்த கடலில். என்று பிரிக்க.

|| 'அண்டமன்னுயி ரீன்றவ ளுடன் முனி வாகித்
தொண்ட கங்கெழு சுவாமிதன் மால்வரை துறந்து
மண்டு பாதலத் தேகியே யோர்குகை வழியே
பண்டு தான்வரு வேங்கட கிரியையும் பார்த்தான்" என்று கந்த புராணம் வழிநடைப் படலத்திற் கூறி யிருத்தலை உணர்க.

தனதன தத்தன தனதன தத்தன
தனதன தத்தன தனதான.

246. கலகலெ னச்சில கலைகள்பி தற்றிடு
கசடர்கள் பக்கம — தணுகாதே
கருவின் வழிப்படு மிருவினை உட்படு
கடுநர குக்கிடை — படியாதே
உலகுத னிற்பல பிறவித ரித்தற
உழல்வது விட்டினி — அடிநாயேன்
உனதடி மைத்திர ளதனினு முற்பட
உபயம லர்ப்பதம் — அருள்வாயே
குலகிரி பொட்டெழ வலைகடல் வற்றிட
நிசிசர னைப்பொரும் — அயில்வீரா
குணதர வித்தக எழில்வன மிக்குள
குறமக ளைப்புணர் — மணிமார்பா
அலைபுன லிற்றவழ் வளைநில வைத்தரும்
அலைசெய்தி ருப்பதி — உறைவோனே
அடியவ ரிச்சையி லெவையெவை யுற்றன
அவைதரு வித்தருள் — பெருமாளே. (கள)

---

திருத்தணிகை.

**இது தொண்டைநாட்டின்கண் திருத்தணிகை என்னும் ஸ்டேஷனிலிருந்து ஒரு மைல் துலைவிலிருக்கிற சுப்பிரமணிய க்ஷேத்திரம்.**

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனதான.

247. அமைவுற் றடையப் பசியுற் றவருக்
கமுதைப் பகிர்தற் — கிசையாதே
அடையப் பொருள்கைக் கிளமைக் கெனவைத்
தருள்தப் பிமதத் — தயராதே
தமர்சுற் றியழப் பறைகொட் டியிடச்
சமனெட் டுயிரைக் — கொடுபோகுஞ்
*சரிரத் தினைநிற் குமெனக் கருதித்
தளர்வுற் றொழியக் — கடவேனோ

---

* சரிரம்-சரீரம்; சந்தம் நோக்கிக் குறுகிற்று.

இமயத் துமயிற் கொருபக் கமளித்
தவருக் கிசையப் புகல்வோனே
*இரணத் தினிலெற் றுவரைக் கழுகுக்
கிரையிட் டிடுவிக் ரமவேலா
†சமயச் சிலுகிட் டவரைத் தவறித்
தவமுற் றவருட் புகநாடும்
‡சடுபத் மமுகக் குகபுக் ககனத்
தணியிற் குமரப் பெருமாளே. (கஅ)

---

248. பொரியப் பொரியப் பொலிமுத் துவடத்
துகளிற் புதையத் தனமீதே
புரளப் புரளக் கறுவித் தறுகட்
பொருவிற் சுறவக் கொடிவேள்§டோ ணள்
தெரிவைக் ||கரிவைப் பரவைக் குருகிச்
செயலற் றனள்கற் பழியாதே
செறிவுற் றணையிற் றுயிலுற் றருமைத்
தெரிவைக் குணர்வைத் தரவேணும்
சொரிகற் பகநற் பதியைத் தொழுகைச்
சுரருக் கருளைப் புரிவோனே
சுடர்பொற் கயிலைக் கடவுட் கிசையச்
சுருதிப் பொருளைப் பகர்வோனே
¶தரிகெட் டசுரப் படைகெட் டொழியத்
தனிநெட் டயிலைத் தொடும்வீரா
தவளப் பணிலத் தரளப் பழனத்
தணிகைக் குமரப் பெருமாளே. (ககூ)

---

*இரணம்-யுத்தம் †சமயச்சிலுகு-மதச்சண்டை. ‡சடுபத்மம்-ஆறுதாமரை §தோள்தெரிவை கைதெரிந்தெய்யும் கூரியபாணம். ||அரிவைப்பரவைக்கு-பெண்களாகிய சேனைசமுத்திரத்துக்கு ¶தரிகெட்டு-தரிப்பின்றி.

249. குவளைக் கணைதொட் டவனுக் குமுடிக்
குடையிட் டகுறைப்　　　பிறையாலே
குறுகுற் றலர்த் தெரிவைக் குமொழிக்
குயிலுக் குமினித்　　　தளராதே
இவளைத் துவளக் கலவிக் குநயத்
திறுகத் தழுவிப்　　　புயமீதே
இணையற் றழகிற் புனையக் கருணைக்
கினிமைத் தொடையைத்　　　தரவேணும்
கவளக் காளக் கரியெட் டலறக்
கனகக் கிரியைப்　　　பொருவேலா
கருதிச் செயலைப் புயனுக் குருகிக்
கலவிக் கணயத்　　　தொழுமார்பா
பவளத் தாளத் திரளக் குவைவெற்
பவையொப் புவயற்　　　புறமீதே
பணிலத் திரள்மொய்த் ததிருத் தணிகைப்
பதியிற் குமரப்　　　பெருமாளே. (உ0)

---

தனத்தனத் தனத்தனத் தனத்தனத் தனத்தனத்
தனத்தனத் தனத்தனத்　　　தனதான.

150. கடற்செகத் தடக்கிமற் றடுத்தவர்க் கிடுக்கணைக்
கடைக்கணிற் கொடுத்தழைத்　　　தியல்காமக்
கலைக்* கதற் றுறைத்தபுட் குரற்கள்விட் டுளத்தினைக்
கரைத்துடுத் தபட்டவிழ்த்　　　தணைமீதே
சடக்கெனப் புகத்தனத் தணைத்திதழ்க் கொடுத்துமுத்
தமிட்டிருட் குழற்பிணித்　　　துகிரேகை
சளப்படப் புதைத்தடித் § திலைக்குணக் கடித்தடத்
தலத்தில்வைப் பவர்க்கிதப்　　　படுவேனோ

† அலர்த்தெரிவை-பழிதூற்றும் பெண். ‡ செயலை-அசோகு. செயலைப் புயன்-அசோகமலர்க் கணையைக் கையிலுடைய மன்மதன். * கதற்று-கதறுதலுடைய. § இலைக்குணம்-அரசிலையின் தன்மையை யொத்ததான.

‡இடக்கடக் குயெய்ப்பொருட் டிருப்புகழ்க் குயிர்ப்பளித்
தெழிற்றினைக் கிரிப்புரித் துறைவேலா

இகற்செருக் காக்கரைத் தகர்த்தொலித் தூரத்துபச்
சிறைச்சியைப் பசித்திரைக் கிசைகூவும்

பெடைத்திரட் களித்தருக் குடக்கொடிக் காத்தபொய்ப்
பிதற்றறப் படுத்துசற் குருவாய்முன்

பிறப்பிலிக் குணர்த்துசித் தவுற்றநெற் பெருக்குறப்
பெருக்குசெய்த் திருத்தணிப் பெருமாளே. (உக)

---

251. கனத்தறப் பணைத்தபொற் கலைழப்புயத் தனக்கிரிக்
§கனத்தையொத் துமொய்த்தலைக் குழலார்தங்

கறுத்தமைக் கயற்கணிற் கருத்துவைத் தொருத்தநிற்
கழற்பதத் தடுத்திடற் கறியாதே

இனப்பிணிக் கணத்தினுக் கிருப்பெனத் திருத்தியொத்
திசைத்தசைத் தசுக்கிலத் தசைதோலால்

எடுத்தபொய்க் கடத்தினைப் பொறுக்குமிப் பிறப்பறுத்
தெனக்குநித் தமுத்தியைத் தரவேணும்

||பனைக்காச் சினத்திபத் தனைத்துரத் தரக்கனைப்
¶பயத்தினிற் பயப்படப் பொரும்வேலா

பருப்பதச் செருக்கறத் துகைக்குமுட் பதத்தினைப்
படைத்தகுக் குடக்கொடிக் குமரேசா

தினைப்புனப் பருப்பதத் தினிற்குடிக் குறத்தியைச்
செழுக்குறத் திருப்புயத் தணைவோனே

திருப்புறப் புறத்தியற் றிருத்* தகுத் தநித்திலத்
திருத்திசைத் திருத்தணிப் பெருமாளே. (உஉ)

---

‡இடக்கு-குதர்க்கம். §கனம்-மேகம். ||பனைக்காச்சினத்திபத்தன்-தேவேந்திரன்- ¶பயம்- (சமுத்திரமாகிய) ஜலம். *தகுத்த-தகுந்த.

252. பருத்தபற் சிரத்தினைக் குருத்திறந் கரத்தினைப்
பரித்தவப் பதத்தினைப் பரிவோடே
படைத்தபொய்க் குடத்தினைப் பழிப்பவத் திடத்தினைப்
பசிக்குடற் கடத்தினைப் பயமேவும்
பெருத்தபித் துருத்தனைக் கருத்திமத் துருத்தியைப்
பிணித்த*முக் குறத்தொடைப் புலனாலும்
பிணித்தவிப் பிணிப்பையைப் பொறுத்தமிழ்ப் பிறப்பறக்
குறிக்கருத் தெனக்களித் தருள்வாயே
கருத்திலுற் றுரைத்தபத் தரைத்துனிக் கிருக்கறக்
கழித்தமெய்ப் பதத்தில்வைத் திடுவீரா
கதித்தநற் றினைப்புனக் கதித்தநற் குறத்தியைக்
கதித்தநற் றிருப்புயத் தணைவோனே
செருக்கெறுத் தெதிர்த்தமுப் புரத்தரக் தரக்கரைச்
சிரித்தெரித் தசித்தர்பொற் குமரேசா
சிறப்புறப் பிரித்தறத் திறத்தமிழ்க் குயர்த்திரைச்
சிறப்புடைத் திருத்தணிப் பெருமாளே. (உ௫)

தனத்தன தானந் தனத்தன தானந்
தனத்தன தானந் தனதான.

253. எனக்கென யாவும் படைத்திட நாளும்
இளைப்பொடு காலந் தனிலோயா
எடுத்திடு காயந் தனைக்கொடு மாயும்
இலச்சையி லாதென் பவமாற
உனைப்பல நாளுந் திருப்புக ழாலும்
உரைத்திடு வார்தங் குழுமேவி
உணர்த்திய போதந் தனைப்பிரி யாதொண்
பொலச்சர ணானுந் தொழுவேனோ
வினைத்திற மோடன் றெதிர்த்திடும் வீரன்
விழக்கொடு வேல்கொண் டவனீயே

*முக்குறத்தொடைப்புலனாலும்-முக்குற்றத்தோடு ஐம்புலனாலும்.

*விளப்பென †வேழோன் றிடக்கய னுரும்
விருப்புற வேதம் புகல்வோனே
சினத்தொடு சூரன் தனைப்பொரு போரின்
சிரத்தினை ‡மாறும் முருகோனே
தினைப்புன மேவுங் குறக்கொடி யோடுந்
திருத்தணி மேவும் பெருமாளே. (௨௪)

254. பெருக்கவு பாயங் கருத்துடை யோர்தம்
ப்ரபுத்தன பாரங் கனிலேசம்
ப்ரமத்துட னாளும் ப்ரமித்திருள் கூரும்
ப்ரியக்கட லூடுந் தணியாத
கருக்கட லூடுங் கதற்றும நேகங்
கலைக்கட லூடுஞ் சுழலாதே
கடப்பலர் சேர்கிண் கிணிப்ரபை வீசுங்
கழற்புணை நீதந் தருள்வாயே
தருக்கிய வேதன் சிறைப்பட நாளுஞ்
சதுர்த்தச லோகங் களும்வாழச்
சமுத்திர மேழுங் குலக்கிரி ஏழுஞ்
சளப்பட மாவுந் தனிவீழத்
திருக்கையில் வேலொன் றெடுத்தம ராடுஞ்
செருக்கும யூரந் தனில்வாழ்வே
சிறப்பொடு ஞானம் தமிழ்த்ரய நீடும்
திருத்தணி மேவும் பெருமாளே. (௨௫)

255. மருக்குல மேவும் குழற்கனி வாய்வெண்
மதிப்பிள வாகும் நுதலார்தம்
மயக்கினி லேநண் புறப்படு வேனுன்
மலர்க்கழல் பாடுந் திறம்நாடாத்

*விளப்பென - விளம்பென. †ஏழோன் றிடக்கயன் எண்கண்ணன், பிரமன். ‡மாறும்-மாற்றும் தன்வினை பிறவினைப்பொருளில் வந்தது.

தருக்கனு தாரந் துணுக்கிலி லோபன்
சமத்தறி யாவன் பிலிமுகன்

தலத்தினி லேவந் துறப்பணி யாதன்
தனக்கினி யார்தஞ் சபைதாராய்

குருக்குல ராஜன் தனக்கொரு தூதன்
குறட்பல மாயன் நவநீதம்

குறித்தயில் நேயன் திருப்பயில் மார்பன்
குணத்ரய நாதன் மருகோனே

திருக்குள நாளும் பலத்திசை மூளுஞ்
சிறப்புத ருவெண் டிசையோடும்

திரைக்கடல் சூழும் புவிக்குயி ராகுந்
திருத்தணி மேவும் பெருமாளே. (௨௬)

---

256. வினைக்கின மாகுந் தனத்தினர் வேளம்
பினுக்கெதி ராகும் விழிமாதர்

மிகப்பல மாயந் தனிற்புகு தா*வெஞ்
சமத்திடை போய்வெந் துயர்மூழ்கிக்

கனத்தவி சாரம் பிறப்படி தோயுங்
கருக்குழி தோறுங் கவிழாதே

கலைப்புல வோர்பண் படைத்திட ஓதுங்
கழற்புக ழோதுங் கலைதாராய்

புனத்திடை போய்வெஞ் சிலைக்குற வோர்வஞ்
சியைப்புணர் வாகம் புயவேளே

பொருப்பிருகூறும் படக்கடல் தானும்
பொருக்கெழ வானும் புகைமூளச்

சினத்தொடு சூரன் கனத்திணி மார்பந்
திறக்கம ராடுந் திறல்வேலா

திருப்புக ழோதுங் கருத்தினர் சேருந்
திருத்தணி மேவும் பெருமாளே. (௨௭)

---

* வெஞ்சமம் - வெம்மையாகிய போர்.

தனத்தன தனத்தந் தனத்தன தனத்தந்
தனத்தன தனத்தந் தனதான.

257. கரிக்குழல் விரித்தும் புறக்கயல் விழித்துங்
கரிக்குவ டிணைக்குந் தனபாரக்

கரத்திடு வளைச்சங் கிலிச்சர மொழித்துங்
கலைத்துகில் மினுக்கும் பணிவாரைத்

தரித்துள மழிக்கும் * கவட்டர்க ளிணக்கந்
தவிர்த்துன தசித்தங் களிகூரத்

தவக்கடல் குளித்திங் குனக்கடி மையுற்றுன்
தலத்தினி லிருக்கும் படிபாராய்

புரத்தையு மெரித்தங் கயத்தையு முரித்தோன்
†பொடிப்பணி யெனப்பன் குருநாதா

புயப்பணி கடப்பந் தொடைச்சிக ரமுற்றின்
புகழ்ச்சிய முகத்தின் புலவோனே

திரட்பரி கரிக்கும் பொடிப்பட வுணர்க்குந்
தெறிப்புற விடுக்குங் கதிர்வேலா

சிறப்பொடு குறப்பெண் களிக்கும்வி சயத்தென்
திருத்தணி இருக்கும் பெருமாளே. (உஅ)

---

258. சினத்தவர் முடிக்கும் பகைத்தவர் குடிக்குஞ்
செருக்கவ ருயிர்க்குஞ் சினமாகச்

சிரிப்பவர் தமக்கும் பழிப்பவர் தமக்குந்
திருப்புகழ் நெருப்பென் றறிவோம்யாம்

நினைத்தது மளிக்கும் மனத்தையு முருக்கும்
நிசிக்கரு வறுக்கும் பிறவாமல்

நெருப்பையு மெரிக்கும் பொருப்பையு மிடிக்கும்
நிறைப்புக ழுரைக்குஞ் செயல்தாராய்

---

*கவட்டர்கள் - வஞ்சிகள். †பொடி பணி என் அப்பன் எனப் பிரித்து, திருநீற்றினையும் பாம்பினையும் அணிந்த என் ஐயன் எனக்கொள்க.

தனத்தன தனத்தந் திமித்திமி திமித்திந்
தகுத்தகு தகுத்தந் தனபேரி
தடுட்டுடு டுடுட்டுண் டெனத்துடி முழுக்கும்
தளத்துட னடக்கும் கொடுசூரர்
சினத்தையு முடற்*சங் கரித்தமலை முற்றுஞ்
சிரித்தெரி கொளுத்துங் கதிர்வேலா
தினைக்கிரி குறப்பெண் தனத்தொடு சுகித்†தொண்
திருத்தணியிருக்கும் பெருமாளே. (௨௯)

---

தத்தனத் தனன தத்தனத் தனன
தத்தனத் தனன தனதான.

259. தொக்கறுக் குடில சுத்தமேற் றசுக
துக்கமாற் கடமு மலமாயை
துற்றகாற் பதலை சொற்படாக் குதலை
துப்பிலாப் பல்ச மய நூலைக்
கைக்கொளாக் கதறு கைக்கொளாக் கையவ
லப்புலாற் றசைகு ருதியாலே
கட்டுகூட் டுருவ ருப்புவேட் டுழல
சட்டவாக் கழிவ தொருநாளே
அக்கராப் பொடியின் மெய்க்கிடாக் குறவர்
அர்ச்சியாய்த் தொழுமு நிவனாய
அப்பபோர்ப் பனிரு ‡வெற்பதோத் தனியல்
§வெற்பபார்ப் பதிரு குமாரா
இக்கிறைற் குளம்வெ துப்பநோக் குறுத
வத்தினோர்க் குதவும் இளையோனே
‖எத்திடார்க் கரிய முத்தபாத் தமிழ்கொ
¶டெத்தினோர்க் கெளிய பெருமாளே. (௩௦)

---

*சங்கரித்து அம்மலை முற்றும் எனப் பிரிக்க. † ஒண்-பொருந்திய.
‡வெற்ப-மலைபோன்றபுயங்களுடையவனே §வெற்பமலையிலிருப்பவனே
‖எத்திடார்க்கு-ஏத்திடார்க்கு ¶எத்தினோர்க்கு-ஏத்தினோர்க்கு.

260\. வட்டவாட் டனமனைச்சிபாற் குதலை
  மக்கள் தாய்க் கிழவி பதிநாடு
 வைத்ததோட் டமனை அத்தமிட் டபொருள்
  மற்றகூட்ட மறி வயலாக
முட்டவோட் டிமிக வெட்டுமோட் டெருமை
  முட்டர்பூட் டியெனை அழையாமுன்
 முத்திவீட் டணுக முத்தராக் கருது
  இக்குராக் கொளிரு கழல்தாராய்
பட்டநாற் பெருமருப்பினாற் கரவி
  பத்தின்வாட் பிடியின் மணவாளா
 பச்சைவேய்ப் *பணவை கொச்சைவேட் டுவர்ப
  திச்சிதோட் புணர்த ணியில்வேளே
எட்டுநாற் கர†வொருத்தல்மாத் திகிரி
  எட்டுமாக் குலைய எறிவேலா
 எத்திடார்க் கரிய முத்தபாத் தமிழ்கொ
  டெத்தினார்க் கெளிய பெருமாளே. (௩௧)

---

தனத்த தத்தன தனதன தனதன
தனத்த தத்தன தனதன தனதன
தனத்த தத்தன தனதன தனதன தனதான.

261\. ‡சினத்தி லத்தினை சிறுமண லளவுடல்
  செறித்த தெத்தனை சிலைகட லினிலுயிர்
  செனித்த தெத்தனை திரள்கய லெனபல வறுபோதா
சென்மித்த தெத்தனை மலைசுனை உலகிடை
  செழித்த தெத்தனை சிறுதன மயல்கொடு
  செடத்தி லெத்தனை நமனுயிர் பறிகொள்வ தளவேதோ
மனத்தி லெத்தனை நினைகவ டுகள்குடி
  கெடுத்த தெத்தனை பிருகம தெனவுயிர்
  வதைத்த தெத்தனை அளவிலை விதிகரம் ஒழியாமல்

---

*பணவை-பரண். †ஒருத்தல்-யானை. ‡சினதிலம் தினை-சிறியஎள்ளு, தினை.

வருத்த தெத்தனை மசகனை முருடனை
மடைக்கு லத்தனை மநியழி விரகனை
மலர்ப் பதத்தினி லுருகவு மினியருள் புரிவாயே

தனத்த தத்தன தனதன தனதன
திமித்தி மித்திமி திமிதிமி திமிதிமி
தகுத்த தத்தகு தகுதகு தகுதகு தகுதிதோ

தரித்த ரித்தரி தரிரிரி ரிரிரிரி
தடுட்டு டுட்டுடு டுடுடுடு டுடுடுடு
தமித்த மத்தள தமருக விருதொலி கடல்போலச்

சிலைத்த மார்க்கள மிசைதிகழ் குருதிய
திமிழ்த்தி டக்கரி அசுரர்கள் பரிசிலை
தெறித்த டக்கழு நரிதின நிணமிசை பொரும்வேலா

செழிக்கு முத்தம சிவசர ணர்கள்தவ
முநிக்க ணத்தவர் மதுமலர் கொடுபணி
திருத்த ணிப்பதி மருவிய குறமகள் பெருமாளே. (௩௨)

---

262. தொடத்து ளக்கிகள் அபகட நினைவிகள்
குருட்டு மட்டைகள் குமரிகள் கமரிகள்
சுதைச்சி றுக்கிகள் *குசலிக †ளிசலிகள் முழுமோசம்

தூறுத்த மட்டைகள் அசடிகள் கசடிகள்
முழுப்பு ரட்டிகள் நழுவிகள் ‡மழுவிகள்
§துமித்த மித்திரர் விலைமுலை இனவலை புகுதாமல்

அடைத்¶த வர்க்கியல் சரசிகள் விரசிகள்
தரித்த வித்ரும நிறமென வரவுடன்
அழைத்து சக்கர கிரிவளை படிகொடு விளையாடி

* குசலிகள்-தந்திரவாதிகள். † இசலிகள்-பிணங்கிகள். ‡மழுவிகள்-(தங்கள்சூது வெளியாகாமல், மழுப்புவோர் § துமித்த மித்திரர் - நட்பு அற்றவர். ¶ அவர்க்கியல்.... விளையாடி-அப்பொதுமாதர்கட்குச் சமானமாக இயல்கின்ற சரசிகளும் விரசிகளும் ஆகிய அணிமாதி அஷ்டசித்திகளும் பவளம்போலும் சிவந்த நிறத்துடன் வரும்படி அழைப்பித்து அவர்களோடு) சக்ரவாளகிரியாற் சூழப்பட்ட, இப்பூமியில் விளையாடச்செய்து,

* அவத்தை தத்துவ மழிபட †இருளறை
விலக்கு வித்தொரு சுடரொளி பாவகல்
அருட்பு கட்டியு னடியிணை அருளுவ தொருநாளே

படைத்த னைத்தையும் வினையுற நடனெடு
துடைத்த பத்தினி மரகத சொருபியொர்
பாத்தி னுச்சியி னடநவி லுமையருள் இளையோனே

பகைத்த ரக்கர்கள் யமனுல குறவமர்
தொடுத்த சக்கர வளைகர மழகியர்
படிக்க டத்தையும் வயிறடை நெடியவர் மருகோனே

திடுக்கி டக்கட லசுரர்கள் முறிபட
கொளுத்தி சக்கிரி பொடிபட சுடரயில்
திருத்தி விட்டொரு கொடியினில் வலம்வரு மயில்வீரா

தினைப்பு னத்திரு தனகிரி குமரிநல்
குறத்தி முத்தொடு சசிமக ளொடுபுகழ்
திருத்த ணிப்பதி மலைமிசை நிலைபெறு பெருமாளே ()

---

தனதன தான தனதன தான
தனதன தான தனதான.

263\. இருமலு ரோக முயலகன் வாதம்
எரிகுண நாசி விடமேநீ

ரிழிவுவி டாத தலைவலி சோகை
எழு‡கள மாலை இவையோடே

பெருவயி றீளை எரிகுலை சூலை
பெருவலி வேறு முளநோய்கள்

பிறவிக டோறு மெனைநலி யாத
படியுன தாள்கள் அருள்வாயே

வருமொரு கோடி அசுரர்ப தாதி
மடியவ நேக இசைபாடி

---

*அவத்தை தத்துவமழிபட—ஜாக்கிராதி மலாவஸ்தைகளும், தத்துவச் சேட்டைகளும் ஒடுங்க. †இருளறை—ஆணவமலம். ‡களமாலை—கண்டமாலை.

வருமொரு கால வயிரவ ராட
வடிசுடர் வேலை விடுவோனே
தருநிழல் மீதி லுறைமுகி லூர்தி
தருதிரு மாதின் மணவாளா
சலமிடை பூமி னடுவினில் வீறு
தணிமலை மேவு பெருமாளே. (௩௪)

தனதன தானந் தனதன தானந்
தனதன தானந் தனதான.

264. கலைமட வார்தஞ் *சிலையத னாலுங்
கனவளை யாலுங் கரைமேலே
கருகிய காளம் பெருகிய தோயங்
கருதலை யாலுஞ் †சிலையாலும்
கொலைதரு காமன் பலகணை யாலுங்
கொடியிடை யாள்நின் றழியாதே
குரவணி நீடும் புயமணி நீபங்
குளிர்தொடை நீதந் தருள்வாயே
சிலைமகள் நாயன் கலைமகள் நாயன்
திருமகள் நாயன் தொழும்வேலா
தினைவன மானுங் ‡கநவன மானுஞ்
செறிவுடன் மேவுந் திருமார்பா
§தலமகள் மீ¶தெண் புலவரு லாவுந்
தணிகையில் வாழ்செங் கதிர்வேலா
தனியவர் கூறுந் தனிகெட நாளுந்
தனிமயி லேறும் பெருமாளே, (௩௫)

---

*சிலை - ஒலி. † சிலை ஆலும் - வில்லினிடத்து அசைகின்ற ‡ கந வனமான் - தெய்வானை, கநம்வனம் - பொன்மயமாகிய கற்பகவனம். § தலமகள் - பூமிதேவி. ¶ எண் புலவர் - மதிக்கப்படும் தேவர்கள்.

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதான.

265. அரகர சிவனரி அயனிவர் பரவிமுன்
அறுமுக சரவண பவனேயென்
றநுதின மொழிதர அசுரர்கள் கெடவயில்
அனலென எழுவிடு மதிவீரா
பரிபுர கமலம தடியிணை அடியவ
ருளமதி லுறவருள் முருகேசா
பகவதி வரைமகள் உமைதர வருகுக
பரமன திருசெவி களிகூர
உரைசெயு மொருமொழி பிரணவ முடிவதை
உரைதரு குருபர உயர்வாய
உலகம னலகில உயிர்களு மிமையவர்
அவர்களு முறுவர முநிவோரும்
பரவிமு னநுதின மனமகிழ் வுறவணி
பணிதிகழ் தணிகையில் உறைவோனே
பகர்தரு குறமகள் தருவமை வனிதையும்
இருபுடை உறவரு பெருமாளே. (௩௬)

---

தனத்தன தனத்தன தனத்தன தனத்தன
தனத்தன தனத்தன தனதான.

266. *இருப்பவல் திருப்புகழ் விருப்பொடு படிப்பவர்
இடுக்கினை அறுத்திடு மெனவோதும்
இசைத்தமிழ் †நடத்தமி ழெனத்துறை விருப்புடன்
இலக்கண இலக்கிய கவிநாலும்
தரிப்பவ ருரைப்பவர் நினைப்பவர் மிகச்சக
தலத்தினில் நவிற்றுதல் அறியாதே
தனத்தினில் முகத்தினில் மனத்தினி லுருக்கிடு
சமர்த்திகள் மயக்கினில் விழலாமோ

---

*இருப்பவல் - இரும்பாலாகிய அவல். † நடத்தமிழ் - நாடகத்தமிழ்.

கருப்புவில் வளைத்தணி மலர்க்கணை தொடுத்நியல்
களிப்புட னெளித்தெய்த மதவேளைக்
கருத்தினில் நினைத்தவ னெருப்பெழு நுதற்படு
கனற்கணி லெரித்தவர் கயிலாயப்
பொருப்பினி லிருப்பவர் பருப்பத உமைக்கொரு
புறத்தினை அளித்தவர் தருசேயே
புயற்பொழில் வயற்பதி நயப்படு திருத்தணி
பொருப்பினில் விருப்புறு பெருமாளே. (௩எ)

தனன தான தானன தனன தான தானன
தனன தான தானன தனதான.

267. உடலி னூடு போய்மீளு முயிரி னூடு மாயாத
உணர்வி னூடு வானூடு முதுதீயுள்
உலவை யூடு நீரூடு புவியி னூடு வாதாடு
மொருவ ரோடு மேவாத தனிஞானச்
சுடரி னூடு நால்வேத முடியி னூடு மூடாடு
துரிய வாகு லாதீத சிவரூபம்
தொலைவி லாத பேராசை துரிச றுத ஓர்பேதை
தொடுமு பாய மேதோசொ லருள்வாயே
மடல றுத *வாரீச அடவி சாடி மாறான
வரிவ ரால்†குவால்சாய அமராடி
மதகு தாவி மீதோடி உழவ ரால டாதோடி
மடையை மோதி யாறூடு தடமாகக்
கடல்பு காம காமீனை முடுகி வாளை தான்மேவு
கமல வாவி மேல்வீழு மலர்வாவி
கடவுள் நீல மாறாத தணிகை காவ லாவீர
கருணைமேரு வேதேவர் பெருமாளே. (௩அ)

* வாரீசஅடவி-தாமரைக்குவியல். † குவால்-கூட்டம்.

தனன்தன தான தனனதன தான
தனனதன தான தனதான.

268. உடையவர்க ளேவ ரெவர்களென நாடி
உளமகிழ ஆசு கவிபாடி
உமதுபுகழ் மேரு கிரியளவு மான
தெனவுரமு மான மொழிபேசி
நடைபழகி மீள வறியவர்கள் நாளை
நடவுமென வாடி முகம்வேருய்
நலியுமுன மேயுன் அருணவொளி வீசு
நளினவிரு பாதம் அருள்வாயே
விடைகொளுவு பாகர் விமலர்கிரி சூலர்
விகிதர்பர யோகர் நிலவோடே
விளவுசிறு பூளை நகுதலையொ டாறு
விடவரவு சூடும் அதிபாரச்
சடையிறைவர் காண உமைமகிழ ஞான
தளர் நடையி டாமுன் வருவோனே
*தவமலரு நீல மலர்சுனைய நாதி
தணிமலையு லாவு பெருமாளே. (௩௯)

---

தையதா னத்தனன தையதா னத்தனன
தையதா னத்தனன தனதான.

269. உய்யஞா னத்துநெறி கைவிடா தெப்பொழுது
முள்ளவே தத்துறைகொ டுணர்வோதி
உள்ளமோ கத்திருளை விள்ளமோ கப்பொருளை
உள்ளமோ கத்தருளி உறவாகி
வையமே ழுக்குநிலை செய்யுநீ திப்பழைய
வல்லமீ †துற்பலசை யிலமேவும்
வள்ளியா நிற்புதிய வெள்ளில்தோய் முத்தமுறி
கிள்ளிவீ சிற்றுமலர் பணிவேனை

*தவ-மிகுதி. †உற்பலசயிலம்-திருத்தணிகை.

பையரா வைப்புனையு பையர்பா கக்கலைவி
துய்யவே ளிப்புகிர திருமாரா

பையமால் பற்றிவளர் சையமேல் வைக்குமுறு
*நெய்யனே சுற்றியகு றவர்கோவே

செய்யமால் வெற்புருவ வெய்யவேல் சுற்றிவிடு
கையமால் வைத்ததிரு மருகோனே

†தெய்வயா னைக்கிளைய வெள்ளையா னைத்தலைவ
தெய்வயா னைக்கினிய பெருமாளே. (சo)

---

தனத்த தானன தத்தன தத்தன
தனத்த தானன தத்தன தத்தன
தனத்த தானன தத்தன தத்தன தனதான.

270. எலுப்பு நாடிக ளப்பொடி ரத்தமொ
டழுக்கு மூளைகள் மச்சொடு கொட்புழு
விருக்கும் வீடிதி லெத்தனை தத்துவ சதிகாரர்

இறப்பர் சூதக வர்ச்சுத ரப்பதி
உழப்பர் பூமித ரிப்பர்பி றப்புடன்
இருப்பர் வீடுகள் கட்டிய லட்டுறு சமுசாரம்

கெலிப்பர் மால்வலை பட்டுறு துட்டர்கள்
அழிப்பர் மாதவ முற்றுநி னைக்கிலர்
கெடுப்பர் யாரையு மித்திர குத்திரர் கொலைகாரர்

‡கிருத்தர் கோளகர் பெற்றுதி ரிக்கள
வரிப்பர் கூடக ரெத்தனை வெப்பிணி
கெலிக்கும் வீடதை நத்திடெ டுத்திவண் உழல்வேனோ

ஒலிப்பல் பேரிகை உக்ரவ மர்க்களப்
எதிர்த்து சூரரை வெட்டியி ருட்கிரி
உடைத்து வானவர் சித்தர்து தித்திட விடும்வேலா

---

* நெய்யனே-நேயனே † தெய்வயானை-விநாயகர் ‡ கிருத்தர்-செருக்கர்.

உலுத்த ராவண னைச்சிர மிற்றிட
வளைத்து மாபலி யைச்சிறை வைத்தவன்
*உலக்கை ராவி நடுக்கடல் விட்டவன் மருகோனே
வலிக்க வேதனை எற்றிய டிக்கொரு
செகத்தை ஈனுமெம் பச்சைநி றத்தியை
மணத்த தாதைப ரப்ரம ருக்கருள் குருநாதா
வனத்தில் வாழுமு யிர்க்குல மொத்திடு
குறத்தி யாரைம யக்கிய ணைத்துள
மகிழ்ச்சி யோடுதி ருத்தணி பற்றிய பெருமாளே. (௪௧)

தனன தந்த னத்த தனன தந்த னத்த
தனன தந்த னத்த தனதான.

271. எனைய டைந்த குட்டம் வினைமி குந்த பித்த
மெரிவ ழங்கு வெப்பு வலிபேசா
இகலி நின்ற லைக்கு முயல கன்கு லைப்பொ
டிரும லென்று ரைக்கும் இவையோடே
மனைகள் பெண்டிர் மக்கள் தமைநி னைந்து சுத்த
மதிம யங்கி விட்டு மடியாதே
மருவி இன்றெ னக்கு மரக தஞ்சி றக்கு
மயிலில் வந்து முத்தி தரவேணும்
நினைவ ணங்கு பத்த ரனைவ ருந்த ழைக்க
நெறியில் நின்ற வெற்றி முனைவேலா
நிலைபெ றுந்தி ருத்த ணியில்வி ளங்கு சித்ர
நெடிய குன்றில் நிற்கு முருகோனே
தினைவி ளங்க லுற்ற புனவி ளங்கு றத்தி
செயல றிந்த ணைக்கு மணிமார்பா
திசைமு கன்தி கைக்க அசுர ரன்ற டைத்த
சிறைதி றந்து விட்ட பெருமாளே. (௪௨)

*உலக்கைபோலும் பருத்த உருக்குத் துண்டத்தை அராவிப் பாணமாக்கி.

தான தத்தன தான தத்தன
தான தத்தன தான தத்தன
தான தத்தன தான தத்தன தந்ததான.

272. ஏது புத்தியை யாவெ னக்கினி
யாரை நத்திடு வேன வத்தினி
லேயி றக்கில்கொ லோவெ னக்குநி தந்தைதாயென்

றேயி ருக்கவு நானு மிப்படி
யேத வித்திட வோச கத்தவர்
ஏச விற்பட வோந கைத்தவர் கண்கள்காணப்

பாதம் வைத்திடை யாத ரித்துன
தாளில் வைக்கநி யேம றுத்திடல்
பார்ந கைக்குமை யாத கப்பன்முன் மைந்தனோடிப்

பால்மொ ழிக்குர லோல மிட்டிடில்
யாரெ டுப்பதெ னுவெ றுப்பொடு
பார்வி டுப்பர்க ளோவெ னக்கிது சிந்தியாதோ

ஓத முற்றெழு பால்கொ தித்தது
போல எட்டிகை நீச முட்டரை
ஓட வெட்டிய பானு சத்திகை எங்கள்கோவே

ஓத மொய்ச்சடை ஆட உற்றமர்
மான்ம ழுக்கர மாட நற்கழல்
ஓசை பெற்றிட வேந டித்தவர் தந்தவாழ்வே

மாதி னைப்புன மீதி ருக்குமை
வாள்வி ழிக்குற மாதி னைத்திரு
மார்ப ணைத்தம யூர அற்புத கந்தவேளே

மாரன் வெற்றிகொள் பூமு டிக்குழ
லார்வி யப்புற நீடு மெய்த்தவர்
வாழ்தி ருத்தணி மாம லைப்பதி தம்பிரானே. (௪௩)

தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன தனதான.

273. ஓலை இட்டகு ழைச்சிகள் சித்திர
ரூப மொத்தநி றத்திகள் விற்கணை
யோடி ணைத்தவி ழிச்சிகள் சர்க்கரை அமுதோடே

ஊறி ஒத்தமொ ழிச்சிகள் புட்குர
லோடு வைத்துமி ழற்று மிடற்றிகள்
ஓசை பெற்றந டிக்கொளி டைச்சிகள் மணம்வீசும்

மாலை இட்டக ழுத்திகள் முத்தணி
வார ழுத்துத னத்திகள் குத்திர
மால்வி ளைத்தும னத்தை அழித்திடு மடமாதர்

மார்ப சைத்தும ருட்டியி ருட்டறை
வாவெ னப்பொருள் பற்றிமு யக்கிடு
*மாத ருக்குவ ருத்தமி ருப்பது தணியாதோ

வேலை வற்றிட நற்கணை தொட்டலை
மீத டைத்துமு னைப்படை விட்டுற
வீற ரக்கன்மு டித்தலை பத்தையு மலைபோலே

மீத றுத்துநி லத்தில டித்துமெய்
வேத லட்சுமி யைச்சிறை விட்டருள்
வீர அச்சுத னுக்குந லற்புத மருகோனே

நீலி நிட்கள நிர்க்குணி நித்தில
வாரி முத்துந கைக்கொடி சித்திர
நீல ரத்தின மிட்டவ றக்கிளி புதல்வோனே

நீற திட்டுநி னைப்பவர் புத்தியில்
நேச மெத்தவ ளித்தருள் சற்குரு
நீலமுற்றநி ருத்தணி வெற்புறை பெருமாளே. (௨௨)

---

*மாதருக்கு வசப்படு புத்திகள் தவிரேனோ என்றும் பாடம்.

தத்தன தனதன தத்தன தனதன
தத்தன தனதன தனதான.

274. கச்சணி இளமுலை முக்கனி பல்வகை
கைச்சரி ஒலிவர பயல்கூறிக்
கைப்பொருள் கவர்தரு மைப்பயில் விழியினர்
கட்செவி நிகர்குழி மடமாதர்
இச்சையி னுருகிய கச்சைய னறிவிலி
எச்சமி லொருபொருள் அறியேனுக்
கிப்புவி மிசைகமழ் பொற்பத மலரிணை
இப்பொழு தணுகவுன் அருள்தாராய்
கொச்சையர் மனையிலி டைச்சியர் தயிர்தனை
நச்சியெ திருடிய குறையாலே
குற்றுர லொடுபிணி நற்றிற வகையறி
கொற்ற*வு வணமிசை வருபாயன்
அச்†சுதை நிறைகடல் நச்சர வணைதுயில்
அச்சுதன் மகிழ்தரு மருகோனே
அப்பணி சடையான் மெச்சிய தனிமலை
அப்பென அழகிய பெருமாளே. (௪௫)

---

தனதத்த தத்தனத் தனதத்த தத்தனத்
தனதத்த தத்தனத் தனதான.

275. கவடுற்ற சித்தர்சட் சமயப்ர மத்தர்நற்
கடவுட்ப்ர திஷ்டைபற் பலவாகக்
கருதிப்பெ யர்க்குறித் துருவர்க்க மிட்டிடர்க்
கருவிற்பு கப்பகுத் துழல்வானேன்
‡சவடிக்§கி லச்சினைக் கிருகைச்ச ரிக்குமிக்
கசரப்ப ளிக்கெனப் பொருளீவார்
சகலத்து ||பொற்றைபட் டயல்பட்டு நிற்குநிற்
சரணப்ர சித்திசற் றுணராரோ

---

* உவணம்-கருடன், †சுதை-பால். ‡ சவடி-ஓர்வித ஆபரணம். §இலச்சினை முத்திரைமோதிரம். || ஒற்றைபட்டு-ஏகபாவமாக வியாபித்து.

குவடெட்டு மட்டுநெட் டுவரிக்க ணத்தினைக்
குமுறக்க லக்கிவிக் ரமசூரன்
குடலைப்பு யத்தினிட் டடலைத்த நிக்குருத்
துதிரத்தி னிற்குளிக் தெழும்வேலா
சுவடுற்ற அற்புதக் *கவலைப்பு னத்தினிற்
றுயரற்ற டுத்துநிற் பவள்நாணத்
தொழுதெத்து முத்தபொற் புரிசைத் திருத்தணிச்
†சுருதித்த மிழ்க்கவிப் பெருமாளே. (சசு)

---

தனத்த தத்தனத் தந்த தாத்தன தந்ததானு.

276. கனைத்த திர்க்குமிப் பொங்கு கார்க்கடல் ஒன்றினாலே
கறுத்த றச்சிவத் தங்கி வாய்த்தெழு திங்களாலே
தனிக்க ருப்புவிற் கொண்டு வீழ்த்தச ரங்களாலே
தகைத்தொ ருத்தியெய்த் திங்கு யாக்கைக சங்கலாமோ
தினைப்புனத்தினைப் பண்டு காத்தம டந்தைகேள்வா
திருத்த ணிப்பதிக் குன்றின் மேற்றிகழ் கந்தவேளே
பனைக்க ரக்கயத் தண்டர் போற்றிய மங்கைபாலா
படைத்த ளித்தழிக் குந்த்ரி மூர்த்திகள் தம்பிரானே. ()

---

தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன தனதான.

277. கிரியுலாவிய முலைமிசை துகிலிடு
கபட நாடக விரகிக ளசடிகள்
கெடுவி யாதிக ளடைவுடை உடலினர் விரகாலே
க்ருபையி னுடொடு மணமிசை நழுவிகள்
முழுது நாறிக ளிதமொழி வசனிகள்
கிடையின் மேல்மன முருகியெ தழுவிகள் பொருளாலே.

---

* கவலை-செந்தினை. † சுருதித்தமிழ்-தமிழ் வேதமாகிய தேவாரம்.

பரிவி லாமயல் கொடுசமர் புரிபவர்
அதிக மாவொரு பொருள்தரு பவரொடு
பழைய பேரென இதமுற அணைபவர் விழியாலே
பகழி போல்விடு வினைகவர் திருடிகள்
தமையெ ணுவகை உறுகதி பெறும்வகை
பகர மாமயில் மிசைவர நினைவது மொருநாளே
அரிய ராதிபர் மலரய னிமையவர்
நிலைபெ ருதிடர் படவுடன் முடுகியெ
அசுரர் தூள்பட அயில்தொடு மறுமுக இளையோனே
அரிய கானக முறைகுற மகளிட
கணவ னகிய அறிவுள விதரண
அமரர் நாயக சரவண பவதிறல் உடையோனே
தரும நீதியர் மறையுளர் பொறையுளர்
சரிவு றுநிலை பெறுதவ முடையவர்
தளர்வி லாமன முடையவ ரறிவினர் பரராஜர்
சகல லோகமு முடையவர் நினைபவர்
பரவு தாமரை மலரடி உறவுளர்
தணிகை மாமலை மணிமுடி அழகியல் பெருமாளே. (௪அ)

---

தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதான.

278. கிறிமொழிக் கிருதரைப் பொறிவழிச் செறிஞரைக்
கெடுபிறப் பறவிழிக் கிறபார்வைக்
கெடுமடக் குருடரைத் திருடரைச் சமயதர்க்
கிகள்தமைச் செறிதலுற் றறிவேதும்
அறிதலற் றயர்தலுற் றவிழ்தலற் றருகலுற்
றறவுநெக் கழிகருக் கடலூடே
அமிழ்தலுற் றெழுதலுற் றுணர்வலற் றுயர்தலுற்
றடியிணைக் கணுகிடப் பெறுவேனோ

கிறிமொழிக்கிருதர் - பொய்சொல்லுந் தொழிலுடையோர்

பொறியுடைச் செழியன்வெப் பொழிதரப் பறிதலைப்
பொறியிலிச் சமணரத் ........ தலைபேரும்

பொடிபடச் சிவமணப் பொடிபரப் பியதிருப்
புகலியிற் கவுணியப் ........ புலவோனே

தறிவலைத் துறநகைப் பொறியெழப் புரமெரித்
தவர்திருப் புதல்வதற் ........ சுணைமேவுந்

தனிமணக் குவளைநித் தமுமலர்த் தருதிருத்
தணியினிற் சரவணப் ........ பெருமாளே. (௪௯)

தனனந் தனனத் தனனந் தனனத்
தனனந் தனனத் ........ தனதான.

279. குயிலொன் றுமொழிக்[*] குயினின் றலையக்[†]
கொலையின் பமலர்க் ........ கணையாலே

குளிருந் தவளக் குலசந் த்ரவொளிக்
கொடிகொங் கையின்முத் ........ தனலாலே

புயல்வந் தெறியக் கடலின் றலறப்
பொருமங் கையருக்[‡] ........ கலராதே

புயமொன் றமிகுத் தளர்வின் றதனிப்
புயம்வந் தணையக் ........ கிடையாதோ

சயிலங் குலையத் தடமுந் தகரச்
சமனின்[§] றலையப் ........ பொரும்வேலா

தருமங் கைவனக் குறமங் கையர்மெய்த்
தனமொன் றுமணித் ........ திருமார்பா

பயிலுங் ககனப் பிறைதண் பொழிலிற்
பணியுந் தணிகைப் ........ பதிவாழ்வே

பரமன் பணியப் பொருளன் றருளிற்
பகர்செங் கழுநிப்[‖] ........ பெருமாளே. (௫௦)

* மொழி-மொழியை யுடையவள் † அலைய-அலைக்க ‡ உக்க அலசலே-தூற்றிய அலர் மொழியினாலே; இதில் அகரந்தொகுத்தல். § சமன்-யமன். ‖ கழுநி-இது கழுநீர் என்பதன் மரூஉ.

தனன தனத்தன தனன தனத்தன
தனன தனத்தன தனன தனத்தன
தனன தனத்தன தனன தனத்தன தனதான.

280. குருவி எனப்பல கழுகு நரித்திரள்
அரிய வனத்திடை மிருக மெனப்புழு
குறவை எனக்கரி மரமு மெனத்திரி உறவாகா

குமரி கலித்துறை முழுகி மனத்துயர்
கொடுமை எனப்பிணி கலக மிடத்திரி
குலைய னெனப்புலை கலிய னெனப்பலர் நகையாமல்

மருவு புயத்திடை பணிக ளெனப்பல
கரிப ரிசுற்றமெய் கலைகள் தரித்தொரு
மதன சரக்கென ஒளிசெய் மலக்குட னதுதேடேன்

வரிய பதத்தினி னருவி இருப்பிடம்
அமையு மெனக்கிட முனது பதச்சரண்
மருவு திருப்புக ழருள எனக்கினி அருள்வாயே

விருது தனத்தன தனன தனத்தன
விதமி திமித்திமி திமித திமித்திமி
விகிர்த டடுட்டுடு ரிரிரி எனக்குகு வெகுதாளம்

வெருவ முகிழ்த்திசை உரகன் முடித்தலை
நெறுநெ றெனத்திசை அதிர அடைத்திட
மிகுதி கெடப்பொரு மசுரர் தெறித்திட விடும்வேலா

அரிய திரிப்புர மெரிய விழித்தவன்
அயனை முடித்தலை அரியு மழுக்கையன்
அகில மனைத்தையு முயிரு மளித்தவன் அருள்சேயே

அமண ருடற்கெட வசியி லழுத்திவிண்
அமரர் கொடுத்திடு மரிவை குறத்தியொ
டழகு திருத்தணி மலையில் நடித்தருள் பெருமாளே. ()

வசி - சமணர் தாங்களே ஏற்படுத்திக் கொண்ட கழுமரம்.

தனத்ததனத் தனத்ததனத்
தனத்ததனத் தனத்ததனத்
தனத்ததனத் தனத்ததனத் தனதான.

281. குலைத்துமயிர்க் கலைத்துவளைக்
கழுத்துமணித் தனத்தின்மிசைக்
குறித்தவிழிக் கயற்சுழலப் பிறைபோலக்

குளித்தநுதற் புரட்டிநகைத்
துருக்கிமயற் கொளுத்தியிணைக்
குழைச்செவியிற் றழைப்பமணத் தனபாரப்

பொலிப்புமதத் தெடுத்தகரிக்
குவட்டுமுலைப் பசப்புமிகப்
புனைத்ததுகிற் பிடித்தவிடைப் பொதுமாதர்

புயத்தில்வளைப் பிணக்கில்நடைக்
குணுக்கிலறப் பசப்பிமயற்
புகட்டிவிடுத் தழிப்பவருக் குறவாமோ

தலத்தனுவைக் குனித்தொருமுப்
புரத்தைவிழக் கொளுத்திமழுத்
தரித்துவலிக் கரித்துகிலைப் பரமாகத்

தரித்துதவச் சுரர்க்குலமுற்
பிழைக்கமிடற் றடக்குவிடச்
சடைக்கடவுட் கினித்தபொருட் பகர்வோனே

சிலுத்தசுரர்க் கெலித்துமிகக்
கொளுத்திமறைத் துதிக்கவதிற்
செழிக்கவருட் கொடுத்தமணிக் கதிர்வேலா

தினைப்புனமிற் குறத்திமகட்
டனத்தின்மயற் குளித்துமகிழ்த்
திருத்தணியிற் றரித்தபுகழ்ப் பெருமாளே. (ருஉ)

பொலிப்பு - பொலிவு.

தாந்த தனத்தன தத்தன தத்தன
தாந்த தனத்தன தத்தன தத்தன
தாந்த தனத்தன தத்தன தத்தன தனதான.

282. கூந்த லவிழ்த்துமு டித்துமி னுக்கிகள்
பாய்ந்த விழிக்குழை இட்டுமி ரட்டிகள்
*கோம்பு படைத்தமொ ழிச்சொல்ப ரத்தையர் புயமீதே

கோங்கு படைத்தத னத்தைய ழுத்திகள்
வாஞ்சை உறத்தழு விச்†சிலு கிட்டவர்
‡கூன்பிறை ஒத்தந கக்குறி வைப்பவர் பலநாளும்

ஈந்த பொருட்பெற இச்சை உரைப்பவர்
ஆந்துணை அற்றழு கைக்குர லிட்டவர்
ஈங்கிசை §உற்றவ லக்குண மட்டைகள் பொருள்தீரில்

ஏங்கி இடைக்கடை யிற்றளி வைப்
பாங்க கலக்கரு ணைக்கழல் பெற்றிட
ஈந்தினை எப்படி நற்கதி புக்கிடல் அருள்வாயே

காந்தள் மலர்த்தொடை இட்டெதிர் விட்டொரு
‖வேந்து ராக்கர ணத்தொடு மட்டிடு
காண்டிப அச்சுத னுத்தம சற்குணன் மருகோனே

$காங்கி சைமிக்கம றக்கொடி வெற்றியில்
வாங்கி யமுக்கனி சர்க்கரை மொக்கிய
கான்க னிமுற்கியல் கற்பக மைக்கரி இளையோனே

தேந்தி னைவித்தின ருற்றிட வெற்றிலை
வேங்கை மாத்தெழி லைக்கொடு நிற்பவ
தேன்சொலி யைப்புண ரப்புன முற்¶றுறை குவைவானந்

தீண்டு கழைத்திர ளூற்றது தூற்றிடு
வேங்கை தனிற்குவ ளைச்சுனை சுற்றலர்
சேர்ந்த திருத்தணி கைப்பதி வெற்புறை பெருமாளே (௫௩)

---

*கோம்பு-சினக்குறிப்பு. †சிலுகு-துன்பம். ‡கூன்-வளைந்த §உற்றவலக்குணம்-உற்ற + அவலம் × குணம். ‖வேந்துராக்கு-ராங்கராசாகிய வாலி. அரணம்-கவசம் $காங்கிசை-விருப்பம் ¶உறைகுவை-உறைபவனே.

தானா தனத்ததன தானா தனத்ததன
தானா தனத்ததன் தனதான.

283. கூர்வேல் பழித்தவிழி யாலே மருட்டியிரு
கோடா லழைத்துமலர் அணைமீதே
*கோபா வி்தழ்ப்பருக மார்போ டணைத்துவிழி
கோல்போல் சுழற்றியிடை உடைநாணக்
கார்நேர் குழற்சரிய வேவா யதட்டியிரு
காதோலை இற்றுவிழ விளையாடுங்
காமா மயக்கியர்க ளூடே களித்துமலி
காமா துரக்கலகம் ஒழியாதோ
†வீரா ணம்வெற்றிமுர சோடே தவிற்றிமிலை
வேதாக மத்தொலிகள் கடல்போல
வீறாய் முழக்கவரு சூரா ரிறக்கவிடும்
வேலா திருத்தணியில் உறைவோனே
‡மாரோ னிறக்கவிழி தாதா திருச்செவியில்
மாபோ தகத்தையருள் குருநாதா
மாலோ னளித்தவளி யார்மால் களிப்பவெகு
மாலோ டணைத்துமகிழ் பெருமாளே. (௩௪)

---

தனன தனனத் தனன தனனத்
தனன தனனத் தனதான.

284. சொரியு முகிலைப் பதும நிதியைச்
சுரபி தருவைச் சமமாகச்
சொலியு மனமெட் டனையு நெகிழ்விற்
§சுமட ரருகுற் றியல்வாணர்
தெரியு மருமைப் பழைய மொழியைத்
திருடி நெருடிக் கவிபாடித்

---

*கோபா-வில்லைப்போன்று வளைந்த அழகான †வீரணம் என்பது ஓர் வித வாத்தியம். ‡மாரோன்; மதன. §சுமடர்-அறிவிலாதவர்.

திரிய மருள்விட் *டுனது †குவளைச்
சிகரி பகரப் பெறுவேனோ
கரிய புருவச் சிலையும் வளையக்
கடையில் விடமெத் தியநீலக்
கடிய கணைபட் டுருவ வெருவிக்
கலைகள் பலபட் டனகாணிற்
குரிய குமரிக் கபய மெனநெக்
குபய சரணத் தினில்வீழ
‡ உழையின் மகளைத் தழுவ மயலுற்
றுருகு முருகப் பெருமாளே. (௫௫)

---

தாத்தன தத்தன தானன தானன
தாத்தன தத்தன தானன தானன
தாத்தன தத்தன தானன தானன தனதான.

285. தாக்கம ருக்கொரு சாரையை வேறொரு
சாகஷிய றப்பசி யாறியை நீறிடு
சாஸ்த்ரவ ழிக்கதி தூரனை வேர்வி தவழ்ழ்கும்
தாற்பரய மற்றுழல் பாவியை நாவலர்
போற்பரி வுற்றுனை யேகரு தாதிகல்
சாற்றுத மிழ்க்குரை §ஞாளியை நாள்வரை தடுமாறிப்
போக்கிட மற்றவரு தாவனை ஞானிகள்
போற்றுத லற்றது ரோகியை மாமருள்
பூத்தம லத்ரய பூரியை||நேரிய புலையனைப்
போக்கிவி டக்கட னோநர கோகதி
போய்ப்பெறு கைக்கிலை யோகதி யானது
போர்ச்சட வஜ்ரவை வேல்மயி லாவருள் புரிவாயே
மூக்கறை மட்டைம காபல காரணி
சூர்ப்பந கைப்படு மூளியு தாசனி
மூர்க்கரு லத்திவி பீஷணர் சோதரி முழுமோடி

* 'உனது புகழைத் தினமு முணர' எனவும் பாடம். †குவளைச்சிகரி—திருத்தணி. ‡உழையின் மகள்—வள்ளி §ஞாளி—குக்கல். || நேரிய—ஒத்த.

மூத்தவ ரக்கனி ராவணை னேடியல்
போற்றிவி டக்கம லாலய சீதையை
மோட்டன்வளைத்தொருதேர்மிசையேகொடு முகிலேதோய்

மாக்கன சித்திர கோபுர நீள்படை
வீட்டிலி ருத்திய நாளவன் வேரற
மார்க்கமு டித்தவி லாளிகள் நாயகன் மருகோனே

வாச்சிய மத்தள பேரிகை போல்மறை
வாழ்த்தம லர்க்கழு நீர்தரு நீள்சுனை
வாய்த்ததி ருத்தணி மாமலை மேவிய பெருமாளே. (நசு)

தத்தா னத்தா தத்தா னத்தா
தத்தா தனனத் தனதான.

286. துப்பா ரப்பா டற்றீ மொய்க்கால்
சொற்பா வெளிமுக் குணமோகத்

துற்று யப்பி றற்றே விட்டே
சுற்று மதனப் பிணிதோயும்

இப்பா வக்கா யத்தா சைப்பா
*டெற்றே உலகிற் பிறவாதே

†எத்தார் வித்தா ரத்தே கிட்டா
எட்டா அருளைத் தரவேணும்

தப்பா மற்பா டிச்சே விப்பார்
தத்தாம் வினையைக் களைவோனே

தற்கா ழிச்சூர் செற்றுய் மெய்ப்போ
தத்தாய் தணிகைத் தனிவேலா

அப்பா கைப்பா லைப்போற் சொற்கா
வற்பா வைதனத் தணைவோனே

அத்தா நித்தா முத்தா சித்தா
அப்பா குமரப் பெருமாளே. (நஎ)

---

* எற்றே - எத்தன்மைத்து † எத்தார் - ஏமாற்றுபவர்.

தனதான தனத்தன தான
தனதான தனத்தன தான
தனதான தனத்தன தான தனதான.

287. நிலையாத சமுத்திர மான
சமுசார துறைக்கணின் மூழ்கி
நிசமான தெனப்பல பேசி அதனாலே
நெடுநாளு முழைப்புள தாகிப்
பெரியோர்க ளிடைக்கா வாகி
நினைவால்நி னடிக்தொழில் பேணித் துதியாமல்
தலையான உடற்பிணி யூறிப்
பவநோயி னலைப்பல வேகிச்
சலமான பயித்திய மாகித் தடுமாறித்
தவியாது பிறப்பையு நாடி
அதன்வேரை அறுத்துனை ஓதித்
தலமீது பிழைத்திட வேநின் அருள்தாராய்
கலியாண சுபுத்திர னாகக்
குறமாது தனக்கு விநோதக்
கவினூறு புயத்தினி லாவி விளையாடிக்
களிகூரு முனைத்துணை தேடு
மடியேனு மருட்பெற வேவை
கடலூடு முனைக்கரு ளான முருகோனே
பலகாலு முனைத்தொழு வோர்கள்
மறவாது திருப்புகழ் கூறிப்
படிமீது துதித்துடன் வாழ அருள்வேளே
பதியான திருத்தணி மேவு
சிவலோக மெனப்பரி வேறு
பவரோக வயித்திய நாத பெருமாளே. (௫௮)

---

தனத்த தத்ததனத் தனதான.

288. நினைத்த தெட்டனையில் தவறாமல்
நிலைத்த புத்திதனைப் பிரியாமல்

கனத்த தத்துவமுற் றழியாமல்
கதித்த நித்தியசித் தருள்வாயே
மனித்தர் பத்தர்தமக் கெளியோனே
மதித்த முத்தமிழிற் பெரியோனே
செனித்த புத்திரரிற் சிறியோனே
திருத்த ணிப்பதியிற் பெருமாளே. (௫௯)

தனன் தானனந் தனன தானனந்
தனன தானனந் தனதான.

289. பகலி ராவினுங் கருவி யாலனம்
பருகி ஆவிகொண் டுடல்பேணிப்
பழைய வேதமும் புதிய நூல்களும்
பலபு ராணமுஞ் சிலவோதி
அகல நீளமென் றளவு கூறரும்
பொருளி லேயமைந் தடைவோரை
அசடர் மூகரென் றவல மேமொழிந்
தறிவி லேனழிந் திடலாமோ
சகல லோகமும் புகல நாடொறுஞ்
சருகி லாதசெங் கழுநீரும்
தளவு நீபமும் புனையு மார்பதென்
தணிகை மேவுசெங் கதிர்வேலா
சிகர பூதரந் தகர நான்முகன்
சிறுகு வாசவன் சிறைமீளத்
திமிர சாகரங் கதற மாமரஞ்
சிதற வேல்விடும் பெருமாளே. (௬௦)

தனன தத்தன தத்தன தத்தன
தனன தத்தன தத்தன தத்தன
தனன தத்தன தத்தன தத்தன தனதான.

290. பழமை செப்பிய ழைத்ரா மித்துடன்
முறைமை சக்கிய ணைத்துந கக்குறி
படவ ழுத்துமு கத்தைமு கத்துற உறவாடிப்

பதறி எச்சிலை இட்டும ருத்திடு
விரவு குத்திர வித்தைவி ளைப்பவர்
பலவி தத்தினு மற்பரெ னச்சொலு மடமாதர்

அழிதொ ழிற்குவி ழிப்பொடு நத்திய
அசட னைப்பழி உற்றவ வத்தனை
அடைவு கெட்டபு ரட்டனை *முட்டனை அடியேனை

அகில சத்தியு மெட்டுறு சித்தியு
மெளிதெ னப்பெரு வெட்டவெ ளிப்படும்
அருணை பொற்பத முற்றிட வைப்பது மொருநாளே

குழிவி ழிப்பெரு நெட்டல கைத்திரள்
கரண மிட்டுந டித்தமி தப்படு
†குலிலி இட்டக ளத்திலெ திர்த்திடு மொருசூரன்

குருதி கக்கிய நிர்த்துவி ழப்பொரு
நிசிச ரப்படை பொட்டெழ விக்ரம
குலிச சத்தியை விட்டருள் கொற்சித மயில்வீரா

தழையு டுத்தகு றத்திய தத்தனை
வருடி வட்டமு கத்தில தக்குறி
தடவி வெற்றிக லித்தமு லைக்குவ டதன்மீதே

‡தாள பொற்பணி கச்சுவி சித்திரு
குழைதி ருத்திய ருத்திமி குத்திடு
தணிம லைச்சிக ரத்திடை உற்றருள் பெருமாளே. (உ௯)

---

தனதன தத்தத் தனதன தத்தத்
தனதன தத்தத் தனதான.

291. புருவநெ றித்துக் குறுவெயர் வுற்றுப்
புளகித வட்டத் தனமானார்

பொருவிழி யிற்பட் டவரொடு கட்டிப்
புரளுத மட்டுப் புலையேனைக்

முட்டனை - முட்டாள். † குலவு-வீராவேச ஒலி. ‡ 'சதிர்பெறத் தழுவிப்புணர் வித்தக முநிவர் சித்தர் கணத்தர் துதித்திடு தலைமை பெற்றருணைப்பதி யிற்றிகழ் பெருமாளே' என்றும் பாடம்.

கருவிழி உற்றுக் குருமொழி அற்றுக்
கதிதனை விட்டிட் டிடுதீய

கயவனை வெற்றிப் புகழ்நிகழ் பத்மக்
கழல்கள்து திக்கக் கருதாயோ

செருவசு ரப்பொய்க் குலமது கெட்டுத்
திரைகட லுட்கப் பொரும்வேலா

தினைவன முற்றுக் குறவர் மடப் * பைக்
கொடிதனை வெற்பைப் புணர்மார்பா

பெருகிய நித்தச் சிறுபறை †கொட்டிப்
‡பெரிகை முழக்கப் புவிமீதே

பிரபல சுத்தத் தனியலை உற்றுப்
ப்ரியமிகு சொக்கப் பெருமாளே. (௨௯௧)

---

தானனத் தத்ததத்த தானனத் தத்ததத்த
தானனத் தத்ததத்த தனதான.

292. பூசலிட் டுச்சரத்தை நேர்கழித் துப்பொருத்த
போர்விடத் தைக்கெடுத்து வடிகூர்வாள்

போலமுட் டிக்குழைக்கு ளோடிவெட் டித்திளைத்த
போகமிக் குப்பரிக்கும் விழியார்மேல்

ஆசைவைத் தாக்கலக்க மோகமுற் றுத்துயர்க்கு
ளாகிமெத் தக்களைத்து அழியாமே

ஆரணத் தாக் § கணத்து ணண்மலர்ப் பொற்பதத்தை
யான்வழுத் திச்சுகிக்க அருள்வாயே

வாசமுற் றுத்தழைத்த தாளிணைப் பத்த || ரத்த
மாதர்சித் தச்சிறைக்குள் அழியாமே

வாழ்வுறப் புத்திரத்ன பேழையொக் கச்சிறக்கு
மாமயிற் பொற்கழுத்தில் வருவீரா

---

*பைக்கொடி-பைங்கொடி †கொட்டப் பெருகி யசத்தப்புவியோனே என்றும் பாடம். ‡ பெரிகை - பேரிகை § கணம் - கூட்டம். || அத்த மாதர்கள்-பொருள் பறிக்கும் பெண்டிர்.

வீசுமுத் துத்தெறிக்க ஓலைபுக் குற்றிருக்கும்
வீறுடைப் பொற்குறத்தி கணவோனே
வேலெடுத் துக்கரத்தில் * நீலவெற் பிற்றழைத்த
வேளெனச் சொற்கருத்தர் பெருமாளே. (௧௫)

---

தனனத் தந்ததனத் தனனத் தந்ததனத்
தனனத் தந்ததனத் தனதான.

293. †பொருவிக் கந்தொடரச் ‡செருவிக் கன்றொடுமிப்
புதுமைப் புண்டரிகக் கணையாலே
புளகக் கொங்கையிடத் திளகக் §கொங்குதழைப்
பொழியத் தென்றலுலாக் குதலாலே
தெருவிற் பெண்கள்மிகக் கறுவிச் சண்டையிடத்
திரியத் திங்களுதிப் பதனாலே
செயலற் றிங்கணையிற் றுயிலற் றஞ்சியயர்த்
தெரிவைக் குன் ||குரவைத் தரவேணும்
அருவிக் குன்றுடையப் பரவிச் செக்கினைவித்
தருமைக் குன்றவருக் கெளியோனே
அசுரர்க் கங்கயல்பட் டமரர்க் கண்டமளித்
தயில்கைக் கொண்டதிறற் குமரேசா
தருவைக் கற்பதியிற் றிருவைச் சென்றணுகித்
தழுவிக் கொண்டபுயத் திருமார்பா
தரளச் சங்குவயற் றிரளிற் றங்குதிருத்
தணிகைச் செங்கழுநிப் பெருமாளே. (௧௬)

---

தத்த தத்த தத்த தத்த
தத்த தத்த தத்த தத்த
தத்த தத்த தத்த தத்த தனதான.

294. பொற்ப தத்தி னைத்து தித்து
நற்ப தத்தி லுற்ற பத்தர்
பொற்பு ரைத்து $நெக்கு ருக்க அறியாதே

---

* நீலவெற்பு - திருத்தணிகை. † பொருவிக்கம் - வருத்தும் விக்கல். ‡ செரு இக்கன் - கரும்பு வில்லையுடைய மன்மதன். § கொங்கு-பூந்தாது. || குரவு - திருமணம். $ நெக்குருக்க - மனமானது நெகிழ்ந்துருக.

புத்த கப்பி தற்றை விட்டு
வித்த கத்து னைத்து திக்க
புத்தி யிற்க லக்க மற்று — நினையாதே
முற்ப டத்த லத்து தித்து
பிற்ப டைத்த கிர்த்ய முற்றி
முற்க டைத்த வித்து நித்த — முழல்வேனை
முட்ட விக்க டைப்பி றப்பி
னுட்கி டப்ப தைத்த விர்த்து
முத்தி சற்றெ னக்க ளிப்ப — தொருநாளே
வெற்ப ளித்த தற்ப ரைக்கி
டப்பு றத்தை உற்ற ளித்த
வித்த கத்தர் பெற்ற கொற்ற — மயில்வீரா
வித்தை தத்வ முத்த மிழ்ச்சொ
லத்த சத்தம் வித்த ரிக்கு
மெய்த்தி ருத்த ணிப்பொ ருப்பில் — உறைவோனே
கற்ப கப்பு னக்கு றத்தி
கச்ச டர்த்த சித்ர முற்ற
கற்பு றத்தி ருத்த னத்தில் — அணைவோனே
கைத்த ரக்கர் கொத்து கச்சி
னத்து *வஜ்ர னுக்க மைத்த
கைத்தொ ழுத்த றுத்து விட்ட — பெருமாளே. (பாறு)

---

தனதனத்தன தனதனத்தன
தனந்தந்தந் தனந்தா
தனதனத்தன தனதனத்தன
தனந்தந்தந் தனந்தா
தனதனத்தன தனதனத்தன
தனந்தந்தந் தனந்தா — தனனதா தனனு.

295. விலைபிறக்கவு முலைமருட்டவு
மணந்துன் றுஞ் செழுந்தார்
புனைமுகிற்குழ றனையவிழ்க்கவும்
விடங்கஞ்சஞ் சாஞ்சேர்

---

* வஜ்ரன் - இந்திரன். † கைத்தொழு - விலங்கு.

விழிவெருட்டவு மொழிபுரட்டவு
நினைந்தொன்றுஞ் சிலம்பார் அரியபூறுடனே

வெளியிலிறக்கவும் வலியமுட்டரை
எதிர்ந்தும்பின் தொடர்ந்தே
இலைசுணப்பொடி பிளவளித்திடு
திரும்பும்பண் பரன்றே
எனவுரைத்தவர் தமைவரப்பணி
உடன்கொண்டன் புடன்போய் சயனபாயலிலே

கலைநெகிழ்க்கவு மயல்விளைக்கவும்
நயங்கொண்டங் கிருந்தே
அணுகியிட்டுள பொருள்பறித்தற
முனிந்துங்கண் சிவந்தே
கலகமிட்டென மிகநடித்தபின்
வருந்தொந்தங் கடந்தார் புதியபேருடனே

கதைகள்செப்பவு மொனதுபுத்திகள்
மனங்கொன்றுந் துலங்கா
மனைதனிற்சிறு பொழுதிருக்கினும்
நினைந்துங்கொண் டிருந்தே
கடிமலர்ப்பத மனுகுதற்கறி
விலன்பங்கன் பெரும்பா தகனீயருள்வாய்

சிலைகணைக்கொடு மிகநடத்தென
தனந்தந்தந் தனந்தா
திரிபுரத்தெரி புகநகைத்தருள்
சிவன்பண்டங் கிருந்தே
மலர்வனப்பிர மனைநடுத்தலை
அரிந்துங்கொண் டிரந்தோன் அருளுமாமுருகா

செருவிடத்தலை களையுறுக்கிய
திநந்தொந்தொந் திநந்தோ
மெனவுடுக்கைகள் மணிகளப்பறை
டகுண்டங்குண் டகுண்டா
டிகுகுடிக்குகு டிகுகுடிக்குகு
டிகுண்டிங்குண் டிகுண்டி எனவிராவணனீள்

மலையெனத்திகழ் முடிகள்பத்தையு
*மிரண்டஞ்சொன் பதொன்றேய்
பணைபுயத்தையு மொருவகைப்பட
வெகுண்டம்பொன் றெறிந்தோன்
†மகனன்மைத்துன னசுரரைக்குடல்
துளைந்தங்கம் பிளந்தே மயிலின்மேல்வருவாய்

வயல்முதுக்கய லினமதர்த்தெழு
வரம்பின்கண் புரண்டே
பெருகடத்திடை செலவுநித்திலம்
நிறைந்தெங்குஞ் சிறந்தே
வரிசைபெற்றுயர் தணிமலைப்பதி
புரந்தென்பங் கிருந்தாய் இளையவாபெருமாளே. (௨௯௫)

---

தான தத்தன தானன தானன
தான தத்தன தானன தானன
தான தத்தன தானன தானன தனதான.

296. ஓதி வைத்தவர் கூலிகொ டாதவர்
மாத வர்க்கதி பாதக மானவர்
பூச லிற்கன லாயெரி காளையர் மறையோர்கள்
ஊர்த லைக்கிட பேசெய்வ ரேழையர்
ஆர்த னக்குமு தாசின மானவர்
ஓது முத்தமி ழ்நூலை நாடிலர் இரவோருக்
கேது மித்தனை தானமி டாதவர்
பூத லத்தினி லோபம தானவர்
ஏதி னிற்சிவ ஞானியை மோனியை இகழ்வோரும்
ஏத சிற்றறி ஞானமி லாதவர்
யோக மற்றிடு போகிக மீறினர்
ஈன ரித்தனை பேர்களு மேழ்நர குழல்வாரே
தாத தத்தத தாதத தாதத
தூது துத்துது தூதுது தூதுது
சாச சச்சச சாசச சாசச சசசாச

* இரண்டஞ்சொன்பதொன்றேய் இருபது புயங்கள். † மகன்-மன்மதன்.

டாட டட்டட டாடட டாடட
டுடு டுட்டுடு டுடுடு டுடுடு
டீடி டிட்டிடி டீடிடி டீடிடி டிடிடீடி
தீதி தித்திதி தீதிதி தீதிதி
தோதி குத்திகு தோதிகு தோதிகு
சேகு செக்குகு சேகுகு சேகுகு செகுசேகு
சேயெனப்பல ராடிட மாகலை
ஆயு மூத்தமர் கூறிடும் வாசகர்
சேர் திருத்தணி மாமலை மேவிய பெருமாளே. (௨௯௬)

---

தனதனத்தன தனதனத்தன தனதனத்தன தனதான.

297. மலைமுலைச்சியர் கயல்விழிச்சியர் மதிமுகத்தியர் அழகான
மயில்நடைச்சியர் குயில்மொழிச்சியர் மனதுருக்கிகள் அணைமீதே
கலைநெகிழ்த்தியெ உறவணைத்திடு கலவியிற்றுவள் பிணிதீராக்
கசடனைக்குண அசடனைப்புகல் கதியில்வைப்பதும் ஒருநாளே
குலகிரிக்குல முருவவிட்டமர் குலவுசித்திர முனைவேலா
குறவர்பெற்றிடு சிறுமியைப்புணர் குமரசற்குண மயல்வீரா
தலமதிற்புக லமரருக்கிடர் தனையகற்றிய அருளாளா
தருநிரைத்தெழு பொழில்மிகுத்திடு தனிமலைக்குயர் பெருமாளே.

---

தனத்த தனத்தன தனதன தனதன
தனத்த தனத்தன தனதன தனதன
தனத்த தனத்தன தனதன தனதன தனதான.

298. முகத்தை மினுக்கிக ளசடிகள் கபடிகள்
விழித்து மருட்டிகள் கெருவிகள் திருடிகள்
மொழிக்குள் மயக்கிகள் வகைதனில் நகைதனில் விதமாக
முழித்து மயற்கொளு மறிவிலி நெறியிலி
புழுக்கு டலைப்பொரு ளெனமிக எணியவர்
முயக்க மடுத்துழி தருமடி யவனிடர் ஒழிவாக
மிகுத்த முகைப்பெறு மறுமுக சரவண
புயத்தி ளகிக்கமழ் நறைமலர் தொடைமிக
விசைக்கொ டுலைப்பெறு மாகத கலபியும் வடிவேலும்

வெளிப்ப டவுற்றினி இரவொடு பகலற
விருப்பொ டுனைப்புக ழுமுறியல் கவிசொல
விதித்த னெழுத் *தினை தரவரு மொருபொரு ளருளாயே

புதைத்த முலைக்கொடு திரிபுர மெரிபட
நகைத்த வருக்கிட முறைபவள் அலைமகள்
பொருப்பி லிமக்கிரி பதிபெறு மிமையவள் அபிராமி

†பொதுற்று திமித்திமி நடமிடு பகிரதி
எழுத்த றிருக்கிரி பகவதி கவுரிகை
பொருட்ப யனுக்குரை எனுநிலை சமைபவள் அமுதாகச்

செகத்தை அளிப்பவர் நெடியவர் ‡கடையவள்
அறத்தை வளர்த்திடு பரசிவை குலவதி
திறத்த மிழைத்தரு பழையவ ளருளிய சிறியோனே

செருக்கு மரக்கர்கள் பொடிபட வடிவுள
கரத்தி லயிற்கொடு பொருதிமை யவர்பதி
திருத்த னிருப்பதி தனில்மயில் நடவிய பெருமாளே.

---

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான.

299. முகிலு மிரவியு முழுகதிர் தரளமு
முடுகு சிலைகொடு கணைவிடு மதனனு
முடிய வொருபொரு ளுதவிய புதல்வனு மெனநாடி

முதிய §கனனென தெய்வதரு நிகரென
முதலை படுவினி ||லதவிய புடலென
முகமு மறுமுக முடையவ னிவனென வறியோரைச்

சகல பதவியு முடையவ ரிவரென
வலிய தநுவல விஜயவ னிவனென
தபனன் வலம்வரு கிரிதனை நிகரென இசைபாடிச்

---

* இனைதர-மெலிய. † பொது உற்று. பொது-அம்பலம். ‡ கடையவள்-தங்கை. § கனன்-கர்ணன். || அதவிய-சம்மாரஞ்செய்

*சயில பகலவ ரிடைதொறும் நடைசெயும்
இரவு தவிரவெ இருபத மடையவெ
†சவித வடியவர் தவமதில் வரவருள் புரிவாயே

அகில புவனமு மடைவினி லுலவிய
இமய கிரிமயில் குலவரை தருவென
அதிர வருபுர நொடியினி லெரிசெய்த அபிராமி

அமரு மிடமென வெனுமொரு வடிவுடை
யவ‡னி லுரையவன் முதுதமி ழுடையவன்
அரியொ டயனுல கரியவ னடனவில் சிவன்வாழ்வே

தகிரி நிசிசரர் தடமுடி பொடிபட
வலைக ளெறிகடல் சுவறிட களமிசை
திரடு குறடுகள் புரள்வெகு குருதிகள் பெருகாறு

சிகர கிரிநெரி படவலி கொடுபொரு
திமிர தினகர குருபர இளமையில்
சிவணி வருமொரு தணிகையில் நிலைநிகழ் பெருமாளே.

---

தனத்த தனதன தனத்த தனதன
தனத்த தனதன தனதான.

300. முடித்த குழலினர் வடித்த மொழியினர்
முகத்தி லிலகிய விழியாலும்
முலைக்கி ரிகள்மிசை அசைத்த துகிலினும்
இளைத்த இடையினு மயலாகிப்
படுத்த அணைதனி லணைத்த அவரொடு
படிக்கு ளநுதினம் உழலாதே
பருத்த மயில்மிசை நினைத்த பொழுதுன
பதத்து மலரிணை அருள்வாயே
துடிக்கொள் தசமுகர் முடித்த லைகள்விழ
எடுத்த சரம்விடு மருகாமன்

*சயில பகலவர் - கற்பிளவை ஒத்தவர். †சவித-இதத்தொடு கூடிய ‡இல் உரையவன் - உரையிறந்தவன், வாக்குக் கெட்டாதவன்.

துகைத்தி உலகையொ ரடிக்கு ளளவிடு
துலக்க அரிதிரு மருகோனே

தடைத்து ஞெறியகல் வயற்கு வெதிர்படு
தழைத்த கதலிகள் அவைசாயத்

தருக்கு மெழிலுறு திருத்த ணிகைமிசை
தழைத்த சரவண பெருமாளே. (எ௬)

---

தத்தத் தனத்ததன தத்தத் தனத்ததன
தத்தத் தனத்த தனதான.

301. முத்துத் தெறிக்கவள ரிக்குச் சிலைக்கைமதன்
முட்டத் தொடுத்த மலராலே

முத்தத் திருச்சலதி முற்றத் *துதித்தெனமுற்
பட்டெ றிக்கு நிலவாலே

எத்தத் தையர்க்குமிக மிக்குப் பெருக்கமணி
இப்பொற் கொடிச்சி தளராதே

எத்திக் குமுற்றபுகழ் வெற்றித் திருத்தணியி
லிற்றைத் தினத்தில் வரவேணும்

மெத்தச் சினத்துவடி விக்ரக் குலச்சிகர
வெற்பைத் தொளைத்த கதிர்வேலா

மெச்சிக் குறத்திதன மிச்சித் தணைத்தருகி
மிக்குப் பணைத்த மணிமார்பா

மத்தப் ரமத்தனணி †மத்தச் சடைப்பரமர்
சித்தத்தில் வைத்த கழலோனே

வட்டத் திரைக்கடலில் மட்டித் தெதிர்த்தவரை
வெட்டிக் களித்த பெருமாளே. (எஎ)

*உதித்தி - உதி, த். உதி - உலைத்துருத்தி †மத்தம் - ஊமத்தம்.

வீசப்ப யோதி துஞ்ச வேதக்கு லால னஞ்ச
மேவிட்ட சூர்த டிந்த கதிர்வேலா
வீரப்ர தாப பஞ்ச பாணத்தி னல்ம யங்கி
வேடிச்சி காண வந்த பெரியோனே
கூசிப்பு காவொ துங்க*மாமற் சிகாவ ரிந்த
†கூளப்பு ராரி தந்த சிறியோனே
கோழிப்ப தாகை கொண்ட கோலக்கு மார கண்ட
கோடைக்குள் வாழ வந்த பெருமாளே (௩௬௪)

தனத்தந் தானன தனத்தந் தானன
தனத்தந் தானன தனதான.

365. கலக்குங் கோதற வடுக்குஞ் சீரிய
கருப்பஞ் சாறெனு மொழியாலே
கருத்தும் பார்வையு முருக்கும் பாவிகள்
கடைக்கண் பார்வையில் அழியாதே
விலக்கும் போதக மெனக்கென் றேபெற
விருப்பஞ் சாலவு முடையேனுன்
வினைக்கொண் டேமன நினைக்குந் தீமையை
விடற்கஞ் சேலென அருள்வாயே
அலைக்குந் தானவர் குலத்தின் சேனையை
அறுக்குங் கூரிய வடிவேலா
அழைத்துன் சீரிய கழற்செந் தாமரை
அடுக்கும் போதகம் உடையோராம்
சிலர்க்கென் றேகதி அளிக்குந் தேசிக
திருச்செங் கோபுர வயலூரா
§திதிக்கும் பார்வையின் மதிப்புண் டாகிய
திருச்செங் கோடுறை பெருமாளே. (௩௬௫)

---

*மாமற் சிகாவரிந்த-மாமனாகிய தக்கனது தலையை யரிந்த.
†கூளப்புரம்-எளிய திரிபுரம். ‡திதிக்கும்-நிலைபெறுவிக்கும்.

தந்த தாத்தத் தனத்தந் தாத்தத்
தந்த தாத்தத் தனத்தந் தாத்தத்
தந்த தாத்தத் தனத்தந் தாத்தத் தனதான.

366. துஞ்சு கோட்டிச் சுழற்கண் காட்டிக்
கொங்கை நோக்கப் பலர்க்குங் காட்டிக்
கொண்ட ணைப்பித் துலக்கஞ் சிர்த்துத் திரியாணர்

*தொண்டை வாய்ப்பொற் கருப்பஞ் சாற்றைத்
தந்து சேர்த்துக் கலக்குந் தூர்த்தத்
துன்ப வாழ்க்கைத் தொழிற்பண் டாட்டத் துழலாதே

கஞ்சம் வாய்த்திட் டவர்க்குங் கூட்டிக்
கன்று மேய்த்திட் டவர்க்குங் †கூற்றைக்
கன்ற மேய்த்திட் டவர்க்குந் ||தோற்றக் கிடையாதீ

கண்டு வேட்டுப் பொருட்கொண் டாட்டத்
தின்ப வாக்யத் தொனைக்குங் கேட்கத்
தந்து காத்துத் திருக்கண் சாத்தப் பெறுவேனோ

வஞ்ச மாய்ப்புக் கொளிக்குஞ் ‡சூற்கைத்
துன்று சூர்ப்பொட் டெழச்சென் றேற்றிப்
பண்டு வாட்குட் களிக்குந் தோட்கொத் துடையோனே

வண்டு பாட்டுற் றிசைக்குந் தோட்டத்
தண்கு ராப்பொற் பூக்§கும்பேற்றித்
தொண்டர் கூட்டத் திருக்குந் தோற்றத் தீபயோனே

கொஞ்சு வார்த்தைக் கிளித்தண் சேற்கட்
குன்ற வேட்டிச் சிறைக்கண் காட்டிக்
கொண்டு வேட்டுப் புனப்பைங் காட்டிற் புணர்வோனே

கொங்கு லாத்தித் தழைக்குங் காப்பொற்
கொண்ட லாத்துச் சிறக்குங் காசிக்
கொங்கு நாட்டுத் திருச்செங் கோட்டுப் பெருமானே. ()

*தொண்டை-கொவ்வைக்கனி. †கூற்று-நமன். ||தோற்றக்கிடையா-காணற்கரிதாய. ‡சூல்-சூலம். §கும்புவற்றி-கும்புகூட்டி.

தந்தத் தனத்தந் தாத்தன
தந்தத் தனத்தந் தாத்தன
தந்தத் தனத்தந் தாத்தன தனதான.

367. பந்தக் கடைக்கண் காட்டுவர்
கந்தக் குழற்பின் காட்டுவர்
மஞ்சட் பிணிப்பொன் காட்டுவர் அநுராக
வஞ்சத் திரக்கங் காட்டுவர்
நெஞ்சிற் பொருத்தங் காட்டுவர்
வன்பற் றிருப்புங் காட்டுவர் தனபார
சந்தப் பொருப்புங் காட்டுவர்
உந்திச் சுழிப்புங் காட்டுவர்
சங்கக் கழுத்துங் காட்டுவர் விரகாலே
சண்டைப் பிணக்குங் காட்டுவர்
பண்டிட் டொடுக்கங் காட்டுவர்
தங்கட் கிரக்கங் காட்டுவ தொழிவேனோ
பந்தித் தெருக்கக் கோட்டினை
இந்துச் சடைக்கண் சூட்டுமை
பங்கிற் றகப்பன் தாட்டொழு குருநாதா
பைம்பொற் பதக்கம் பூட்டிய
அன்பற் கெதிர்க்குங் கூட்டலர்
பங்கப் படச்சென் றோட்டிய வயலூரா
கொந்திற் புனத்தின் பாட்டிய
லந்தக் குறப்பெண் டாட்டொடு
கும்பிட் டிடக்கொண் டாட்டமொ டணைவோனே
குன்றிற் கடப்பந் தோட்டலர்
மன்றற் பரிக்குங் கோட்டிய
கொங்கிற் றிருச்செங் கோட்டுறை பெருமாளே. (௩௬௭)

---

தனந்தாத் தனந்தாத் தனந்தாத் தனந்தாத்
தனந்தாத் தனத்தந் தனதான.

368. இடம்பார்த் திடம்பார்த் திதங்கோட் டியந்தேற்
றிணங்காப் பரிப்பொங் கலாய்ப்போழ்தி

இறுங்காற் கிறுங்காற் கிரும்பார்க் குநெஞ்சார்க்
கிரங்கார்க் கியற்றண் டமிழ்நூலின்

உடம்பாட் டுடன்பாட் டியப்பாத் தயங்காத்
துளங்காத் திடப்புன் கவிபாடி

ஒதுங்காப் பொதுங்காப் பதுங்காப் பிகன்றேத்
துறும்பாற் குணக்கன் புலமாயோ

கடந்தோற் கடந்தோற் றறிந்தாட் கருந்தாட்
கணைந்தாட் கணித்திண் புயமீவாய்

†கரும்போற் கரும்போர்க் குளங்காட் டிகண்டேத்
துசெங்கோட் டில்நிற்கும் கதிர்வேலா

அடைந்தோர்க் குணர்ந்தோர்க் களித்தோர்க் கமைந்தோர்க்
கவிழ்ந்தோர்க் குணற்கொன் றிலதாகி

அலைந்தோர்க் குலைந்தோர்க் கிணைந்தோர்க் கலந்தோர்க்
கறிந்தோர்க் களிக்கும் பெருமாளே. (௩௬௮)

---

தான தான தனத்தந் தான தான தனத்தந்
தான தான தனத்தந் தனதான.

369. கோவை வாயி தழுக்குந் தாக போக மளிக்குங்
கோதை மாதர் முலைக்குங் குறியாலும்

கோல மாலை வளைக்குந் தோளி னாலு மணத்தங்
கோதி வாரி முடிக்குங் குழலாலும்

ஆவி கோடி அளிக்குந் ‡சேலி னாலு மயக்குண்
டாசை யாயி னுமித்தந் தளராதே

ஆசி லாத மறைக்குந் தேடொ ணாதொ ருவர்க்கொண்
ருடல் தாள்க ளெனக்கின் றருள்வாயே

சேவி லேறு நிருத்தன் தோகை பாக னளிக்குந்
தியாக சீல குணத்தன் திருமாலும்

டம் தோல்-கடம் தோற்று-மதயானை காட்டில் எதிர்படல் †கரும் போற்கு அரும்போர்க்குளம்காட்டி-மன்மதனுக்கு அரியபோராகநெற்றிக் கண் காட்டிய பரமசிவன். ‡ சேல்—இது கண்ணுக்கு உவமையாகுபெயர்.

தேடொ ணாத பதத்தன் தீதி லாத மனத்தன்
 தேயு வான நிறத்தன் புதல்வோனே
காவி டாத திருச்செங் கோடு நாடு தனக்குங்
 காவி சூழ்வ யலிக்கும் ப்ரியமானாய்
காதி மோதி எதிர்க்குஞ் சூர ராவி கலக்குங்
 கால னுடல் தவிர்க்கும் பெருமாளே. (௩௬௯)

தனத்தந் தான தானன தனத்தந் தான தானன
தனத்தந் தான தானன. தனதான.

370. வருத்தங் காண நாடிய குணத்தன் பான மாதரு
 மயக்கம் பூண போதிய திரமீதே
மலக்கங் கூடி யேயின உயிர்க்குஞ் சேத மாகிய
 மரிக்கும் பேர்க ளோடுற வணியாதே
பொருத்தும் பாவ நீடிய மலத்தின் தீமை கூடிய
 பிறப்புந் தீர வேயுன திருதாளே
பெறத்தந் தாள வேயுயர் சுவர்க்கஞ் சேர வேயருள்
 பெலத்தின் கூர்மை யானது மொழிவாயே
இரத்தப் பாய மேனிக ளுராத்துஞ் சாடி வேல்கொடு
 எதிர்த்துஞ் சூரர் மாளவெ பொரும்வேலா
இசைக்குந் தாள மேளமெ தனத்தந் தான தானன
 எனத்தின் கூளி கோடிகள் புடைசூழத்
திருத்தன் பாக வேயொரு மயிற்கொண் டாடி யேபுகழ்
 செழித்தன் பாக வீறிய பெருவாழ்வே
திரட்சங் கோடை வாவிகள் மிகுத்துங் காவி சூழ்தரு
 திருச்செங் கோடு மேவிய பெருமாளே. (௩௭0)

தந்த னத்தத் தந்த னத்தத்
தந்த னத்தத் தந்த னத்தத்
தந்த னத்தத் தந்த னத்தத் தனதான.

371. பொய்ம்ற லைப்பொய்க் குப்பிறப்பைத்
 தும்ப றுத்திட் டின்று நிற்கப்
 புந்தி யிற்சற் றுங்கு றிக்கைக் கறியாமே

பொங்கி முக்கிச் சங்கை பற்றிச்
சிங்கி யொத்துச் சங்க டத்துப்
பண்பு டைத்துக் கஞ்ச மைக்கட் கொடியார்மேல்

நூன்று மிச்சைப் பண்ட னுக்குப்
பண்பா ளித்துச் சம்பா ரித்துத்
தும்பி பட்சிக் கும்பா சச்செய்ப் பதியாதே

கொண்டு பட்டுத் தெண்ட னிட்டுக்
கண்டு பற்றத் தண்டை வர்க்கத்
துங்க ரத்தப் பங்க யத்தைத் தருவாயோ

குன்றெ டுத்துப் பந்த டித்துக்
கண்சி வத்துச் சங்க ரித்துக்
கொண்ட லொத்திட் டிந்த்ர னுக்கிச் சுரலோகா

கொம்பு குத்திச் *சம்ப முற்றித்
†திண்ட லத்திற் றண்டு வெற்பைக்
கொண்ட முற்றிச் சண்டை இட்டுப் பொருப்பேயும்

சென்று ரித்துச் சுந்த ரிக்கச்
சந்த விர்த்துக் கஞ்சு கித்துச்
சிந்தை யுட்பற் றின்றி நிற்கக் களிகூரும்

செண்ப கத்துச் சப்பு வக்குக்
கொம்ப கத்துத் ‡பண்பு ரைத்துச்
‖செங்கு வட்டிற் றங்கு சொக்கப் பெருமாளே. (௩௭௧)

---

தானா தானா தானா தானா தானா தானத் தனதான.

372. ¶ஏறா னாலே நீறாய் மாயா ○வேளே வாசக் கணையாலே
ஏயா வேயா மாயா வேயா லாமே லோசைக் குழலாலே

மாறா யூறா யீறாய் மாலாய் வாடா மானாய்க் கழியாதே
வாராய் பாராய் சேரா யாறல் வாடா நீபத் தொடைதாராய்

சீறா வீறா யேழும் பார்க்கும் சீரார் கோலக் குமரேசா

---

* சம்பு-சம்பங்கோரை † திண் தலத்தில் எனப்பிரிக்க. ‡பண்டணர்த்தித் தென்றலைக்குட்டங்கு சொக்கப்பெருமாளே என்றும் பாடம். ‖செங்குவடு என்பது திருச்செங்கோடு. ¶ஏறு ஆனைமேல்-இடபமும் பசுவும்கலத்தலால். ○வேள் ஏவு வாசம் கணையாலே மன்மதன் ஏவுகின்ற புஷ்பபாணத்தாலும்.

தேவா சாவா மூவா நாதா தீரா கோடைப் பதியோனே
வேறாய் மாறா யாறா மாசூர் வேர்போய் வீழப் பொருதோனே
வேதா போதா வேலா பாலா வீரா வீரப் பெருமாளே. (௩௪௫)

தான தந்த தனத்ததத்த தனதான.

373. ஞால மெங்கும் வளைத்தகாற்று கடலாலே
நாளும் வஞ்சி யருற்றுரைக்கும் வசையாலே
ஆல முந்து மதித்தழற்கும் அழியாதே
ஆறி ரண்டு புயத்தணைக்க வருவாயே
கோல மொன்று குறத்தியைத்த ழுவுமார்பா
கோடை யம்ப தியுற்றுநிற்கு மயில்வீரா
கால னஞ்ச வரைத்துளைத்த முதல்வானோர்
கால்வி லங்கு களைத்தறித்த பெருமாளே. (௩௪௬)

தானன தந்தன தந்த தந்தன
தானன தந்தன தந்த தந்தன
தானன தந்தன தந்த தந்தன தனதான.

347. தோழமை கொண்டு *சலஞ்செய் குண்டர்கள்
ஓதிய நன்றிம றந்த குண்டர்கள்
சூழ்விர தங்கள்க டிந்த குண்டர்கள் பெரியோரைத்
தூஷண நிந்தைப கர்ந்த குண்டர்கள்
ஈவது கண்டுத கைந்த குண்டர்கள்
சூளுற வென்பதொ ழிந்த குண்டர்கள் தொலையாமல்
வாழுநி னைந்துவ ருந்து குண்டர்கள்
தேவர்கள் †சொங்கள்க வர்ந்த குண்டர்கள்
வாதைந மன்றன்வ ருந்தி டுங்குழி விழுவாரே
ஏழுப ரங்களும் வன்கு ரங்கெறும்
வாலியு மம்பர மும்ப ரம்பரை
ராவண னுஞ்சது ரங்க லங்கையு மடவேமுன்

*சலம் - சாலம். †சொம் - சொத்து, உடைமை.

ஈடழி யும்படி சந்த்ர னுஞ்சிவ
சூரிய னுஞ்சுர ரும்ப தம்பெற
ஏகச ரந்தொடு புங்க வன்றிரு மருகோனே

கோழிசி லம்பந லம்ப யின்றக
லாப நடஞ்செய மஞ்சு தங்கிய
கோபுர மெங்கும்வி ளங்கு மங்கல வயலூரா

கோமள அண்டர்கள் தொண்டர் மண்டலர்
வேலனெ னும்பெய ரன்பு டன்புகழ்
கோடை எனும்பதி வந்த இந்திரர் பெருமாளே. ()

தானத் தானத் தானத் தானத்
தானத் தானத் தனதான.

375. தோடப் பாமற் றேய்தப் பாணிச்
சூழ்துற் றூர்துற் றழுவாருந்
தூரப் போகக் கோரப் பாசச்
சூலப் பாசச் சமனாரும்
பாடைக் கூடத் தீயிற் றேறிப்
பாழ்பட் டேபட் டழியாதே
பாசத் தேனைத் தேசுற் றூர்பொற்
பாதத் தேவைத் தருள்வாயே
ஆடற் சூர்கெட் டோடத் * தோயத்
தாரச் சீறிப் பொரும்வேலா
ஆனைச் சேனைக் கானிற் றேனுக்
காரத் தாரைத் தரும்வீரா
† கூடற் பாடிக் கோவைப் பாவைக்
கூடப் பாடித் திரிவோனே
கோலச் சாலிச் சோலைச் சீலக்
கோடைத் தேவப் பெருமாளே. (௩௪.௫)

---

* தோயம் - சமுத்திரம், † கூடல்பாடி - மதுரைநகர்,

தான தானன தத்தன தத்தன
தான தானன தத்தன தத்தன
தான தானன தத்தன தத்தன தனதான.

376. ஆல காலம டப்பைம டப்பியர்
ஈர வாளற வெற்றும்வி ழிச்சியர்
யாவ ராயினும் நத்திய ழைப்பவர் தெருவூடே

ஆடி ஆடிந டப்பதொர் பிச்சியர்
பேசி யாசைகொ டுத்தும ருட்டிகள்
ஆசை வீசிய ணைக்குமு லைச்சியர் பலரூடே

மாலை ஓதிவி ரித்துமு டிப்பவர்
சேலை தாழநெ கிழ்த்தரை சுற்றிகள்
வாசம் வீசும ணத்தில்மி னுக்கிகள் உறவாலே

மாயை ஊடுவி ழுத்திய ழுத்திகள்
காம போகவி னைக்குரு னைப்பணி
வாழ்வி லாதும லச்சன னத்தினில் உழல்வேனே

மேலை வானொரு வைத்*தச ரற்கொரு
பால னாகியு தித்தொர்மு நிக்கொரு,
வேள்வி காவல்ந டத்தி †ய கற்குரு அடியாலே

மேவி யேமிது லைச்‡சிலை செற்றுமின்
மாது தோள்தழு விப்பதி புக்கிட
வேறு தாயட விக்குள் விடுத்த§பி னவனோடே

ஞால மாதொடு புக்கவ னத்தினில்
வாழும் வாலிப டக்கணை தொட்டவன்
நாடி ராவண னைச்செகு வித்தவன் மருகோனே

ஞான தேசிக சற்குரு உத்தம
வேல வானெரு வைப்பதி வித்தக
||நாக மாமலை சொற்பெற நிற்பதொர் பெருமாளே. ()

---

தசரதற்கொரு என்பது தசரற்கொரு என மருவிற்று. † அ-கற்கு உரு அடியாலே-மேவி-(அகலிகையாகிய) அந்தக்கல்லைத் திருவடியினால் (மிதித்துப் பழைய) உருவுறச்செய்து. ‡ சிலைசெற்று - வில்லை முறித்து § பினவன்-பின்னவன், தம்பியாகிய லக்ஷ்மணன் || நாகமாமலை-திருச்செங்கோடு.

தத்த தாத்தத் தத்த தாத்தத்
தத்த தாத்தத் தனதான.

377. அத்த வேட்கைப் பற்றி நோக்கத்
தத்தை மார்க்குத் தமராயன்

பற்ற கூட்டத் திற்ப ராக்குற்
றச்சு தோட்பற் றியவோடும்

சித்த மீட்டுப் பொய்த்த வாழ்க்கைச்
சிக்கை நீக்கித் திணிதாய

. சித்ர வாக்குப் பெற்று வாழ்த்திச்
செச்சை சாத்தப் பெறுவேனோ

கொத்து நூற்றுப் பத்து நாட்டக்
கொற்ற வேத்துக் காசாய

குக்கு டாத்தச் †சர்ப்ப கோத்ரக்
கொற்ற வேற்கைக் குமரேசா

தத்வ நாற்பத் தெட்டு நாற்பத்
தெட்டு மேற்றுத் திடமேவும்

தர்க்க சாத்ரத் தக்க மார்க்கச்
சத்ய வாக்யப் பெருமாளே. (௱௱)

---

தத்தன தத்தன தத்தன தத்தன
தத்தன தத்தன தனதான.

378. பத்தர்க ணப்ரிய நிர்த்தந டித்திடு
பட்சிந டத்திய குகபூர்வ

‡ பச்சிம தட்சண உத்தர திக்குள
பத்தர்க ளற்புத மெனவோதும்

சித்ரக வித்துவ சத்தமி குத்ததி
ருப்புக ழைச்சிறி தடியேனும்

---

* குக்குடாத்த - சேவற்கொடியைக் கையிலுடையவனே. † சர்ப்ப கோத்திரம் - நாக மலை கோத்திரம் - மலை. ‡ பச்சிமம் - மேற்குத்திசை.

செப்பென வைத்துல கிற்பா வத்தெரி
சித்தவ நுக்ரக மறவேனே
கத்திய தத்தைக ளோத்துவி ழுத்தெரி
கற்கவ ணிட்டெறி தினைகாவல்
கற்றகு றத்திநி றத்தக ழுத்தடி
கட்டிய ணைத்தப ஷிருதோளா
சத்தியை ஒக்கவி டத்தினில் வைத்தத
கப்பனு மெச்சிட மறைநூலின்
தத்துவ தற்பா முற்றமு ணர்த்திய
சர்ப்பகி ரிச்சுரர் பெருமாளே. (௩௭௮)

தத்ததன தான தத்ததன தான
தத்ததன தான தனதான.

379. புற்புதமெ னும அற்பநிலை யாத
பொய்க்குடில்கு லாவு மனையாளும்
புத்திரரும் வீடு மித்திரரு மான
புத்திசலி யாத பெருவாழ்வு
நிற்பதொரு கோடி கற்பமென மாய
நிட்டையுடன் வாழு மடியேன்யான்
நித்தமினை தாளில் வைத்ததொரு காதல்
நிற்கும்வகை ஓத நினைவாயே
சற்பகிரி நாத முத்தமிழ்வி நோத
சக்ரகதை பாணி மருகோனே
† தர்க்கசமண் மூகர் மிக்ககழு வேற
வைத்தவொரு காழி மறையோனே
கற்புவழு வாது வெற்படியின் மேவு
கற்றைமற வாணர் கொடிகோவே
கைத்தவசு ரேசர் மொய்த்தகுல கால
கற்பதரு நாடர் பெருமாளே. (௩௭௯)

புற்புதம்-நீர்க்குமிழி. † தக்ககவியூடி ருக்கும்வழுமூடி என்றும் பாடம்.

தத்தத்தத் தத்தத் தத்தத்
தத்தத்தத் தத்தத் தத்தத்
தத்தத்தத் தத்தத் தத்தத் தனதான.

380. பொற்சித்ரப் பச்சைப் பட்டுக்
கச்சிட்டுக் கட்டிப் பத்மப்
புட்பத்துக் கொப்பக் கற்பித் திளைஞோர்கள்

புட்பட்டுச் செப்பத் துப்பற்
கொத்தப்பொற் றித்தத் திட்பப்
பொற்பிற் *பெற் றுக்ரச் சக்ரத் தனமானார்

கற்சித்தச் சுத்தப் பொய்ப்பிற்
றத்திற்புக் கிட்டப் பட்டுக்
கைக்குத்திட் டிட்டுச் சுற்றித் திரியாமல்

கற்றுற்றுச் சித்திக் கைக்குச்
சித்திப்பப் பட்சத் திற்சொற்
கற்பித்தொப் பித்துக் கொற்றக் கழல்தாராய்

குற்சித்துக் கொட்டுக் கொட்டுத்
துக்கச்சத் துக்குக் குக்குக்
குக்குக்குக் குக்குக் குக்குக் கெனமாறுக்

குட்சிக்குப் பக்ஷிக் கைக்குக்
கக்ஷத்திற் பட்சத் தத்தக்
கொட்டிச்சுட் டிக் †கொக் கிக்குக் குடதாரி

சற்சித்துத் தொற்புத் திப்பட்
சத்தர்க்கொப் பித்தட் சத்துச்
சத்தத்தைச் சத்திக் கொச்சைப் பதிவாழ்வே

தக்ஷப்பற் றுக்கெர்ப் பத்திற்
செற்பற்றைச் ‡ செற்றிட் டுச்சச்
|| சர்ப்பப்பொற் றைக்குட் சொக்கப் பெருமாளே. ()

*பெற்றுக்ர-பெற்றுஉக்கிர. † கொக்கி - கொக்கரி-கூவுதலுடைய. ‡ செற்றிட்டஉச்சனைப்பிரிக்க. || சர்ப்பப்பொற்றை - நாகமலை.

தன்ன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான.

381. கொடிய மறலியு மவனது கடகமு
மடிய வொருதின மிருபதம் வழிபடு
குதலை அடியவ னினதருள் கொடுபொரும் அமர்காணக்

குறவர் மகள்புணர் புயகிரி சமுகமும்
அறுமு கமும்வெகு நயனமும் ரவியுமிழ்
கொடியு மகிலமும் வெளிபட இருதிசை இருநாலும்

படியு நெடியன எழுபுண ரியுமுது
* திகிரி திகிரியும் வருகென வருதகு
பவுரி வருமொரு மரகத துரகத மிசையேறிப்

பழைய அடியவ ருடனிமை யவர்கண
மிருபு டையுமிகு தமிழ்கொடு மறைகொடு
பரவ ¶ வருமதி லருணையி லொருவிசை வரவேணும்

சடில தரவிட தரபணி தரதர
பரசு தரசசி தரசுசி தரவித
தமரு கமிருக தரவனி தரசிர தரபாரத்

தரணி தரதனு தரவெகு முககுல
தடினி தரசிவ சுதகுண தரபணி
சயில விதரண தருபுர சுரதரு மயில்வாழ்வே

நெடிய உடலுரு இருளெழ நிலவெழ
எயிறு சுழல்விழி தழலெழ எழுகிரி
நெரிய அதிர்குரல் புகையெழ இடியெழ நெடுவானும்

நிலனும் வெருவர வருதிதி சுதர்கள
நிகில சகலமு மடியவொர் படைதொடு
நிருப குருபர சுரபதி பரவிய பெருமாளே. (௩௱௪)

* திகிரி திகிரி-சக்கரவாளகிரி ¶ வரும் அதில்-வந்தது போல.

## கொல்லிமலை.

தையதன தானந்த தையதன தானந்த
தையதன தானந்த தனதான.

382. தொல்லைமுதல் தானென்று *மெல்லியிரு பேதங்கள்
சொல்லு †குண மூவந்த மெனவாகித்
துய்யசதுர் வேதங்கள் வெய்யபுல னைந்து
தொய்யுபொரு ளாறங்க மெனமேவும்
பல்லபல நாதங்கள் அல்கபசு பாசங்கள்
பல்குதமிழ் தானொன்றி இசையாகிப்
பல்லுயிரு மாயந்த மில்லசொரு பானந்த
பௌவமுற வேநின்ற தருள்வாயே
கல்லுருக வேயின்கண் அல்லல்படு ‡கோவம்பு
கல்வருக வேநின்று §குழலூதுங்
கையன்மரு காஉம்பன் தொய்யசடை யோனெந்தை
கைதொழுமெய் ஞானஞ்சொல் கதிர்வேலா
கொல்லைமிசை வாழ்கின்ற வள்ளிபுன மேசென்று
கொள்ளைகொளு மாரன்கை அலராலே
கொய்துதழை யேகொண்டு செல்லு ||மழ வாகந்த
கொல்லிமலை மேனின்ற பெருமாளே. (௩௫௫)

தத்த தன்ன தைய தத்த தன்ன தைய
தத்த தன்ன தைய தனதான.

383. கட்ட மன்னு மள்ளல் கொட்டி பண்ணு னைவர்
கட்கு மன்னு மில்லம் இருபேணிக்

*மெல்லி இருபேதங்கள்-சிவம் சத்தி இரண்டு. †குணம்மூவந்தம்-இராசத, தாமத, சாத்துவீகம் என்னும் முக்குணமும், அவற்றையுடைய திருமூர்த்திகளும். ‡கோ அம்புகல் வருக-பசுக்கள் அழகிய புதுமிடம் வந்து சேர. §குழலூதும் கையனுகிய விஷ்ணு. ||மழவன்-இளையோன்.

கற்ற *விஞ்ஞை சொல்லி உற்ற வெண்மை உள்ளு
கக்க எண்ணி முல்லை நகைமாதர்
இட்ட மெங்ஙனல்ல கொட்டி அங்ஙனல்கி
இட்டு பொன்னை இல்லை எனவேகி
எத்து பொய்ம்மை உள்ள லுற்று மின்மை உள்ளி
எற்று மிங்ஙனைவ தியல்போதான்
முட்ட உண்மை சொல்லு செட்டி திண்மை கொள்ள
முட்ட நன்மை விள்ள வருவோனே
முத்து வண்ண வல்லி சித்ர வண்ண வல்லி
†முத்தி விண்ண வல்லி மணவாளா
பட்ட மன்ன வல்லி மட்ட மன்ன வல்லி
பட்ட துன்னு கொல்லி மலைநாடா
பச்சை வன்னி அல்லி செச்சை சென்னி உள்ள
பச்சை மஞ்ஞை வல்ல பெருமாளே. (௩௩௩)

---

ராஜகெம்பீரவளநாட்டுமலை.

---

தானதந் தானதன தாத்த தனதன
தானதந் தானதன தாத்த தனதன
தானதந் தானதன தாத்த தனதன தந்ததான.

384. மாகசஞ் சாரமுகில் தோற்ற குழல்கொடு
போகவிக் ராசிசிலை தோற்ற நுதல்கொடு
மானவண் டேறுகணை தோற்ற விழிகொடு கண்டுபோல
மாலர்கொண் டாடுகனி தோற்ற இதழ்கொடு
சோலைசென் றாதுகுயில் தோற்ற இசைகொடு
வார்பொரும் பாரமலை தோற்ற முலைகொடு மன்றுளாடி
சீகரம் பேணுதுடி தோற்ற இடைகொடு
போகபண் டாரபணி தோற்ற அரைகொடு
தேனுகுஞ் சீர்கதலி தோற்ற துடைகொடு வந்துகாசு

---

விஞ்ஞை-விஞ்ஞை, வித்தை. †முத்தி விண்ண வல்லி-தெய்வயானை.

தேடுகின் றுரொடுமெய் தூர்த்த னெனவுற
வாடுகின் றேனைமலம் நீக்கி ஒளிதரு
சீவனென் றனைபர மார்த்த தெரிசனை — வந்துதாராய்

வேகமுண் டாகியுமை சாற்று மளவினில்
மாமகங் கூருமது தீர்க்க வடிவுடை
வீரனென் பாவெருப ராக்ர னெனவா — அன்றுசோமன்

மேனியுந் தேயகதிர் தோற்ற எயிறுக
*ஆனுகுந் தீகையற †சேட்ட விதிதலை
வீழநன் ‡பாரதியு மூக்கு நழுவிட — வந்தமாயன்

ஏகநின் றுகியமர் தோற்று ||வதறிட
வேகவுங் காரமொடு ஆர்க்க அலைசைக
ளோறிவென் றுடுகள நீக்கி முநிவரர் — வந்துசேயென்

றீசநண் பானபுரு ஷார்த்த தெரிசனை
தாவெனுங் கேள்விநெறி கீர்த்தி மருவிய
ராஜகெம் பீரவள நாட்டு மலைவளர் தம்பிரானே (௩௮௪)

---

## ஞானமலை.

---

தானதன தான தானதன தான
தானதன தான தனதான.

385. சூதுகொலை கார ராசை பண மாதர்
§தூவையர்கள் சோகை — முகரீலர்

சூலைவலி வாத மோடனைவர் பாவர்
தூமையர்கள் கோளர் — தெருவூடே

சாதனைகள் பேசி வாருமென நாழி
தாழிவிலை கூறி — தெனவோதி

---

* ஆன் உகும் தீ - யாகப்பசுவைத் தகித்துப் பொடியாக்கும் அக்கினி. †சேட்டவிதி — முதன்மையான தக்ஷப்பிரஜாபதி, தக்கன். ‡பாரதி - சரசுவதி || வதறிட - மொழிகுளற. § தூலவயர்கள் - மாமிசபக்ஷணிகள்.

சாயவெகு மாய தூளியுற *வாக
நாடியிடு வோர்கள் உறவாமோ
வேதமுநி வோர்கள் பாலகர்கள் மாதர்
வேதியர்கள் பூச லென †வேகி
வீறசுரர் பாறி வீழவலை ஏழு
வேலையள றாக விடும்வேலா
நாதரிட மேவு மாதுசிவ காமி
நாரியபி ராமி அருள்பாலா
நாரணசு வாமி ‡ஈனுமக ளோடு
ஞானமலை மேவு பெருமாளே. (௩௫௮)

---

தனதன தனத்த தான தனதன தனத்த தான
தனதன தனத்த தான தன்தான.

386. மனையவள் நகைக்க வூரி லனைவரு நகைக்க லோக
மகளிரு நகைக்க தாதை தமரோடும்
மனமது சலிப்ப நாய னுளமது சலிப்ப யாரும்
வசைமொழி பிதற்றி நாளும் அடியேனை
அனைவரு மிழிப்ப நாடி மனவிருள் மிகுத்து நாடி
அகமதை எடுத்த சேமம் இதுவோவென்
றடியனு நினைத்து நாளு முடலுயிர் விடுத்த போது
மணுகிமு னளித்த பாதம் அருள்வாயே
தனதன தனத்த தான எனமுர சொலிப்ப வீணை
தமருக மறைக்கு ழாமும் அலைமோதத்
§தடிநிக ரயிற்க டாவி அசுரர்க ளிறக்கு மாறு
சமரிடை விடுத்த சோதி முருகோனே
எனைமன முருக்கி யோக ||அநுபுதி அளித்த பாத
எழுதரி யபச்சை மேனி உமைபாலா
இமையவர் துதிப்ப ஞான மலையுறை குறத்தி பாக
இலகிய சசிப்பெண் மேவு பெருமாளே. (௩௫௯)

---

*வாகதாடியிடுவோர் - சரீரத்தைத் தட்டிக்கொடுப்போர். † ஏகி-ஏகுவித்து. ‡ வள்ளி தெய்வயானை. § தடி - மின்னல். || அநுபுதி-அநுபூதி.

## ஊதிமலை.

தானதன தான தந்த தானதன தான தந்த
தானதன தான தந்த தனதான.

387. ஆதிமக மாயி அம்மை தேவசிவ னார்ம கிழ்ந்த
ஆவுடைய மாது தந்த குமரேசா
ஆதரவ தாய்வ ருந்தி ஆதியரு ணேச ரென்று
ஆளுமுனை யேவ ணங்க அருள்வாயே
பூதமது வான ஐந்து பேதமிட வேய லைந்து
பூரணசி வாக மங்கள் அறியாத
பூணுமுலை மாதர் தங்கள் ஆசைவலை யேநி னைந்து
போகமுற வேவி ரும்பும் அடியேனை
நீதயவ தாயி ரங்கி நேசவரு ளேபு ரிந்து
நீதிநெறி யேவி ளங்க உபதேச
நேர்மைசிவ னார்தி கழ்ந்த காதிலுரை வேத மந்த்ர
நீலமயி லேறி வந்த வடிவேலா
ஓதுமறை யாக மஞ்சொல் யோகமது வேபு ரிந்து
ஊழியுணர் வார்கள் தங்கள் வினைதீர
ஊனுமுயி ராய்வ ளர்ந்து ஓசையுடன் வாழ்வு தந்து
ஊதிமலை மீது கந்த பெருமாளே. (௩௮௭)

தான தனத்தத் தனத்த தந்தன
தான தனத்தத் தனத்த தந்தன
தான தனத்தத் தனத்த தந்தன தனதான.

388. கோதி முடித்துக் கனத்த கொண்டையர்
சூது விதத்துக் கிதத்து மங்கையர்
கூடி யவற்பச் சுகத்தை நெஞ்சினில் நினையாதே
கோழை மனத்தைக் கெடுத்து வன்புல
ஞான குணத்தைக் கொடுக்கு முன்செயல்
கூறு மிடத்துக் கிதத்து நின்றருள் புரிவாயே

நாத நிலைக்குட் கருத்து கந்தருள்
*போத கமற்றெச் சகத்தை யுந்தரு
நான்மு கனுக்குக் கிளத்து தந்தையின் மருகோனே
நாடு மகத்தெற் கிடுக்கண் வந்தது
தீரி டுதற்குப் பதத்தை யுந்தரு
நாய கர் † புத்ரக் குருக்க ளென்றருள் வடிவேலா
தோதி மிதித்தத் திமித்த டிங்குகு
டகு குகுடிக்குட் டிகுக்கு டிண்டிமி
தோதி மிதித்தித் தனத்த தந்தவெ னிசையோட
சூழ நடித்துச் சடத்தில் நின்றுயி
ரான துறத்தற் கிரக்க முஞ்சுப
சோப னமுய்யக் கருத்தும் வந்தருள் புரிவோனே
ஓத ‡ வெழுத்துக் கடக்க முஞ்சிவ
கார ணபத்தர்க் கிரக்க முந்தரு
ஓமெ னெழுத்துக் குயிர்ப்பு §மென்சுட ரொளியோனே
||ஒதி இணர்த்திக் குகைக்கி டுங்கன
காப ரணத்திற் பொருட் பயன்தரு
ஊதி கிரிக்குட் கருத்து கந்தருள் பெருமாளே. (௩௯௧)

---

குருடிமலை.

**இது கோயமுத்தூருக்கடுத்த துடியலூர் ஸ்டேஷனுக்குச் சமீபமிருக்கிறது.**

---

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனதான.

389. கருடன் மிசைவரு கரிய புயலென
காலை மணியென உலகோரைக்
கருதி யவர்பெயர் செருகி மனமது
கருகி முதுமொழி கலைநாடித்

---

* போதக - ஞானகுருவே. † புத்ரக் குருக்கள் - தகப்பன்சாமி. ‡ எழுத்து - மந்திரம். § என் - என்னும். || ஓதி - ஒதியமரம்.

சிங்கார அரிமருக பங்கேரு கனுமருள
சென்றேயும் அமராரு சிறைமீளச்

செண்டாடி அசுரர்களை வென்றாடி அடியர்தொழ
தென்சேரி கிரியில்வளர் பெருமாளே. (௩௬௫)

---

தந்தானத் தந்த தனதன
தந்தானத் தந்த தனதன
தந்தானத் தந்த தனதன தனதான.

391. கொண்டாடிக் கொஞ்சு மொழிகொடு
கண்டாரைச் சிந்து விழிகொடு
கொந்தாரச் சென்ற குழல்கொடு வடமேருக்

குன்றோடொப் பென்ற முலைகொடு
விண்டாலிக் கின்ற மயிலென
கொம்பாயெய்ப் பண்டு விடைகொடு பலரோடும்

பண்டாடச் சிங்கி இடுமவர்
விண்டாலிக் கின்ற மயிலெல்ல
பண்பாலிட் டஞ்சொல் மருளறு விடுமாறு

பண்டேசொற் றந்த பழமறை
கொண்டேதிர்க் கங்க ளறவுமை
பங்காளற் கன்று பகர்பொருள் அருள்வாயே

வண்டாடத் தென்றல் தடமிசை
தண்டாதப் புண்ட ரிகமலர்
மங்காமற் சென்று மதுவைசெய் வயலூரா

வங்காளக் கொண்டல் வடிவொரு
சங்க்ராமக் கஞ்சன் விழவுதை
மன்றாடிக் கன்பு தருதிரு மருகோனே

திண்டாடச் சிந்து கிரிசார்
தொண்டாடக் கண்ட அமர்பொரு
செஞ்சேவற் செங்கை உடையசண் முகதேவே

சிங்காரச் செம்பொன் மதிலது
லங்காரச் சந்த்ர கலை தவழ்
தென்சேரிக் குன்றி லினிதுறை பெருமாளே. (௩௯௧)

---

கொங்கணகிரி.

**இது திருப்பூர் ஸ்டேஷனை அடுத்து 2 மைல் தூலைவிலிருக்கிறது.**

தந்ததன தத்ததன தந்ததன தத்ததன
தந்ததன தத்ததன தனதான.

392. ஐங்கரனை யொத்தமன மைம்புலம கற்றிவளர்
அந்திபக லற்றநினை வருள்வாயே
அம்புவித னக்குள்வளர் செந்தமிழ்வ ழுத்தியுனை
அன்பொடுது திக்கமனம் அருள்வாயே
தங்கியத வத்துணர்வு தந்தடிமை முத்திபெற
சந்திரவெ ளிக்குவழி அருள்வாயே
தண்டிகைக னப்பவுசு எண்டிசைம திக்கவளர்
சம்ப்ரமவி தத்துடனெ அருள்வாயே
மங்கையர்சு கத்தைவெகு இங்கிதமெ னுற்றமனம்
முன்றனைநி * னைந்தமைய அருள்வாயே
மண்டலிக † ரப்பகலும் வந்தசுப ரட்சைபுரி
வந்தனைசு புத்தியினை அருள்வாயே
கொங்கிலுயிர் பெற்றுவளர் தென்கரையி லப்பரருள்
கொண்டுடல் உற்றபொருள் அருள்வாயே
குஞ்சரமு கற்கிளைய கந்தனென வெற்றிபெறு
கொங்கணகி ரிக்குள்வளர் பெருமாளே. (௩௯௨)

---

கொடுங்குன்றம்.

**இது அம்மயநாயக்கனூரிலிருந்து வடகிழக்கே 16 மைல் தூலைவிலிருக்கிறது.**

தனந்த னந்தந் தந்தந் தந்தந் தந்ததான.

393. அனங்க னம்பொன் றஞ்சுந் தங்குங் கண்களாலே
அடர்ந்தெ ழும்பொன் குன்றங் கும்பங் கொங்கையாலே

---

* நினைத்து அமைய. † ராப்பகல் என்பது ரப்பகல் என்றாயிற்று.

முனிந்து மன்றங் கண்டுந் தண்டும் பெண்களாலே
 முடங்கு மென்றன் றொண்டுங் கண்டின் றின்புறுதோ
தெனந்தெ னந்தென் தெந்தெந் தெந்தெந் தெந்தனனு
 செறிந்த டர்ந்துஞ் சென்றும் பண்பின் றும்பிபாடக்
குனிந்தி லங்குங் கொம்புங் கொந்துந் துன்றுசோலைக்
 கொழுங்கொ டுந்திண் குன்றந் தங்குந் தம்பிரானே. ()

---

தனதனன தன தனன
தத்தத் தனந்ததன தத்தத் தனந்ததன
தனதனன தன தனன
தத்தத் தனந்ததன தத்தத் தனந்ததன
தனதனன தன தனன
தத்தத் தனந்ததன தத்தத் தனந்ததன தனதான.

394. எதிர்பொருது கவிகடின
கச்சுக் கணுப்பொருது குத்தித் திறந்தமலை
இவைகளென வதிம்ருகம
தப்பட் டுமின்றெழுகி முத்துச் செறிந்தவட
மெனு* நிகள மவையறவே
தைத்திட்டணைந்துயிரினிற்பொத்துமங்குசநெருங்குபாகர்
எதிர்பரவ உரமிசைது
கைத்தாக் கிடந்தடல்ப லக்கக் கடிந்துமிக
இரதிபதி மதவிபவுலி
எற்றிக் கியப்பகறு முட்கத் திரண்டிளகி
இளைஞருயிர் கவளமென
மட்டித்துசைக்கெதிர்புடைத்துச்சினத்துபொருகொங்கையானை
பொதுவில்விலை இடுமகளிர்
பத்மக் கரத்தழுவி ழுக்கத் தவண்டமளி
புகலிணைய வரிபாவு
நச்சுக் கருங்கயல்கள் செக்கச் சிவந்தழுத
பொதிமொழி பதறவள
கச்|கற் றையுங்குலைய முத்தத் தடன்கருணை தந்துமேல்வீழ்

*நிகளம் - யானைகட்டும் சங்கிலி † கற்றை-உரோமக்குவியல்,

புதுமைதரு கலவிவலை
யிற்பட் டழுந்தியுயிர் நட்டுப் படுந்துயர
புணரியுத தியில் மறுகி
மட்டற் றவிந்தறிய சட்டைக் குரம்பையழி
பொழுதினிலும் அருள்முருக
கத்தக் கொடுங்கிரியி னிர்த்தச் சரண்களைம றந்திடேனே

திதிதிதிதி திதிதிதிதி
திக்திக் திதிந்திதிதி தத்தத் ததந்ததத
தெதததெதத தொதததெதத
தெத்தெத் தெதந்ததொதொ திக்கட் டிகண்டிகட
ஜெகணகெண கெணஜெகுத
தெத்திக் ரியந்திரித தக்கத் தகுந்தகுர்த திந்திதிதோ

திகுடதிகு தொகுடதொகு
திக்கட் டிகண்டிகட டக்கட் டகண்டகட
டிடிடுடுடு டிடிடுடுடு
டிக்கட் டிகண்டிகட டுட்டுட் டுடுண்டுடுடு
திகுகுதிகு திகுகுகுகு
திக்குத் திகுந்திகுகு குக்குக் குகுங்குகுகு என்றுதாளம்

முதிர்திமிலை காடிகையி
டக்கைக் கொடுந்துடியு டுக்கைப் பெரும்பதலை
முழுவுபல மொகுமொகென
ஒத்திக் கொடும்பிரம கத்திக் களும்பரவ
முகடுபுகு வெகுகொடிகள்
பக்கத் தெழுந்தலைய மிக்கக் கவந்தநிரை தங்கியாட

முதுகழுகு கொடிகருட
னெக்கத் திரண்டுவர வுக்ரப் பெருங்குருதி
முழுகியெழு பயிரவர்க
டிக்கிட் டகண்டமுட்டவெ டிக்கத் தணிந்துர
முடுகிவரு நிசிசரரை
முட்டிச் சிரந்திருகி வெட்டிக் களம்பொருத தம்பிரானே. (௩௬௭)

---

## குன்றக்குடி.

இது தஞ்சாவூர் ஸ்டேஷனிலிருந்து 23 மைல் துலைவிலிருக்கிறது.

---

தனதன தந்தத் தனதன தந்தத்
தனதன தந்தத் தனதான.

395. பிறர்புக ழின்சொற் பயிலுமி ளந்தைப்
பருவம தன்கைச் சிலையாலே
பிறவித ருஞ்சிக் கதுபெரு கும்பொய்ப்
பெருவழி சென்றக் குணமேவிச்
சிறுமைபொ ருந்திப் பெருமைமு டங்கிச்
செயலும ழிந்தற் பமதான
தெரிவையர் தங் *கட் கயலைவி ரும்பிச்
சிலசில பங்கப் படலாமோ
கெறுவித வஞ்சக் கபடமொ டண்டிக்
கிளுமெதிர் சண்டைக் கெழுசூரன்
கிளையுடன் மங்கத் தலைமுடி சிந்தக்
கிழிபட வென்றிப் பொருதோனே
†குறுமுனி இன்பப் பொருள்பெற அன்றற்
பன ‡மனு வுஞ்சொற் குருநாதா
குலகிரி துங்கக் கிரியுயர் குன்றக்
குடிவளர் கந்தப் பெருமாளே. (௱௫௮)

---

தனன தந்த தந்த தனன தந்த தந்த
தனன தந்த தந்த தனதான.

396. அழகெ றிந்த சந்த்ர முகவ டங்க லந்த
அமுத புஞ்ச இன்சொல் மொழியாலே
அடிது வண்ட தண்டை கலிலெ னுஞ்சி லம்பொ
டணிச தங்கை கொஞ்சு நடையாலே

*கட்கயல்-சேலொத்தகண். †குறுமுனி-அகத்தியர். ‡மனு-மந்திரம்.

40

சுழியெ றிந்து நெஞ்சு சுழல நஞ்சை ணைந்து
கொடுமி ரண்டு கண்க ளதனாலே
துணைநெ ருங்கு கொங்கை மருவு கின்ற பெண்கள்
துயரை என்றொ ழிந்து விடுவேனோ
எழுது *கும்ப கன்பி னிளைய தம்பி நம்பி
எதிர டைந்தி றைஞ்சல் புரிபோதே
இதம கிழ்ந்தி லங்கை அசுர ரந்த ரங்க
மொழிய என்ற கொண்டல் மருகோனே
மழுவு கந்த செங்கை அரனு கந்தி றைஞ்ச
மனுவி யம்பி நின்ற குருநாதா
வளமி குந்த குன்ற நகர்பு ரந்து தங்கு
மலைவி ளங்க வந்த பெருமாளே. (௩௯௬)

---

தனனதன தந்த தானன தனனதன தந்த தானன
தனனதன தந்த தானன தனதான.

397. கடினதட கும்பமோன வளருமிரு கொங்கை மேல்விழு
கலவிதரு கின்ற மாதரொ டுறவாடிக்
கனவளக பந்தி யாகிய நிழல்தனிலி ருந்து தேனிதழ்
கனியிதழை மென்று தாடனை செயலாலே
துடியிடைநு டங்க வாள்விழி குழையொடுபொ ருதப்ப யோதர
துகில்நெகிழ வண்டு கோகில மயில்காடை
தொனியெழவிளைந்தகூரிய கொடுநகமிசைந்ததோர்பிணை
துயில்வசவின்ப மேவுதல் ஒழிவேனோ
இடிமுரச றைந்து பூசல்செய் அசுரர்கள்மு றிந்து தூளெழ
எழுகடல்ப யந்து கோவென அதிகோப
எமபடரு மென்செய் வோமென நடுநடுந டுங்க வேல்விடு
இரணமுக சண்ட மாருத மயிலோனே
வடிவுடைய அம்பி காபதி கணபதிசி றந்து வாழ்தட
வயலிநகர் குன்ற மாநகர் உறைவோனே
வகைவகைபு கழ்ந்து வாசவன் அரிபிரமர் சந்த்ர சூரியர்
வழிபடுதல் கண்டு வாழ்வருள் பெருமாளே. (௩௯௭)

---

கும்பகன்பின் இளையதம்பி-கும்பகர்னன் தம்பியாகிய வீபீஷணன்.

தனதனன தனதனன தனதனன தனதனன
தந்தத்த தத்ததன தந்தத்த தத்ததன		தனதான.

398. *கருபநிலை குலையவிகல் மிருபகடின் வலியுடைய
தந்தித்தி னைத்தடிவ தொந்தத்தி ரத்தையுள
அகிலமறை புகழ்பாமர் தெநெகிழிகல கலகலெனும்
அம்பொற்ப தத்தர்தனு வப்பொற்பொ ருப்படர்வ
களபபரி மளமொழுகும் எழிலில்முழு குவமுளரி
அஞ்சப்படைத்தெழுவ வஞ்சக்கருத்துமத னபிஷேகம்

கவடிபடு கொலையிடுவ கொடியமுக படமணிவ
வின்பச்சு டர்க்கனக கும்பத்த ரச்செருவ
பிறிதில்புள கிதசுகமு மிருதுளமும் வளரிளைஞர்
புந்திக்கி டர்த்தருவ பந்தித்த கச்சடர்வ
கயல்மகர நிகரமிக வியன்மருவு நதியில்முதிர்
சங்கிப்பிமுத்தணிவபொங்கிக்கனத்தொளிர்வ முலைமாதர்

†வகுளமலர் குவளையிதழ் தருமணமு மிருகமத
மொன்றிக்கருத்துமுகில் வென்றிட்டு நெய்த்தகுழ
லசையஅருகி யமிர்தக்ருத வசியமொழி மயில்குயிலெ
னும்பட்கு ரற்பகர வம்புற்ற மற்புரிய
வருமறலி அரணமொடு முடுகுசமர் விழியிணைகள்
கன்றிச்சி வக்கமகிழ் நன்றிச்ச மர்த்துநக நுதிரேகை

வகைவகைமெ யுறவளைகள் கழலவிடை துவளவிது
ழண்டிட்ப்ர மிக்கநகை கொண்டுற்ற ணைத்தவநி
செறிகலவி வலையிலெனை தறிவுடைய கலைபடுத
லுந்திப்பி றப்பறநி னைந்திட்ட முற்றுனடி
வடவிகடர் முருகசெரு முயல்பனிரு கரகுமர
அன்றுட்டெட்டகுணருன்றக்குடிக்கதிப அருளாதோ

தகுகுதகு தகுதகுகு திகுகுதிகு திகுதிகுகு
தங்குத்த குத்தகரு திங்குத்தி குத்திகிகு
சககசக சகசகண செகணசெக செகசெகண
சங்கச்ச கச்சகண செங்கச்செ கச்செகண
தனனதன தனதனன தெனனதென தெனதெனன
தந்தந்த னத்தனன தெந்தந்தெ னத்தெனன தனதானா

* குயம் - இசை. † வகுளம் - மகிழ்

தகுதகு தகுதகுதி திகுதிகுதி திகுதிகுதி
தங்குந்த குந்தகுகு திங்குந்தி குந்திகுகு
டணணடண டணடணண டிணிணிடிணி டிணிடிணிணி
டண்டட்ட டட்டடண டிண்டிட்டி டிட்டிடிணி
தாரதா தாரதார திரிரிதிரி திரிதிரிரி
தன்றத்த ரத்தார தின்றித்தி ரித்திரிரி — என நாளந்

தொகுதிவெகு மூரசகா டிகைடமரு முழவுதவில்
தம்பட்ட மத்தளமி னம்பட்ட டக்கைபறை
பதலைபல திமிலைமுத லதிரவுதிர் பெரியதலை
மண்டைத்தி ரட்பருகு சண்டைத்தி ரட்கழுகு
தொடர்நிபிட கருடனடர் தாகாட மொகுமொகென
வந்தாற்றிடக்குடர்நி ணந்தூற்றிசைத்ததிர முதுபேய்கள்

*சுனகனரி நெறுநெறென இனிதினிது தினவினைசெய்
வெங்குக்கு டத்தகொடி குங்குக்கு குக்குகென
†அடனமிடு திசைபரவி நடனமிட வடவிரவி
திங்கட்ப ரைக்கதிர்கள் பங்கப்ப சித்தகுல
தாரகஜ ரதகடக முரணரண நிருதர்விறல்
**மிண்டைக்குலைத்தமர்செய்தண்டர்க்குரத்தையருள் பெருமாளே**

---

தானன தனதான தானன தனதான
தானன தனதான தனதான.

399. நாமேவு குயிலாலு மாமார னயிலாலு
நாடோறு மதிகாயும் — வெயிலாலும்
நார்மாதர் வசையாலும் வேயூது மிசையாலும்
நாடாசை தருமோக — வலையூடே
ஏமாறி முழுநாளு மாலாகி விருதாவி
லேவாடி விழியாதர் — தூயருடே
ஏகாம லழியாத மேலான பதமீதி
லேகியு னுடன்மேவ — அருள்தாராய்
காமோக முடனாறு பால்தேடு வடவேறு
தானேறி விளையாடும் — குருபோதநில்

---

சுனகன் - நாய் † அடனமிடு - போகின்ற

தாயாக வருசோதை காணாது களவாடு
தாமோத ரமுராரி மருகோனே

மாமாது வனமாது கார்மேவு சிலைமாது
மாலாகி விளையாடு புயவீரா

வாணாடு புகழ்நாடு தேனூறு புடைசூழு
*மாயூர கிரிமேவு பெருமாளே. (௱௭௨)

தானதான தந்தன தத்தன
தானதான தந்தன தத்தன
தானதான தந்தன தத்தன தனதான.

400. நேசாசாரா டம்பர மட்டைகள்
பேசாதேயே சங்கள மட்டைகள்
†நீசாளோடே யும்பழ கிக்கவர் பொருளாலே

நீயேநானே யென்றொரு சத்தியம்
வாய்கூசாதே தான்கப டத்திகள்
நேராலேதா னின்று பிலுக்கிகள் எவர்மேலும்

ஆசாபாசா தொந்தமை யிட்டவர்
மேல்வீழ்வார்பால் சண்டிகள் கட்டழ
காயேமீதே தாவெங்கு மினுக்கிகள் வெகுமோகம்

ஆகாதாவே சந்தரு திப்பொழு
தேகோவாவா வென்று பகட்டிக
ளாகாமோகா வம்பிகள் கிட்டினும் உறவாமோ

பேசாதேபோய் நின்றுர மிற்றுயிர்
வாயாவாவா வென்றுகு டித்தருள்
போராலேநீள் கஞ்சன்வி டுத்தெதிர் வருதூது

பேய்வாய்வேதா ளாக மடப்பகு
வாய்நீள்பாறு துஞ்சவ ளைத்தொடு
பேயோடேபோர் வென்றெதி ரிட்டவன் மருகோனே

மாயூரகிரி என்பது-குன்றைக்குடி. † நீசாளோடேயும்-நீசரோடும்.

மாறூடாடா டும்பகை யைப்பகை
சூராளோடே வன்செரு வைச்செறு
மாசூராபா ரெங்கும ருட்பொலி முருகோனே
வானூடேழ்நா டும்புகழ் பெற்றிடு
தேனூறேசூழ் தூங்கம லைப்பதி
மாயூராவாழ் குன்றைத ழைத்தருள் பெருமாளே. (௪௱)

## பொதியமலை.

**இது திருநெல்வேலிக்கு மேற்கே 35 மைல் துலைவிலிருக்கிறது.**

தத்த தத்த தான தான தத்த தத்த தான தான
தத்த தத்த தான தான தனதான.

401. மைக்க ணிக்கன் வாளி போழ வுட்க ளுற்கை பாறி நாடி
மட்டு முற்ற கோதை போது முடிமுடி-
மத்த கத்தி னீடு கோடு வைத்த தோர்த்து மார்பி னூடு
வட்ட மிட்ட வாரு லாவு முலைகளீதே
*இக்கு வைக்கு மாடை வீழ வெட்கி யக்க மான பேசை
எத்தி முத்த மாடும் வாயின் இதழ்தேனே
எட்டு துட்ட மாதர் பாய லிச்சை உற்று றுருக மாவி
எய்த்து நித்த மான வீனம் உறலாமோ
துர்க்கை †பக்க சூல காளி ‡செக்கை புக்க தான வேதை
தொக்க திக்க தோத தீத வெவ்வவேதாளச்
சுற்றம் வெற்றி யோடு தாள்கள் சுத்த நிர்த்த மாடு மாதி
சொற்கு நிற்கு §மாறு தார மொழிவோனே
திக்கு மிக்க வானி னூடு புக்க விக்க ஏறு சூரர்
||திக்க முட்டி யாடு தீர வடிவேலா
செச்சை பிச்சி மாலை மார்ப இச்சை கொச்சை மாதி னோடு
¶செப்பு வெற்பில் மேய தார பெருமாளே. (௪௱௧)

---

* இக்கு வைக்கும் - தடையாக வைக்கும் † பக்க - முக்கிளையாகப் பகுப்புற்ற ‡ செக்கை-செங்கை § மாறுதாரம்-மறுஉத்தாரம். || சிக்க-சிதற. ¶ செப்புவெற்பு-பொதியமலை, 'செம்புடற் பொதிந்த தெய்வப் பொதியம்.

தனத்த தானன தனத்த தானன
தனத்த தானன தனத்த தானன
தனத்த தானன தனத்த தானன தந்ததான.

402. *வெடித்த வார்குழல் விரித்து வேல்விழி
விழித்து மேகலை பதித்து வார்தொடு
மிகுத்த மாமுலை அசைத்து நூலின்ம ருங்கிறுடை

மினுக்கி ஓலைகள் பிலுக்கி யேவளை
துலக்கி யேவிள நகைத்து வாள்விழி
மிரட்டி யாரையு மழைத்து மால்கொடு தந்தவாய்நீர்

குடித்து நாயென முடக்கு மேல்†பிணி
யடுத்து பாதிகள் படுத்த தாய்தமர்
குலத்தர் யாவரு நகைக்க வேயுடல் மங்குவேனைக்

குறித்து நீயரு கழைத்து மாதவர்
கணத்தின் பேவென அளித்து வேல்மயில்
கொடுத்து மோதக வொருத்த னொடென சிந்தைகூராய்

உடுட்டு டுடுடு டுடுட்டொ டோவென
திகுத்த தீதிகு திகுர்த்த தாவென
உடுக்கை பேரிகை தவிற்கு ழாமுமி ரங்குபோரில்

உறுத்த நீசர்கள் பதைப்ப பாகரி
துடிப்ப நீள்கட லெரித்து சூர்மலை
உடைத்து நீதிகள் பரப்பி யேயவ ரும்பராரை

அடைத்த மாசிறை விடுத்து வானுல
களிக்கு மாயிர திருக்க ணனா
களித்து நானுமெ னுளத்தி லேமகி ழுங்குமாரா

அளித்த தாதையு மிகுத்த மாமனும்
அனைத்து ளோர்களு மதிக்க வேமகிழ்
அகத்ய மாமுனி பொருப்பின் மேவிய தம்பிரானே. ()

---

* வெடித்த-நறுமணம் கமழ்கின்ற. † பிணி அடுத்து-உபாதிகள் படுத்த.

## கழுகுமலை.

இது கோவிற்பட்டி ஸ்டேஷனுக்கு மேற்கே 12 மைல் தூரத்திலிருக்கிறது.

தனன தனதன தனத்த தானன
தனன தனதன தனத்த தானன
தனன தனதன தனத்த தானன தனதான.

403. குதலை மொழியினர் நிதிக்கொள் வாரநி
முலையை விலைசெய்வர் தமக்கு மாமயல்
கொடிதுற கொடிது தகால் வருத்த மாயுறு துயராலே
குறுகி குறுகியே யிருக்க வாவொடு
பெரிய பிரபுரா யிடத்தி லேபுகி
குலைய அடிமையா யிருக்க லாகிய ஒருபாவி
மதலை மறுகிவா ளிபத்தி லேவெகு
பதகர் கொடியவா ளிடத்தி லேமிக
வறுமை புகல்வதே யெனக்கு மோவினி முடியாதோ
மருவு புலவனார் கவிக்கு ளேமிகு
வழுவ தறமகா சபைக்கு ளேவெளி
வகைய பெயரதா †விலக்க ணாவிதி மொழிவோனே
முதல வரிவிலோ டெதிர்த்து குருகுடல்
மடிய அயிலையே விடுத்த வாகரு
முகிலை அனையதா மிறத்த மால்திரு மருகோனே
முளரி மலரனார் சிறைக்கு ளேபுக
நிறுவி பரமனார் செவிக்கு ளேயுறு
முடிவ தனையுமா றுரைத்த வாவளி மணவாளா
கதறும் அடியரார் தமக்கெ ளுளமெ
உதவ விரைவிலே செலுத்து மாமல
கனக மயுரவா கனத்த லாவிய புயவீரா
கதலி கமுகுசூழ் வயற்கு ளேயளி
இசையை முரலமா வறத்தில் மீறிய
கழுகு மலைமகா நகர்க்குள் மேவிய பெருமாளே. ([illegible])

---

மருவு புலவனார் - கந்தபுராண கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்.
† இலக்கணாவிதி - இலக்கண + அ விதி; அ - ஆந்த என்பதின் குறுக்கம்.

தனதன தத்தத் தனத்த தானன
தனதன தத்தத் தனத்த தானன
தனதன தத்தத் தனத்த தானன தனதான.

404. முலையைம றைத்துத் திறப்ப ராடையை
நெகிழ உடுத்துப் படுப்பர் வாயிதழ்
முறைமுறை முத்திக் கொடுப்பர் பூமலர் அணைமீதே

அலைகுலை யக்*கொட் டணைப்ப ராடவர்
மனவலி யைத்தட் டழிப்பர் மால்பெரி
தவர்பொரு ளைக்கைப் பறிப்பர் வேசைகள் உறவாமோ

தலைமுடி பத்துத் தெறித்த ராவண
னுடல்துளை பட்டுத் துடிக்க வேயொரு
தநுவைவ ளைத்துத் தொடுத்த வாளியன் மருகோனே

கலைமதி அப்புத் தரித்த வேணிய
ருதவிய வெற்றித் திருக்கை வேலவ
கழுகும லைக்குட் சிறக்க மேவிய பெருமாளே. (௩௭௭)

---

தாந்த தனன தனன தாந்த தனன தனன
தாந்த தனன தனனந் தனதான.

405. கோங்கு முலையு மெலிய வீங்கு புளக களப
மோந்து குவடு குழையும் படிகாதல்

கூர்ந்து குழையை அமளி தோய்ந்து குலவு மினிய
தேங்கு கலவி அமுதுண் டியல்மாதர்

வாங்கு பகழி விழியை மோந்து பகலு மிரவும்
வாய்ந்த துயிலை மிகவுந் தணியாது

வாஞ்சை உடைய அடிமை நீண்ட பிறவி அலையை
நீந்தி அமல அடிவந் தடைவேனோ

கொட்டணைப்பர் கொண்டணைப்பர்.

*ஓங்க லனைய பெரிய சோங்கு தகர மகர
மோங்†கு ததியின் முழுகும் பொருசூரும்
ஓய்ந்து பிரமன் வெருவ வாய்ந்த குருகு மலையில்
ஊர்ந்து மயில துலவுந் தனிவேலா
வேங்கை அடவி மறவர் ஏங்க வனிதை உருக
வேங்கை வடிவு மருவுங் குமரேசா
வேண்டு மடியர் புலவர் வேண்ட அரிய பொருளை
வேண்டு மளவி லுதவும் பெருமாளே. (௪௱௫)

## வள்ளியூர்.

இது நாங்குநேரிக்குத் தென்கிழக்கு 5 மயில் தூலைவிலிருக்கிறது.

தைய தானன தனதான தைய தானன தனதான.

406. அல்லில் நேருமின் அதுதானும் அல்ல தாகிய உடல்மாயை
கல்லினேரவ வழிதோறும் கையும் நானுமு லையலாமோ
சொல்லி நேர்படு முதுசூர் தொய்ய வூர்கெட விடும்வேலா
வல்லி மாரிரு புறமாக வள்ளி யூருறை பெருமாளே (௪௱௬)

## கதிர்காமம்.

இது இலங்கைத்தீவில் யாழ்ப்பாணத்திற்குத் தென்கிழக்கிலிருக்கிறது.

தனதனன தான தனதனன தான
தனதனன தானத் தனதான.

407. திருமகளு லாவு மிருபுயமு ராரி
திருமருக நாமப் பெருமாள்காண்
செகதலமும் வானு மிகுதிபெறு பாடல்
தெரிதருகு மாரப் பெருமாள்காண்
மருவுமடி யார்கள் மனதில்விளை யாடு
மரகதம யூரப் பெருமாள்காண்
மணிதரளம் வீசி அணியருவி சூழ
மருவுகதிர் காமப் பெருமாள்காண்

*ஓங்கலனைய பெரியசோங்கு-மரக்கலம். †உததி-கடல்.

அருவரைகள் நீறு படவசுரர் மாள
அமர்பொருத வீரப் பெருமாள்காண்
அரவுபிறை வாரி விரவுசடை வேணி
அமலர்குரு நாதப் பெருமாள்காண்
இருவினையி லாத தருவினைவி டாத
இமையவர்கு லேசப் பெருமாள்காண்
இலகுசிலை வேடர் கொடியினதி பார
இருதனவி நோதப் பெருமாளே. (௩அ0)

---

தனன தான தானன தனன தான தானன
தனன தான தானன தனதான.

408. * அலகின் மாறு மாறுத † கலதி பூத வேதாளி
அடைவில் ‡ ஞாளி கோமாளி அறமீயா
அழிவு கோளி நாணாது புழுகு பூசி வாழ்மாதர்
அருளி லாத தோடோய மருளாகி
பலக லாக ராமேரு மலைக ராச லாவீசு
பருவ மேக மேதாரு எனயாதும்
பரிவு றாத மாபாதர் வரிசை பாடி ஓயாது
பரிசில் தேடி மாயாத படிபாராய்
இலகுவேலை நீள் § வாடை எரிகொள் வேலை மாசூரி
லெறியும் வேலை மாறாத திறல்வீரா
இமய மாது பாகீர திநதி பால காசார
விறைவி கான மால் வேடர் சுதைபாகா
கலக வாரி போல்மோதி வடவை ஆறு சூழ்சீத
கதிர காம மூதூரில் இளையோனே
கனக நாடு வீடாய கடவுள் || யானை வாழ்வான
கருணை மேரு வேதேவர் பெருமாளே. (௩அக)

---

* அலகின்மாறு - கூட்டுமாறு † கலதி - மூதேவி. ‡ ஞாளி - நாய்.
§ வாடையெரி - வடவாமுகாக்கினி. || யானை - தெய்வயானை.

தனன தான தத்த தனதான தனன தான தத்த தனதான.

409. எதிரி லாத பத்தி தனைமேவி இனிய தாணி னைப்பை இருபோதும்
இதய வாரி திக்கு ளுறவாகி எனது ளேசி றக்க அருள்வாயே
கதிர காம வெற்பி லுறைவோனே கனக மேரு வொத்த புயவீரா
மதுர வாணி உற்ற கழலோனே வழுதி கூனி மிர்த்த பெருமாளே. ()

---

தனதன தனதன தனதன தனதன
தானத் தனந்த தனதான.

410. கடகட வருவிகள் தப*வரி அதிர்கதிர்
காமத் தபங்க மலைவீரா
கன†கத நககுலி புணரித குனைகுக
‡காமத் தனஞ்சம் புயனோடே
வடசிக ரகிரித விடுபட§நடமிடு
மாவிற் புகுங்கந் த||வழாது
வழிவழி தமரென வழிபடு கில¶னென
வாவிக் கினம்பொன் றிடுமோதான்
அடவியி ருடியபி நவகும ரியடிமை
யாயப் புனஞ்சென் றுயர்வோனே
அயிலவ**சபரிசெய் கவிபுகல் தருகவி
யாளப் புயங்கொண் டருள்வோனே
இடமொரு மாகத மயிலிசை வடிவுள
ஏழைக் கிடங்கண் டவர்வாழ்வே
இதமொழி பகரினு மதமொழி பகரினு
மேழைக் கிரங்கும் பெருமாளே. (ா. ௭)

---

தன்னதன தானத்த தனனதன தானத்த
தன்னதன தானத்த தனதானதானஞ.

411. சமரமுக வேலொத்த விழிபுரள வாரிட்ட
தனமசைய வீதிக்குள் மயில்போலு லாவியே

* வரி-கீற்றுகளையுடையபுலி † கத நகம் - கோபத்தையுடைய மலையையொத்தயானை ‡ காம அத்தன்-மன்மதன் பிதாவாகிய விஷ்ணு 'காமத் தன் அஞ்சு அம்புயன் ஓட' எனப்பிரிக்க. அஞ்சு அம்புயன் - அரன். § நடமிடுமா - மயிற்குதிரை. || வழாது-வழுவாமல். ¶ எனவாவிக்கினம் - என் அவா விக்கினம். ** சபரிசெய்கவி - பூஜை செய்த நக்கீரர்.

சரியைக்ரியை யோகத்தின் வழிவருக்கு பாசுத்தர்
தமையுணர ராகத்தின் வசமாகமேவியே
உமதடியு ளுருக்கு மனுமரண மாயைக்கு
முரியவர்ம காதத்தை எனுமாயமாதரார்
ஒளிரமணி பீடத்தி லமடுபடு வேனுக்கு
முனதருள்க்கு பாசித்தம் அருள்கூரவேணுமே
இமகிரிகு மாரத்தி அநுபவைப ராசத்தி
எழுதரிய காயத்ரி உமையாள்குமாரனே
எயினர்மட மானுக்கு மடலெழுதி மோகித்து
இதணருகு சேவிக்கு முருகாவிசாகனே
அமரர்சிறை மீள்விக்க அமர்செய்துப்ர தாபிக்கு
மதிகவித சாமர்த்ய கவிராஜராஜனே
* அழுதுலகை வாழ்வித்த கவுணியகு லாதித்த
அரியகதிர் காமத்தில் உரியாபிராமனே. (௩௮௬)

தனத்தா தனத்தா தனத்தா தனத்தா
தனத்தா தனத்தா தனதான.

412. சரத்தே உதித்தா யுரத்தே குதித்தே
சமர்த்தா எதிர்த்தே வருசூரைச்
சரிப்போ னமட்டே விடுத்தா யடுத்தாய்
தகர்த்தா யுடற்றன் இருகூறுச்
செருத்தோ டெதிர்த்தோ டறுத்தே குவித்தாய்
செகுத்தாய் பலத்தார் விருதாகச்
சிறைச்சேவல் பெற்றாய் † வலக்கா ரமுற்றாய்
திருத்தா மரைத்தாள் அருள்வாயே
புரத்தார் ‡ வரத்தார் சரச்சே கரத்தார்
பொரத்தா னெதிர்த்தே வருபோது

* இக்கருத்தை:—
"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப்புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்" என்னும் பெரிய புராணத் திருவிருத்தத்தாற் காண்க.

† வலக்காரம் - வென்றி. ‡ வரத்தார் - வரப்பிரசாதிகள்.

பொறுத்தார் பரித்தார் சிரித்தார் எரித்தார்
பொரித்தார் நுதற்பார் வையிலேபின்
கரித்தோ லுரித்தார் விரித்தார் தரித்தார்
கருத்தார் * மருத்தூர் மதனைக்
கரிக்கோ லவிட்டார் † கணுக்கா னமுக்தே
கதிர்க்காம முற்றார் பெருமாளே. (௩௮௫)

தனதன தத்தனத் தனதன தத்தனத்
தனதன தத்தனத் தனதான.

413. சரியையா ளர்க்குமக் கிரியையா ளர்க்குநற்
சகலயோ கர்க்குமெட் டரிதாய
சமயபே தத்தினுக் கணுகொணா மெய்ப்பொருட்
டருபரா சத்தியிற் பரமான
துரியமே லற்புதப் பரமஞா னத்தனிச்
சுடர்வியா பித்தநற் பதிநீடு
துகளில்சா யுச்சியக் கதியையீ றற்றசொற்
சுகசொரூ பத்தையுற் றடைவேனோ
புரிசைசூழ் செய்ப்பதிக் குரியசா மர்த்யசற்
புருஷவீ ரத்துவிக் ரமசூரன்
புரளவேல் தொட்டகைக் குமரமேன் மைத்திருப்
புகழையோ தற்கெனக் கருள்வோனே
‡ கரியயூ கத்திரட் பலவின்மீ திற்சுளைக்
கனிகள்பீ றிப்புசித் தமராடிக்
கதலிசூ தத்தினிற் பயிலுமீ ழத்தினிற்
கதிரகா மக்கிரிப் பெருமாளே. (௩.௪௰)

தானதன தத்தத்த தானதன தத்தத்த
தானதன தத்தத்த தனதான.

414. பாரவித முத்தப்ப டாமுலை கப்பொற் § ப
யோ தரமெ ருக்குற்ற இடையாலே

* மருத்தூர் - தென்றற்காற்றாகிய தேரை நடத்தும். † கணுக்கான - கண்ணுக்கான. ‡ கரிய யூகம் - கருங்குரங்கு § பயோதரம் - தனம்.

பாகனவு தித்தித்த கீதமொழி யிற்புட்ப
பாணவிழி யிற்பொருத்தி விடுமாதர்

காரணிகு ழற்கற்றை மேல்மகர மொப்பித்த
காதில்முக வட்டத்தில் அதிமோக

காமுகனை கப்பட்ட ஆசையைம றப்பித்த
கால்களைம றக்கைக்கும் வருமோதான்

தேரிரவி உட்கிப்பு காமுதபு ரத்திற்றெ
சாசிரனை மர்த்தித்த அரிமாயன்
சீர்மருக அத்யுக்ர யானைபடும் ரத்நக்ரி
கோணசயி லத்துக்ர கதிர்காம

வீரபுன வெற்பிற்க லாபியெயி னச்சிக்கு
மேகலையி டைக்கொத்தின் இருதாளின்

வேரிமழை யிற்† பச்சை வேயிலரு ணக்கற்றை
வேல்களில கப்பட்ட பெருமாளே. (௩௮௭)

தனதனா தத்த தனதனா தத்த
தனதனா தத்த தனதான.

415. மருவரு வெற்றி மலர் § தொடா விற்கை
வலிசெயா நிற்கு மதனாலும்

மதில்கள் தா வுற்ற கலைபடா வட்ட
மதி ‡ சுடா நிற்கு மதனாலும்

இருகணால் முத்த முதிரயா மத்தி
ரிரவினால் நித்த மெலியாதே

இடருறு மெத்த மயல்கொளா நிற்கு
மிவளைவாழ் விக்க வரவேணும்

கரிகள்சேர் வெற்றி லரியவே டிச்சி
கலவிகூர் சித்ர மணிமார்பா

ககனமா ணிக்க வடிவனே மிக்க
கதிர்கா மத்தில் உறவோனே

வேரிமழை-வாசனை தங்கிய மேகம்போன்ற குழல். †பச்சைவேய்-பசிய மூங்கிலை யொத்ததோள். §தொடா-தொடுத்து ‡சுடாநிற்கும்-சுடும்.

முருகனே பத்த ரருகனே முத்தி
முதல்வனே பச்சை மயில்வீரா
முடுகியே விட்ட கொடியசூர் கெட்டு
முறியவேல் தொட்ட பெருமாளே. (௩௮௮)

தானதன தானத் தனதான தானதன தானத் தனதான.

416. மாதர்வச மாயுற் றுழல்வாரும் மாதவமெ ணாமற் றிரிவாரும்
தீதகல வோதிப் பணியாரும் தீநரக மீதிற் றிகழ்வாரே
நாதவொளி யேநற் குணசீலா நாரியிரு வோரைப் புணர்வேலா
சோதிசிவ ஞானக் குமரேசா தோமில்கதிர் காமப் பெருமாளே ()

தனன தான தான தத்த தனன தான தான தத்த
தனன தான தான தத்த தனதான.

417. முதிரு*மார வார நட்பொ †டிலகு மார வார மெற்றி
முனியு மார வார முற்ற கடலாலே
முடிவி லாத தோர் ‡வ டக்கில் எரியு §மால மார்பி டத்து
முழுகி ஏறி மேலெ ழுக்கு நிலவாலே
||வெதிரி லாயர் வாயில் வைத்து மதுர ராக நீடி சைக்கும்
வினைவி டாத தாய ருக்கு மழியாதே
விளையு மோக போக முற்றி அளவி லாத காதல் பெற்ற
விகட மாதை நீய ணைக்க வருவாயே
கதிர காம மாந கர்க்கு ளெதிரி லாத வேல்த ரித்த
கடவு ளேக லாப சித்ர மயில்வீரா
கயலு லாம்வி லோச னத்தி களப மார்ப யோத ரத்தி
ககன மேவு வா ¶ ளொருத்தி மணவாளா
அதிர வீசி யாடும் வெற்றி விடையி லேறு மீசர் கற்க
அரிய ஞான வாச கத்தை அருள்வோனே
அகில லோக மீது சுற்றி அசுர லோக நீறெ ழுப்பி
அமரர் லோகம் வாழ வைத்த பெருமாளே. (௩௯௦)

மார வார நட்பொடு - மாரனுக்கு உரிமையாகிய முதிர்ந்த நட்புடன். † இலகும் ஆர் அ ஆரம் எற்றி - பிரகாசிக்கின்ற அரிய அந்த முத்துக்களை எற்றி ‡ வடக்கில் எரி - வடவா முகாக்கினி. § ஆலம் ஆர்பு இடம் - கடல். || வெதிர் - மூங்கில் ¶ ஒருத்தி - தெய்வயானையம்மையார்.

## அருக்கோணமலை.

தனத்த தானன தனத்த தானன
தனத்த தானன தனத்த தானன
தனத்த தானன தனத்த தானன தனதான,

418. கொடுத்த வாளென விழித்து மார்முலை
அசைத்து மேகலை மறைத்து மூடிகள்
குடித்து நேர்கலை நெகிழ்த்து மாவியல் கொளுமாதர்
சுகித்த றாவென நகைத்து மேல்விழ
முடித்த வார்குழல் விரித்து மேவிதழ்
*துவர்த்த வாய்சுரு ளடக்கி மால்கொடு வழியேபோய்ப்
படுத்த பாயலி லணைத்து மாமுலை
பிடித்து மார்பொடு மழுத்தி வாயிதழ்
கடித்து நாணமு மழித்த பாவிகள் வலையாலே
படுத்து நோயொடு கிடத்து பாய்மிசை
வெளுத்து வாய்களு †மலத்தி னாயென
பசித்து தாகமு மெடுத்தி டாவுயிர் உழல்வேனோ
‡வெடுத்த தாடகை சினத்தை யோர்கணை
விடுத்து யாகமுங் கடத்தி யேயொரு
மிருத்த வார்சிலை முறித்த மாயவன் மருகோனே
விரித்த நூல்மறை யளித்த வேதனை
அதிர்த்து மோர்முடி §கரத்தி லாயனல்
விழித்து மாமனை எரித்த தாதையர் குருநாதா
அறுத்த ஆயிர விடப்ப ணாமுடி
நடிக்க மாமலை பிளக்க வேகவ
டாக்கர் மாமுடி பதைக்க வேயொரு மயில்வீரா
அரத்தில் வாழுமை சிறக்க வேயறு
முகத்தி லேதொடை குறத்தி யானையொ
டருக்கொ ணாமலை தருக்கு லாவிய பெருமாளே. (௱௯௧)

* துவர்த்த-பவளமொத்த † மலத்தினாய் மலம் தின் நாய் ‡ வெடுத்த-வெடு வெடுத்த. § கரத்திலாய் - கரத்தில் வைத்துக்கொண்டிருப்பவனாய்.

## திருக்கோணமலை.

இது யாழ்ப்பாணத்துக்குத் தென்கிழக்கே இருக்கிறது.

---

தனத்த தானன தனத்தான தானன
தனத்த தானன தனத்தான தானன
தனத்த தானன தனத்தான தானன தனதான.

419. விலைக்கு மேனியி லணிக்கோவை மேகலை
தரித்த ஆடையு மணிப்பூணு மாகவெ
மினுக்கு மாதர்க ளிடைக்காம மூழ்கியெ மயலூறி
மிகுத்த காமிய னெனப்பாரு ளோரெதிர்
நகைக்க வேயுட லெடுத்தேவி யாருமெ
வெறுப்ப தாகியெ உழைத்தேவி டாய்ப்படு கொடியேனைக்
கலக்க மாகவெ மலக்கூடி லேமிரு
பிணிக்கு ளாகியெ தவிக்காம லேயுனை
கவிக்கு ளாய்சொலி கடைத்தேற வேசெயும் ஒருவாழ்வே
கதிக்கு நாயக உனைத்தேடி யேபுக
ழுரைக்கு நாயெனை அருட்பார்வை யாகவெ
கழற்கு ளாகவெ சிறப்பான தாயருள் தரவேணும்
மலைக்கு நாயக சிவக்காமி நாயகர்
திருக்கு மாரனெ முகத்தாறு தேசிக
வடிப்ப மாதொரு குறப்பாவை யாள்மகிழ் தருவேளே
வசிட்டர் காசிபர் தவத்தால யோகியர்
அகத்ய மாமுநி இடைக்காடர் கீரனும்
வகுத்த பாவுறு பொருட்கோல மாய்வரு முருகோனே
நிலைக்கு நான்மறை மகத்தான பூசுரர்
திருக்கொ ணாமலை தலத்தாரு கோபுர
நிலைக்குள் வாயினில் கிளிப்பாடு பூதியில் வருவோனே
நிகழ்த்து மேழ்பவ கடற்சூறை யாகவெ
எடுத்த வேல்கொடு பொடித்தூள தாகவெ
நினைத்த காரிய மநுக்கூல மேபுரி பெருமாளே. ([illegible])

கொலைச்செருக் காக்கரைக் கலக்குமிக் கருக்குடக்
கொடித்திருக் காத்தபொற் பதியோடுங்
குறித்தநற் றிருப்புகழ்ப் ப்ரபுத்துவக் கவித்துவக்
குருத்துவத் தெனைப்பணித் தருள்வோனே
தலைச்சுமைச் சடைச்சிவற் கிலக்கணத் திலக்கியத்
தமிழ்த்ரயத் தகத்தியற் கறிவோதுஞ்
சமர்த்தரிற் சமர்த்தபச் சிமத்திசைக் குளத்தமத்
தனிச்*சயத் தினிற்பிளைப் பெருமாளே. (௩௯௪)

---

## பசுமலை.

**இது மதுரைக்குத் தெற்கே மூன்றுமைல் தூலவிலுள்ளது.**

---

தத்தானத் தாத்தத் தனதன
தத்தானத் தாத்தத் தனதன
தத்தானத் தாத்தத் தனதன தனதான.

422. சிற்றாயக் கூட்டத் தெரிவையர்
வித்தாரச் சூழ்ச்சிக் கயல்விழி
சற்றேறப் பார்த்துச் சிலபணி விடையேவிச்
சிற்றூபத் தாக்கைப் பொருள்கொடு
* பித்தேறிக் கூப்பிட் டவர்பரி
செட்டாமற் றூர்த்தத் தலைபடு சிறுகாலை
உற்றார்பெற் றார்க்குப் பெரிதொரு
பற்றாயப் பூட்டுக் கயிறுகொ
டுச்சாயத் தாக்கைத் தொழிலொடு தடுமாறி
உக்காரித் தேக்கற் றுயிர்நழு
விக்காயத் தீப்பட் டெரியுட
லுக்கேனன் †மெய்க் காட்டைத் தவிர்வது மெந்நாளோ
வற்றாமற் றூப்பச் சிலைமலை
யிற்பாலைப் பார்த்துத் தருமொரு
மைக்காமக் கோட்டக் குமரியின் தருபாலா

* பித்தேறி - பித்தேற்றி † மெய்க்காடு - பொய்ச்சடலம்.

பத்தோசைப் போக்கிற் றயிருற்றி
நெய்ப்பாலுக் காய்ச்சிக் கிருபதம்
வைத்தாடிக் காட்டிப் பருகரி மருகோனே
*கற்றாவிற் காட்டிக் †கரைதுறை
‡நற்றாயிற் காட்டிப் புகழ் §கலை
கற்றார்சொற் கேட்கத் தனிவழி வருவோனே
கைத்தாலக் கூற்றைக் கடிபது
மத்தாளர்க் கேற்பக் கனல்பொழி
கற்||றாவுக் கோட்டுக் குருகிய பெருமாளே. (௪௨௨)

---

## திருக்காளத்தி.

**இது ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே 2 மைல் துலைவிலிருக்கிறது.**

---

தனத்தா னத்தத் தனனா தந்தத்
தனத்தா னத்தத் தனனா தந்தத்
தனத்தா னத்தத் தனனா தந்தத் தனதான.

423. ¶சாக்கே றித்தப் பதிவாழ் தொந்தப்
பரிக்கா யத்திற் பரிவோ டைந்துச்
சதிக்கா ரர்ப்புக் குலமே விந்தச் செயல்மேவிச்
சலிப்பே யெத்துச் சமுசா ரம்பொற்
சலித்தே சுற்றத் தவரோ டின்பத்
தழைப்பே மெச்சத் தயவோ டிந்தக் குடிபேணிக்
$குரக்கோ ணத்திற் கழுநா யுண்பக்
குழிக்கே வைத்துச் சவமாய் நந்திக்
குழற்கே நத்திப் பழுதாய் மங்கப் படுவேனைக்
குறிக்கே முத்திக் கு*மறுவின்பக்
கடத்தே பற்றிச் சகமா யம்பொய்க்
குலக்கால் வற்றச் சிவஞா னம்பொற் கழல்தாராய்

---

*கல் தா வில் காட்டி-மலையை யொத்த வலியுள்ள வில்லைக் காட்டி. † கரை துறை-சொல்லுகின்ற துறையை. ‡ நற்றாயில் காட்டி புகழ்-நற்றா யிரங்கலாகப் "பொன்போலுங் கள்ளி" என்றெடுத்துக்காட்டிப்புகழ்ந்த. § கலைகற்றார்-பொய்யாமொழிப்புலவர். || ஆவுக்கோடு பசுமலை. ¶ சாக்கு ஏறு இத்த பதி-பொருள்கள் மிகுந்த இப்புவியிடம், இத்த-இந்த. $ குரக் கோணத்திற்கழு-குளம்புத்தன்மையுள்ள மூக்கையுடைய கழு. *¥ மறு-மாறு.

புரக்கா டற்றுப் பொடியாய் மங்கக்
கழைச்சா பத்*தைச் சடலா னுங்கப்
புகைத்தீ பற்றப் புரிவோ னன்புற் றருள்வோனே
புடைத்தே எட்டுத் திசையோ ரஞ்சத்
தனிக்கோ லத்துப் புகுசூர் மங்கப்
புகழ்ப்பேர் சத்திக் கிரையா நக்குத் தருள்வோனே
திருக்கா னத்திற் பரிவோ டங்குக்
குறக்கோ லத்துச் செயலா லஞ்சத்
திகழ்ச்சீ ரத்திக் க†ழல்வா வென்பப் புணர்வோனே
சிவப்பே றுக்குக் கடையேன் வந்துட்
புகச்சீர் வைத்துக் கொளும்நா னம்பொற்
றிருக்கா ளத்திப் பதிவாழ் கந்தப் பெருமாளே. ([illegible])

தனத்தானத்தத் தனதான தனத்தானத்தத் தனதான.

424. சிரத்தானத்திற் பணியாதே செகத்தோர் பற்றைக்குறியாதே
வருத்தா மற்றொப் பிலதான மலர்த்தாள் வைத்தெத் தனையாள்வாய்
நிருத்தா கர்த்தத் துவநேசா நினைத்தார் சித்தத் துறைவோனே
திருத்தாள்முத்தர்க் கருள்வோனே திருக்கா ளத்திப்பெருமாளே.()

தந்தன தானத் தனந்த தானன
தந்தன தானத் தனந்த தானன
தந்தன தானத் தனந்த தானன தனதான.

425. பங்கய னார்பெற் றிடுஞ்ச ராசர
அண்டம தாயுற் றிருந்த பார்மிசை
‡ பஞ்சவர் கூடித் திரண்ட தோர்நர உருவாயே
பந்தம தாகப் பிணிந்த ஆசையில்
இங்கித மாகத் திரிந்து மாதர்கள்
பண்பொழி சூதைக் கடந்தி டாதுழல் §படிறுடையே
சங்கட னேடித் தளர்ந்து நோய்வினை
வந்துடல் மூடக் கலங்கி டாவகை
தந்தடி யேனைப் புரந்தி டாயுன தருளாலே

* சடலான் - அழகிய தேகத்தையுடைய மன்மதன். † அழல்வா என்ப அழாதே, வா என்ன. ‡ பஞ்சவர் - ஐந்துபூதங்கள். § படிறு வஞ்சகம்.

கருணை அடியரொ டருணையி லொருவிசை
கருதி புடைதர வருமிரு பரிபுர
கமல மலரடி கனவிலு நனவிலு மறவேனே

தமர மிகுதிரை எறிவளை கடல்குடல்
மறுகி அலைபட விடநதி உமிழ்வன
சமுக முககண பணபணி பதிநெடு வடமாகச்

சகல உலகமு நிலைபெற நிறுவிய
கனக கிரிதிரி தரவெகு கரமலர்
தளர வினியொரு தமுதினை ஒருதனி கடையாநின்

றமரர் பசிகெட வுதவிய கிருபைமுகில்
அகில புவனமு மளவிடு குறியவன்
அளவு நெடியவ னளவிட அரியவன் மருகோனே

அரவு புனைதரு புநிதரும் வழிபட
மழலை மொழிகொடு தெளிதர வொளிதிகழ்
அறிவை அறிவது பொருளென அருளிய பெருமாளே.

427. அருவ மிடையென வருபவர் துவரிதழ்
அமுது பருகியு முருகிய ம்ருகமத
அளக மலையவு மணிதுகி லகலவும் அதிபார

அசல முலைபுள கிதமெழ அமளியில்
அமளி படவனை வரதமு மவசமொ
டணையு மழகிய கலவியு *மலமலம் உலகோரைத்

தருவை நிகரிடு புலமையு மலமல
முருவு மிளமையு மலமலம் விபரித
சமய கலைகளு மலமல மலமரும் விரகாவைப்புந்

†சலில லிபியன சனனமு மலமல
மினியு னடியரொ டொருவழி படவிரு
தாள பரிபுர சரணமு மவுனமும் அருள்வாயே

உருவு கரியதொர் கணைகொடு பணிபதி
இருகு தையுமுடி தமனிய தநுவுட
னுருளை இருசுடர் வையமொ டயன்மறை [illegible]

* அலம் அலம் போதும் போதும். † சலில லிபி யன- நீர்மேலெழுத்தான.

உறுதி படுசுர ரதமிசை அடியிட
நெறுநெ றெனமுறி தலுநிலை பெறுதவம்
உடைய ஒருவரு மிருவரு மருள்பெற ஒருகோடி
தெருவு நகரியு நிசிசரர் முடியொடு
சடச டெனவடி படுவன புகைவன
திகுதி கெனவெரி வனவனல் நகைகொடு முனிவார்தஞ்
சிறுவ வனசரர் சிறுமியொ டுருகிய
பெரும வருணையி லெழுநிலை திகழ்வன
சிகரி மிசையொரு கலபியி லுலவிய பெருமாளே. ()

428. கருணை சிறிதுமில் பறிதலை *நிசிசரர்
பிசித அசனம றவரிவர் முதலிய
கலக விபரித வெகுபர சமயிகள் பலர்கூடிக்
கலக லெனநெறி கெடமுறை முறைமுறை
கதறி வதறிய குதறிய கலைகொடு
கருத வரியதை விழுபுனல் வாமொழி குளறுவன்
புருஷ உனதருள் பரவுகை வரில்விர
கொழியி லுலகியல் பிணிவிட லுமைசெய
லுணர்வு கெடுதுயிர் புணரிரு வினையள றதுபோக
உதறி யெனதெனு மலமறி அறிவினி
லெளிது பெறவெளி மறைபறை அறைவதொ
ருதய மரணமில் பொருளினை அருளுவ தொருநாளே
தருண சததள பரிமள பரிபுர
சரணி தமனிய தநுகரி திரிபுர
தகனி கவுரிப வதிபக வதியபி ரவிசூலி
சாமல தரியுறு பவையுமை திரிபுரை
சகல புவனமு முதவிய பதிவ்ருதை
சமய முதல்வித மயபரி ரதிசுத சதகோடி
அருண ரவியினு மழகிய ப்ரபைவிடு
கருணை வருணித தனுபர குருபர
அருணை நகருறை சரவண குகவணி புயவேளே

*நிசிசரர் பிசித அசன மறவர்-இராக்ஷதரையும் மறவரையும் ஒத்த சமணர்

அடவி சார்குல மாகத வனிதையு
மமரர் குமரியு மனவா தமுமரு
கழகு பெறநிலை பெறவா மருளிய பெருமாளே. ()

429. துகிலு ம்ருகமத பரிமள அளகமும்
நெகிழ இருதன கிரியசை தரவிடை
துவள மனிதரு மமரரு முநிவரு முடனேடித்

தொடர வனமணி மகரமி லகுகுழை
அடரு வனவிட மிளிர்வன ரதிபதி
சுருதி மொழிவன கயல்விழி புரள்தர நடுவாக

வகிரு மதிபுரை தருநுதல் பனிவர
வனச பதயுக பரிபுர மொலிபட
மறுகு தொறுமுலை விலைகூறும்

*வரைவி லரிவையர் தருகக சலதியி
லலையு மெனதுயி ரநுதின நெறிதரு
மவுன சிவசுக சலதியில் முழுகுவ தொருநாளோ

முகிலு மதியமும் ரவியெழு புரவியும்
நெடிய குலைமிட றிடறமு துகுகன
முகடு கிழிபட வளர்வன கமுகின [illegible]

முடுகு கயலுகள் வயல்களு முருகவிழ்
தடமு முளரிய அகழியு மதில்களு
முழுது முடையதொ ருருணையி லுறைதரு [illegible]

அகிலு மருதமு முகுளித வருளமு
மமுத கதலியும் அருணமும் வருமை யு
மபரி மிதமத கரிகளு மரிகளும் உடனேகொண்

டருவி இழிதரு மருவரை தனிலொரு
† சவர வனிதையை முனிதரு புனிதமைய
அவச முடன்மல ரடிதொழு தருளிய பெருமாளே ()

430. மகர மெறிகடல் விழியிறு மொழியிறு
மதுப முரல்குழல் வகையிறு கலையிறும்
வளமை இனுமுக நிலவிறு பிலவிறு [illegible]

*வரைவிலரிவையர்-பொதுமாதர். † சவரர் வனத்தில் வசிக்கும் வேடர்.

மதுர இதழினு மிடையினு நடையினும்
மகளிர் முகுளித முலையினு நிலையினும்
வனச பரிபுர மலரினு முலரினும் அவர்நாமம்
பகரு கினுமவர் பணிவிடை திரிகினு
முருகி நெறிமுறை தவறினு மவரொடு
பகடி யிடுகினு மமளியி லவர்தரு மநுராக
பரவை படியினும் வசமழி யினுமுத
லருணை நகர்மிசை கருணையொ டருளிய
பாத மொருவச னமுமிரு சரணமு மறவேனே
ககன சுரபதி வழிபட எழுகிரி
கடக கிரியொடு பொடிபட வடகுல
கனக கனகுவ டடியொடு முறிபட முதுசூதம்
கதறு சுழிகட லிடைகெழு படமிகு
கலக நிசிசரர் பொடிபட நடவிய
கலப மரகத துரகத பதுகிரி மயில்வாழ்வே
தகன கரதல சிவசுத கணபதி
சகச சரவண பரிமள சததள
சயன வனசர் கதிபெற முனிபெறு புனமானின்
தரள முகபட நெறிபட நிமிர்வன
தருண புளகித ம்ருகமத தனகிரி
தழுவ மயல்கொடு தனிமட லெழுதிய பெருமாளே. ()

431. முகிலை இகல்பொரு முழுவிருள் குழலென
முதிய மதியது முகமென * நுதலிணை
† முரணர் வரிசிலை முறிபடு கணைவிழி எனமேவா
முளரி தனின்முகு ளிதமலர் முலையென
முறுவல் தனையிரு குழைதனை மொழிதனை
மொழிய வரியதொர் தெரிவையர் வினையென மொழிகூறிப்
பகலு மிரவினு மிகமன மருள்கொடு
பதியி லவர்வடி வுளதழு கெனவொரு
பழுது மறவவர் பரிவுற இதமது பகராதே

* நுதல் - புருவம். † முரணர் - வலியவர்.

பகைகொ டெதிர்பொரு மசுரர்கள் தொகைபட
விகட முடனடை பயில்பயில் மிசைவரு
பவனி தனையநு தினநினை யெனவருள் பகர்வாயே

புகல வரியது பொருளிது எனவொரு
புதுமை இடவரி யதுமுத லெனுமொரு
பொதுவை இதுவென முதுதவ முநிவர்கள் புடைசூழப்

புரமு மெரியெழ நகையது புரிபவர்
புனலும் வளர்மதி புனைசடை யிலரவர்
புடவி வழிபட ஒருபொருள் விரகொடு புகல்வோனே

அகில கலைகளு மறநெறி முறைமையு
மகில மொழிதரு புலவரு முலகினி
லறிஞர் தவமுயல் பவர்களு மியலிசை அதனாலே

அறுவர் முலையுணு மறுமுக னிவனென
அரிய நடமிடு மடியவ ரடிதொழ
அருணை நகர்தனி லழகுடன் மருவிய பெருமாளே. ( )

432. முருகு செறிகுழல் சொருகிய விரகிகள்
முலைக ளளவிடு முகபட பகடிகள்
முதலு முயிர்களு மளவிடு கணிகையர் முழுநீல

முழுகு புழுககில் குழைவடி வழகியர்
முதிர வளர்கனி அதரமு ரிதழியர்
முனைகொ ளயிலென விழியெறி கடையர் [illegible]

மருவி அமளியி னலமிடு கலவியர்
மனது திரவிய மளவள வளவியர்
வசன மொருநொடி நிலைமையில் கபடியர் [illegible]

மருளு மறிவின னடிமுடி யறிகிலன்
அருணை நகர்மிசை கருணையொ டருளிய
மவுன வசனமு மிருபெரு சரணமு மறவேனே

கருதி இருபது கரமுடி இருபது
கனக மவுலிகொள் [illegible]
கடிய வியனகர் *புகவரு †கனபதி [illegible]

---

புகவரு - புகுவதற்கு அரிதாகிய. † கனபதி - இலங்கை.

கருக ஒளிவிடு தநுபா கவுதம
புநித முநிதொழ அருணையி லறப்வளர்
கருணை உமைதரு சரவண சரபதி பெருமாளே. (உ0ரு)

---

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன தனதான.

434. *கமரி மலர்குழல் சரிய புளகித
கனக தனகிரி அசைய பொருவிழி
கணைக ளெனநுதல் புரள துகிலவை நெகிழ்மாதர்

கரிய மணிபுர ளரிய கதிரொளி
பரவ இணைகுழை அசைய நகைகதிர்
கனக வளைகல நடைகள் பழகிகள் மயில்போலத்

திமிரு மதபுழு கொழுக தெருவினி
லலைய விலைமுலை தெரிய மயல்கொடு
திலத மணிமுக அழகு சுழலிகள் இதழுறநல்

திரையி லமுதென கழைகள் பலசுளை
எனவு மவர்மயல் தழுவு மசடனை
திருகு புலைகொலை கலிகள் சிதறிட அருள்தாராய்

குமர குருபர குமர குருபர
குமர குருபர குமர குருபர
குமர குருபர குமர குருபர எனதாளர்

குரைசெய் முரசமொ டரிய விருதொலி
டமட டமடம டமட டமவென
குமுற திமிலைச லிரிகி னரிமுதல் இசைபாட

அமரர் முநிவரு மயனு மனைவரு
மதுகை மலர்கொடு தொழுது பதமுற
அசுரர் பரிகரி இரத முனைபட அமர்செய்வேலா

---

* கமரி - கம்அரி, மேகம்போன்ற வண்டுதங்கிய

அகில புவனமொ டடைய வொளிபெற
அழகு சரண்மயில் புறம தருளியொ
ரருண கிரிகுற மகளை மருவிய பெருமாளே. (௨௦௬)

---

**தனதனத் தானனத் தனதனத் தானனத்**
**தனதனத் தானனத் தனதான.**

435. கயல்விழித் தேனெனைச் செயலழித் தாயெனக்
கணவகெட் டேனெனப் பெறுமாது
கருதுபுத் ராவெனப் புதல்வரப் பாவெனக்
கதறிடப் பாடையிற் றலைமீதே
பயில்குலத் தாரழப் பழையநட் பாரழப்
பறைகள்கொட் டாவரச் சமனாரும்
பரியகைப் பாசம்விட் டெறியுமப் போதெனைப்
பரிகரித் தாவியைத் தரவேணும்
அயிலறச் சேவல்கைக் கனிமுகத் தோகையுற்
றருணையிற் கோபுரத் துறைவோனே
அமரரைத் தாவிறக் குமரிமுத் தாவிவர்த்
தரியசொற் பாவலர்க் கெளியோனே
புயலினைப் பாறுபொற் சயிலமொய்ச் சாரலிற்
புனமறப் பாவையைப் புணர்வோனே
பொருபடைப் பூதரத் தொடுகடற் சூரனைப்
பொருதுமுட் சேவகப் பெருமாளே. (௨௦௭)

436. கறுவுமிக் காவியைக் *கலகுமக் காலனைக்
கிலகுகட் சேல்களிற் புடைநடக்
கருதிருட் பாடு†கட் டளையுடற் பேரியுட்
கவினினிற் காரினிற் குறவாலுற்
றுறுமலர்ப் பாயலிற் றுயர்விளைத் தாடலுற்
றுயர்பொருட் கோதியுட் படுமாதர்

---

லகும் - கலக்கும் † கட்டளை உடல் - அளவான பொருள்.

ஒறுவினைக் கேயுளத் தறிவுகெட் டேனுயிர்ப்
புணையிணைத் தாள்தனைத் தொழுவேனோ

மறையெடுத் தோதிவச் சிரமெடுத் தானுமைச்
செறிதிருக் கோலமுற் றணைவானும்

‡ மறைகள்புக் காரெனக் குவடுகெட் டாழிவற்
றிடவடற் சூரனைப் பொரும்வேலா

அறிவுடைத் தாருமற் றடனுனைப் பாடலுற்
றருணையிற் கோபுரத் துறைவோனே

அடவியிற் றோகைபொற் றடமுலைக் காசையுற்
றயருமச் சேவகப் பெருமாளே. (௨௦அ)

437. பரியகைப் பாசம்விட் டெறியுமக் காலனுட்
பயனுயிர்ப் போயகப் படமோகப்

படியிலுற் றோரெனப் பலர்கள்பற் றோவடற்
படவெரிக் கூடுவிட் டலைநீரிற்

பிரியுமிப் பாதகப் பிறவியுற் றேமிகப்
பிணிகளுக் கேயிளைத் துழல்வாயேன்

பிழைபொறுத் தாயெனப் பழுதறுத் தாளெனப்
பிரியமுற் றேயிடப் பெறுவேனோ

கரியமெய்க் கோலமுற் றரியிலைத் தாமமைக்
கமைவபற் றாசையக் கழுவேலார்முன்

கலைவருத் தோதிவெற் பதுதுளைத் தோளியற்
கடவுள்செச் சேவல்மாகக் கொடியோனே

றரியநற் பாடலைத் தெரியுமுற் றோர்சிலைக்
கருணையிற் கோபுரத் துறைவோனே

அடவியிற் றோகைபொற் றடமுலைக் காசையுற்
றயருமச் சேவகப் பெருமாளே. (… [illegible])

---

* ஒறுவினை-தீராவினை ‡ மறைகள்புக்கார் என-அடைக்கலமுற்றோரென.

தனனதன தான தத்த தனனதன தான தத்த
தனனதன தான தத்த தனதான.

438. தருணமணி வானி லத்தி லருணமணி யாலவிட்ட
தழலமளி மீதெ றிக்கு நிலவாலே
தலைமைதவி ராம னத்தி னிலைமையறி யாதெ திர்த்த
தறுகண்மத வேள்தொ டுத்த கணையாலே
வருணமட மாதர் கற்ற வசையின்மிகை பேத முற்று
மருவுமென தாவி சற்றும் அழியாதே
மகுடமணி வாரி சைக்கும் விகடமது லாவு சித்ர
மயிலின்மிசை ஏறி நித்தம் வரவேணும்
கருணையக லாவி ழிச்சி களபமழி யாமு லைச்சி
கலைவிதொலை யாம றத்தி மணவாளா
*கடுவுடைய ராநி ரைத்த சடிலமுடி மீது வைத்த
கடியமல ராத ரித்த கழல்வீரா
அருணமணி யால மைத்த கிரணமணி சூழும் வெற்றி
அருணைநகர் கோபு ரத்தில் உறைவோனே
அசுரர்குலம் வேர றுத்து வட வனலை மீதெழுப்பி
அமரர்சிறை மீள விட்ட பெருமாளே. (௨௧௰)

439. முழுகிவட வாமு கத்தி னெழுகனலி லேயி றக்கு
முழுமதிநி லாவி னுக்கும் வசையாலும்
மொழியுமட மாத ருக்கு மினியதனி வேயி சைக்கு
முதியமத ராஜ னுக்கும் அழியாதே
புழுகுதிகழ் நீப மத்தி லுறியகு ராநி ரைத்த
புதுமையினி லாறி ரட்டி புயமீதே
புணரும்வகை தானி னைத்த துணரும்வகை நீல சித்ர
பொருமயிலி லேறி நித்தம் வரவேணும்
எழுமகா வாவி சுற்று பொழிலருணை மாந கர்க்கு
ளெழுதரிய கோபு ரத்தில் உறைவோனே

*கடுவுடை அரா - விடப்பாம்பு.

இடைதுவள வேடு வச்சி படமசைய வேக னத்த
இளமுலைவி டாத சித்ர மணிமார்பா
செழுமகுட நாக மொய்த்த ஒழுகுபுனல் வேணி வைத்த
சிவனைமுத லோது வித்த குருநாதா
திசைமுகன்மு ராரி மற்று மரியபல தேவ ருற்ற
சிறையடைய மீள விட்ட பெருமாளே. (உகக)

---

தானதன தானத் தானதன தானத்
தானதன தானத் தந்ததான.

440 ஆலவிழி நீலத் தாலதர பானத்
தாலளக பாரக் கொண்டலாலே
ஆரநகை யால்விற் போர்நுதலி னல்வித்
தாரநடை யால்நற் கொங்கையாலே
சாலமய லாகிக் காலதிரி சூலத்
தாலிறுகு பாசத் துன்பமுழ்கித்
தாழ்விலுயிர் வீழ்பட் டூழ்வினைவி டாமற்
சாவதன்மு *னேவற் கொண்டிடாயோ
சோலைதரு கானிற் கோலமற மானைத்
தோளினுற வாகக் கொண்டவாழ்வே
சோதிமுரு காநித் தாபழைய ஞானச்
சோணகிரி வீதிக் கந்தவேளே
பாலகக லாபக் கோமளம யூரப்
பாகவுமை பாகத் தன்குமாரா
பாதமலர் மீதிற் போதமலர் தூவிப்
பாடுமவர் தோழத் தம்பிரானே. (உகஉ)

---

441. பேதகவி ரோதத் தோதகவி னோதப்
பேதையர்†கு லாவைக் கண்டுமாலின்
பேதைமைய ருமற் ‡றேதமக லாமற்
பேதவுடல் பேணித் தென்படாதே

* ஏவல் - அடிமை. † குலா - ஆடம்பரம். ‡ ஏதம் - துன்பம்.

*சாதகவி காரச் சாதலவை போகத்
தாழ்வினுயி ராகச் சிந்தையாலுன்

தாரைவடி வேலைச் சேவல்தனை என்றற்
சாரல்மற மானைச் சிந்தியேனோ

†போதகம யூரப் போதககடாமற்
போதருணை வீதிக் கந்தவேளே

‡போதகக லாபக் கோதைமுது வானிற்
போனசிறை மீளச் சென்றவேலா

பாதகப தாதிச் சூரன்முதல் வீழப்
பாருலகு வாழக் கண்டகோவே

பாதமலர் மீதிற் போதமலர் தூவிப்
பாடுமவர் தோழத் தம்பிரானே. (உ௧௫)

---

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தனதான.

442. அமுத மூறுசொ லாகிய தோகையர்
பொருளு ளாரைஎ ணாயு ணேயெ
னருகு வீடிது தானிதில் வாருமெ னுரைகூறும்

அசடு மாதர் ||குவாதுசொல் கேடிகள்
தெருவின் மீதுக லாவியு லாவிகள்
அவர்கள் மாயைப டாமல்கெ டாமல்நி னருள்தாராய்

குமரி காளிவ ராகிம கேஸ்வரி
கவுரி மோடிசு ராரிநி ராபரி
கொடிய சூலிசு டாரணி யாமளி மகமாயி

*சாதக விகாரச் சாதல் - விகாரச்சாதக சாதல்; துன்பமான பிறப்பு இறப்பு. †போதக மயூரப்போது அக அகடு ஆ மன் போது-யானை, மயில் இவைகளின்மேல் மலராசனமிட்ட மத்தியஸ்தானத்தி லெழுந்தருளிவரு கின்ற. ‡போதககலாபக்கோதைமுதுவான் - தெய்வயானையம்மை அவ தரித்த முதிய விண்ணுலகம். || குவாது - குதர்க்கம்.

குறளு ரூபமு ராரிச கோதரி
உலக தாரியு தாரிப ராபரி
குருப ராரிவி காரிந மோகரி — அபிராமி

சமர நீலிபு ராரித னாயகி
மலைகு மாரிக பாலிநா ரணி
சலில மாரிசி வாயம னோகரி — பரையோகி

சவுரி வீரி*மு நீர்விட போஜனி
திகிரி மேவுகை யாளிசெ யாளொரு
சகல வேதமு மாயின தாயுமை — அருள்பாலா

திமித மாடுசு ராரிநி சாசரர்
முடிக டோறு†க டாவியி டேயொரு
சிலப சாசு‡கு ணாலிநி ணாமுண — விடும்வேலா

திருவு லாவுசொ ணேசர ணாமலை
முகிலு லாவுவி மானந வோநிலை
சிகர மீதுக லாவியு லாவிய — பெருமாளே. (உகச)

---

443. உருகு மாமெழு காகவு மேமயல்
பெருகு மாசையு ளாகிய பேர்வரி
லூறிய மேடையில் வார்குழல் நீவிய — ஒளிமானார்

உடைகொள் மேகலை யால்முலை மூடியு
நெகிழ நாடிய தோதக மாடியு
முவமை மாமயில் போல்நிற மேனியர் — உரையாடுங்

கரவ தாமன மாதர்கள் நீள்வலை
கலக வாரியில் வீழடி யேனெறி
கருதொ ணாவதி பாதக னேசம — தறியாத

கசட மூடனை யாளவு மேயருள்
கருணை வாரிதி யேயிரு நாயகி
கணவ னேயுன தாளிணை மாமலர் — தருவாயே

---

*முநீர்விடம் - கடலிலெழுந்த நஞ்சு. † கடாவியிடேய் - கடாவியிட்டு ஏய். ‡ குணலிநிணம் உண - குணலையிட்டு நிணம் உண்ண.

சுருதி மாமொழி வேதியன் வானவர்
 பரவு *கேசனை ஆயுத பாணிநல்
 துளப மாலையை மார்பணி மாயவன் மருகோனே
தொலைவி லாவசு ரேசர்க ளானவர்
 துகள தாகவு மேயெதி ராடிடு
 சுடரின் வேலவ னேயுல கேழ்வலம் வருவோனே
†அருணர் கோடியி னொளி வீசிய
 தருண வாண்முக மேனிய னேயரன்
 அணையு நாயகி பாலக னேநிறை கலையோனே
அணிபொன் மேருயர் கோபுர மாமதில்
 அதிரு மாரண வாரண வீதியுள்
 அருணை மாநகர் மேவியு லாவிய பெருமாளே. (௨௯௫)

---

தனதன தனன தனந்த தானன
தனதன தனன தனந்த தானன
தனதன தனன தனந்த தானன தந்ததான.

444. கரியுரி அரவ மணிந்த மேனியர்
 கலைமதி சலமு நிறைந்த வேணியர்
 கனல்மழு ‡உழையு மமர்ந்த பாணியர் கஞ்சமாதின்
கனமுலை பருகி வளர்ந்த காமனை
 முனிபவர் கயிலை அமர்ந்த காரணர்
 கதிர்விரி மணிபொ னிறைந்த தோளினர் கண்டகாள
விரிவென வயிர முகந்த வேலென
 மிகவிரு குழையு மடர்ந்து வேளினை
 அனையவ ருயிரை விழுங்கி மேலும்வெ குண்டுநாடும்
வினைவிழி மகளிர் தனங்கள் மார்புற
 விதமிகு கலவி பொருந்தி மேனியு
 மெழில்கெட நினைவு மழிந்து மாய்வதொ ழிந்திடாதோ

---

*கேசன் - கேசவன். † அருணர் - சூரியன். ‡ உழை - மான்.

எரிசொரி விழியு மிரண்டு வாளெயி
றிருபிறை சயில மிரண்டு தோள்முகி
லெனவரு மசுரர்சி ரங்கள் மேருவி டிந்துவீழ்வ
தெனவிழ முதுகு பிளந்து காளிக
ளிடுபலி எனவு நடந்து தாள்தொழ
எதிர்பொரு துதிர முகந்த வேகமு கைந்தவேலா
அரிகரி உழுவை அடர்ந்த வாண்மலை
அருணையி லறவு முயர்ந்த கோபுர
மதினுறை குமர அனந்த வேதமொ ழிந்துவாழும்
அறுமுக வடிவை ஒழிந்து வேடர்கள்
அடவியி லரிவை *குயங்கள் தோய்புய
அரியபி ரமபு ரந்த ராதியர் தம்பிரானே. (உகசு)

445. கனைகடல் வயிறு குழம்பி வாய்விட
வடதம னியகி ரிகம்ப மாய்நட
†கணபண பரித கவிந்த காளபு யங்கராஜன்
கயிறென அமர ரனந்த கோடியு
முறைமுறை அமுது கடைந்த நாளொரு
கதியற உலகை விழுங்கு மேகவொ ழுங்குபோல
வினைமத கரிக ளுமெண்டி சாமுக
கிரிகளு முருகி டவண்ட கோளகை
வெடிபட எவரை யும்விஞ்சி மேலிடு நஞ்சுபோல
விடுகுழை அளவு மளந்து காமுக
ருயிர்பலி கவர்வு றுபஞ்ச பாதக
விழிவலை மகளி ரொடன்பு கூர்வதொ ழிந்திடாதோ
முனைபெற வளைய அணைந்த மோகர
நிசிசரர் கடக முறிந்து தூளெழ
முகிலென உருவ மிருண்ட தாருகன் அஞ்சமீன
முழுகிய திமிர தரங்க சாகர
முறையிட இமைய வர்தங்க ளூர்புக
முதுகிரி உருவ முனிந்த சேவக செம்பொன்மேரு

* குயங்கள் - தனங்கள் † கணபணம் - ஆதிசேடன்.

அனையன கனவி தசண்ட கோபுர
அருணையி லுறையு மருந்து ஞெமுலை
அபிநவ வனிதை தருங்கு மாரநெ ருங்குமால்கொண்
டடவியில் வடிவு கரந்து போயொரு
குறமகள் பிறகு திரிந்த காமுக
அரியர பிரம புரந்த ராதியர் தம்பிரானே. (உகஎ)

தனதன தனன தனதன தனன
தனதன தனதன தந்ததான.

446. இடமடு சுறவை முடுகிய மகர
மெறிகட லிடையெழு திங்களாலே
இருவினை மகளிர் மருவிய தெருவி
லெரியென வருசிறு தென்றலாலே
தடநடு வுடைய கடிபடு கொடிய
சரம்விடு தறுகண னங்கனாலே
சரிவளை கழல மயல்கொளு மரிவை
தனிமல ரணையில்ந லங்கலாமோ
வடகுல சயில நெடுவுட லசுரர்
மணிமுடி சிதறவெ றிந்தவேலா
மறமக ளமுத புளகித களப
வளரிள முலைமண ணந்தமார்பா
அடலணி விகட மரகத மயிலி
லழகுட னருணையில் நின்றகோவே
அருமறை *விததி முறைமுறை பகரு
மரியர பிரமர்கள் தம்பிரானே. (உகஅ)

தனதன தனனந் தனதன தன்னந்
தனதன தனனந் தனதான.

447. இரவியு மதியுந் தெரிவுற எழுமம்
புவிதனி லினமொன் றிடுமோதும்
எழில்புதல் வருநின் றழுதுள முருகும்
இடர்கொடு †நடலம் பலகூறக்

*விததி - சமூகம் † நடலம் - துன்பமொழி.

கருகிய உருவங் கொடுகனல் விழிகொண்
டுயிரினை நமனுங் கருதாமுன்
கலைகொடு பலதுன் பமுமக விடநின்
கழலிணை கருதும் படிபாராய்
திருமரு வியதிண் புயனயன் விரியெண்
டிசைகிடு கிடவந் திடுசூரன்
திணிபுய மதுசிந் திடவலை கடலுஞ்
சிடவலி யொடுகன் றிடும்வேலா
அருமறை யவரந் தரமுறை பாவன்
புடையவ *ருயவன் றறமேவும்
அரிவையு மொருபங் கிடமுடை யவர்தங்
கருணையி லுறையும் பெருமாளே. (உகக)

448. விரகொடு வளைசங் கடமது தருவெம்
†பிணிகொடு விழிவெங் கனல்போல
வெறிகொடு சமனின் றுயிர்கொளு நெறியின்
றெனவிதி வழிவந் திடுபோதிற்
கரவட மதுபொங் கிடுமன மொடுமங்
கையருற வினர்கண் புனல்பாயுங்
கலகமும் வருமுன் குலவினை களையுங்
கழல்தொழு மியல்தந் தருள்வாயே
பரவிடு மவர்சிந் தையர்விட முமிழும்
படவர வணைகண் டுயில்‡மாலம்
பழமறை மொழிபங் கயனிமை யவர்தம்
பயமற விடமுண் டெருதேறி
அரவொடு மதியம் பொதிசடை மிசைகங்
கையுமுற அனலங் கையில்மேவ
அரிவையு மொருபங் கிடமுடை யவர்தங்
கருணையில் மருவும் பெருமாளே. (உஉ௦)

* யு-உய்ய. † பிணி-பாசக்கயிறு. ‡மால் அம்பழமறை மொழிபங்கயன்.

தனதன தனனு தனதன தனனு
தனதன தனனு          தனதான.

449. கெஜநடை மடவார் வசமதி லுருகா
கிலெசம துறுபாழ்                    வினையாலே
கெதிபெற நினையா துதிதனை அறியா
கெடுசுக மதிலாழ்                    மதியாலே
தசையது மருவீ வசையுட லுடனே
தரணியில் மிகவே                    உலைவேனோ
சததள மலர்வார் புனைநின கழலார்
தருநிழல் புகவே                    தருவாயே
திசைமுக வனைநீள் சிறையுற விடுவாய்
திருநெடு கருமால்                    மருகோனே
திரிபுர தகனு ரிடமதில் மகிழ்வார்
திரிபுரை அருள்சீர்                    முருகோனே
நிசிசர ருறைமா கிரியிரு பிளவா
நிறைபயில் முடுகா                    விடுவோனே
நிலமிசை புகழார் தலமெனு *மருணு
நெடுமதில் வடசார்                    பெருமாளே.(௨௨௧)

---

தனத்த தானன தத்தன தத்தன
தனத்த தானன தத்தன தத்தன
தனத்த தானன தத்தன தத்தன    தனதான.

450. திருட்டு வாணிப விக்ரம துட்டிகள்
மதத்த ரூபிகள் துர்ச்சன பொட்டிகள்
செகத்து நீலிகள் கெட்டப ரத்தைகள்                    மிகநாணுர்
சிலைக்கு நேர்புரு வப்பெரு நெற்றிகள்
எடுப்பு மார்பிக ளெச்சிலு தட்டிகள்
சிரித்து மாறுடர் சித்தமு ருக்கிகள்                    விழியாலே
வெருட்டி மேல்விழு †பப்பர மட்டைகள்
மிருத்த பாவிகள் வட்டமு கத்தினை
மினுக்கி ஓலைகள் பித்தளை யிற்பணி                    மிகநீருல்

---

* அருணு - அருணை. † பப்பர - பெருத்த.

விளக்கி யேகுழை இட்டபு ரட்டிகள்
தமக்கு மால்கொடு நிறகும ருட்டனை
விடுத்து நானொரு மித்திரு பொற்கழல் பணிவேனோ
தரித்த தோகண தக்கண செக்கண
குகுக்கு கூகுகு குக்குகு குக்குகு
தகுத்த தீதிகு தக்குகு திக்குகு என தாளம்
தடக்கை தாளமு மிட்டியல் மத்தள
மிடக்கை தாளமு மொக்கந டித்தெளி
தரித்த கூளிகள் தத்திமி தித்தென கணபூதம்
அருக்க னொளி யிற்பரவை உற்றிடு
மிரத்ன மாமுடி யைக்கொடு கக்கழ
வடக்கை யாடிநி ணத்தையெ டுத்துண அறவேதான்
அரக்கர் சேனைகள் பட்டுவி ழச்செறி
திருக்கை வேல்தனை விட்டரு ளிப்பொரும்
அருட்கு காவரு ணைப்பதி உற்றருள் பெருமாளே. ()

---

தனத்த தத்தன தான தனதன
தனத்த தத்தன தான தனதன
தனத்த தத்தன தான தனதன தந்ததான.

451. முகத்து லக்கிக *ளாசா ரவிணிகள்
விலைச்சி றுக்கிகள் நேரா அசடிகள்
முழுச்ச மர்த்திகள் காமா விரகிகள் மூந்துருது
மொழிப்ப ரத்தைகள் காசா சையில்முலை
பலர்க்கும் விற்பவர் நான அநுபவ
முயற்று பொட்டிகள் மோகா வலமுறு கின்றமூடர்
செகத்தி லெத்திகள் சார்வாய் †மயலிகள்
திருட்டு மட்டைகள் மாயா சொருபிகள்
சிரித்து ருக்கிகள் ஆகா எனநகை சிந்தைமாயத்
திரட்டொ றிச்சிகள் மாபா விகளப
கடத்த சட்டைகள் மூதே விகளொடு
$ திளைத்த லற்றிரு சீபா தமுமினி என்றுசேர்வேன்

---

*ஆசாரவிணிகள்-ஆசார ஈனிகள், ஒழுக்கவீனமுள்ளவர்கள். †மயலிகள்-மயக்கிகள். $ திளைத்தல் - அழுந்திக்கிடத்தல்.

தொகுத்தொ குத்தொகு தோதோ தொகுதொகு
செகுச்செ குச்செகு சேசே செககண
தொகுத்தொகுத்தொகு தோதோ தொகுதொகுதொங்ததோ

டுடுட்டு டுட்டுடு டூடூ டுடுடுடு
திகுத்த குத்திகு தீதோ எனவொரு
துவக்க நிர்த்தன மாடா உறைபவர் தொண்டர்பேணும்

அகத்தி யப்பனு மால்வே தனுமறம்
வளர்த்த கற்பக மாஞா லியுமகி
ழுவுற்ற நித்தபி ரானே அருணையில் நின்றகோவே

அமர்க்க ளத்தொரு சூரே சனைவிழ
முறித்து முக்கிய வானோர் குடிபுக
அமர்த்தி விட்டசு வாமீ அடியவர் தம்பிரானே. (௨௨௫)

---

தானதன தானதத்த தானதன தானதத்த
தானதன தானதத்த தனதான.

452. *கேதகைய பூமுடித்த மாதர்த‡ம யாலினுற்று
கேவலம தான அற்ப நினைவாலே
கேள்வியதி லாதிருக்கு மூழ்வினையி னுல்மிகுத்த
கேடுபெற வேநினைக்கும் வினையாலே
வேதனையி லேமிகுத்த பாதகனு மாயவத்தில்
மேதினியெ லாமுழற்று மடியேனை
வீடுதவி யாளவெற்றி வேல்கரம தேயெடுத்து
வீறுமயில் மீதிலுற்று வருவாயே
நீதிநெறி யேயழிக்க தாருகனை வேரறுத்து
நீடுபுகழ் தேவ||ரிற்கள் குடியேற
நீடருளி னுல்விடுத்த பாலகும ராசெழித்த
நீலநிற மால்தனக்கு மருகோனே

---

*கேதகையபூ - தாழையின்பூ ‡மயால்-மயக்கம் ||இல்-இருப்பிடம்,

சோதியன லாவுதித்த சோணகிரி மாமலைக்குள்
*சோபைவட கோபுரத்தில் உறைவோனே
சோனைமழை போலெதிர்த்த தானவர்கள் மாளவெற்றி
தோளின்மிசை வேலெடுத்த பெருமாளே. (உஉச)

தானதன தத்த தத்த தானதன தத்த தத்த
தானதன தத்த தத்த தனதான.

453. கோடுசெறி மத்த கக்கை வீசுகரி யைப்ப குத்த
கூறுசெய்த ழித்து ரித்து நடைமாறா
கோளுலவு முப்பு ரத்தை வாளெரிகொ ளுத்தி விட்ட
† கோபநுத லத்த ரத்த குருநாதா
நீடுகன கத்த லத்தை ஊடுருவி மற்ற வெற்பு
நீறெழமி தித்த நித்த மனதாலே
‡நீபமலர் பத்தி மெத்த ஓதுமவர் சித்த மெத்த
நீலமயில் தத்த விட்டு வரவேணும்
ஆடலணி பொற்சி லைக்கை வேடுவர்பு னக்கு றத்தி
ஆரமது மெத்து சித்ர முலைமீதே
ஆதரவு பற்றி மெத்த மாமணிநி றைத்த வெற்றி
ஆறிருதி ருப்புயத்தில் அணைவீரா
தேடிமைமெயார் புத்தி மெத்த நீடுறநி னைத்த பத்தி
சீருறவு ளத்தெ ரித்த சிவவேளே
தேறருணை யிற்ற ரித்த சேண்முகடி டத்த டர்த்த
தேவர்சிறை வெட்டி விட்ட பெருமாளே. (உஉ௫)

தனத்தா தனத்தத் தனத்தா தனத்தத்
தனத்தா தனத்தத் தனதான.

454. §அருக்கார் நலத்தைத் திரிப்பார் மனத்துக்
கடுத்தா சைபற்றித் தளராதே
அடற்கா லனுக்குக் ‖கடைக்கால் மிதித்திட்
டறப்பே தகப்பட் டழியாதே

* சோபை-அழகு ஒளி. †கோபநுதல்-கோபங்குறித்த ‡நீபமலர்பத்தி-நீபமலர்சூடுபத்தி §அருக்கு-அருமை ‖கடைக்கால்மிதித்திட்டு-அடிமைப்பட்டு.

*கருக்கா ரார்நட்பைப் பெருக்கா சரித்துக்
கலிச்சா கரத்திற் பிறவாதே

கருத்தா லெனக்குத் திருத்தா ளளித்துக்
கலைப்போ தகத்தைப் புகல்வாயே

ஒருக்கால் நினைத்திட் †டிருக்கால் மிகுத்திட்
டுரைப்பார் கள்சித்தத் துறைவோனே

உரத்தோ ளிடத்திற் குறத்தே னைவைத்திட்
டொளித்தோ டும்வெற்றிக் குமரேசா

செருக்கா தருக்கிச் ‡சுரர்க்கூர் நெருக்கச்
செருக்கூர் மரிக்கப் பொரும்வேலா

திறப்பூ தலத்திற் றிறட்§சோ ணவெற்பிற்
றிருக்கோ புரத்திற் பெருமாளே. (௨௨௬)

---

தனனா தனனத் தனனா தனனத்
தனனா தனனத் தனதான.

455. அருமா மதனைப் பிரியா தசரக்
கயலார் நயனக் கொடியார்தம்

அழகார் புளகப் புழுகார் சயிலத்
தணையா வலிகெட் டுடல்தாழ

இருமா நடைபுக் குறைபோ யுணர்வற்
றிளையா உளமுக் குயிர்சோர

எரிவாய் நரகிற் புகுதா தபடிக்
கிருபா தமெனக் கருள்வாயே

ஒருமால் வரையைச் சிறுதூள் படவிட்
டுரமோ டெறிபொற் கதிர்வேலா

||உறைமா னடவிக் குறமா மகளுக்
குருகா திருபொற் புயவீரா

---

*கருக்காரர்-பிறவிக்குரியவர். †இருக்கால்-இரண்டுதிருவடிகளையும். ‡சுரர்க்கூர் நெருக்கு-சுரர்களாகிய தெய்வத் தன்மையோரை ஒடுக்கிய. §சோணவெற்பு-திருவண்ணாமலை. ||உறைமான்-மான் உறை.

திருமால் கமலப் பிரமா விழியிற்
றெரியா அரனுக் கரியோனே
செழுநீர் வயல்சூற் றருணை புரியிற்
றிருவீ தியினிற் பெருமாளே. (உஉஎ)

தனதனா தானனத் தனதனா தானனத்
தனதனா தானனத் தனதான.

456. அழுதுமா வாவெனத் தொழுதுமூ டேநெக்
கவசமா யாதரக் கடலூடுற்
றமைவில்கோ லாகலச் சமயமா பாதகர்க்
கறிவொணா மோனமுத் திரைநாடிப்
பிழைபடா ஞானமெய்ப் பொருள்பெறா தேவினைப்
பெரிய*வா தேசபுற் புதமாய
பிறவிவா ராகரச் சுழியிலே போய்விழப்
பெறுவதோ நானினிப் புகல்வாயே
பழையபா கீரதிப் படுகைமேல் வாழ்வெனப்
படியு†மா றாயினத் ‡தனசாரம்
பருகுமா றானனற் சிறுவசோ ணாசலப்
பரமமா யூரவித் தகவேளே
பொழுதுசூழ் போதுவெற் பிடிபடா பார்முதற்
பொடிபடா ஓடமுத் தெறிமீனப்
§புணரிகோ கோவெனச் சுருதிகோ கோவெனப்
பொருதவே லாயுதப் பெருமாளே. (உஉஅ)

தானதனத் தானதனத் தானதனத் தானதனத்
தானதனத் தானதனத் தனதான.

457. ஆனைவரிக் கோடிளநிர்ப் பாரமுலைச் சாரசைபட்
டாடைமறைத் தாடுமலர்க் குழலார்கள்
ஆரவடத் தோடலையப் பேசிநகைத் தாசைபொருட்
டாரையுமெத் தாகமயக் கிடுமோகர்

*ஆதேசம் - தாங்கப்படுவது. † ஆறுஆய் - (கார்த்திகை மாதர்களாகிய) ஆறு தாய்மார். ‡தனசாரம் - முலைப்பால். § புணரி - கடல்.

சோனமழைப் பாரவிழித் தோகைமயிற் சாதியர்கைத்
தூதுவிடுத் தேபொருளைப் பறிமாதர்

தோதகமுற் றேழ்நரகிற் சேருமழுற் காயனையுட்
சோதியொளிப் பாதமளித் தருள்வாயே

தானதனத் தீதிமிலைப் பேரிகைகொட் டாசமரிற்
சாயகடற் சூரைவதைத் திடுவோனே

தாளவியற் சோதிநிறக் காலினெழுக் கோலியெடுத்
தாபரம்வைத் தாடுபவர்க் கொருசேயே

தேனிரசக் கோவையிதழ்ப் பூவைகுறப் பாவைதனத்
தேயுருகிச் சேருமணிக் கதிர்வேலா

சீருணைக் கோபுரமுற் றுனவினத் தேமருவு
தேவமகட் கோர்கருணைப் பெருமாளே. (௨௨௯)

தனனத் தனனதன தனனத் தனனதன
தனனத் தனனதன தனதான.

458. இடருக் கிடாகிய கொடுமைக் கணைமேல்வரு
மிறுதிச் சிறுகால்வரு மதனாலே

இயலைத் தருகானக *முயலைத் தருமேனியி
லெரியைத் தருமாமதி நிலவாலே

தொடரக் கொடுவாதையி லடையக் கரைமேலலை
தொலையத் தலைவீசிய கடலாலே

துணையற் றணிபூமல ரணையிற் றனியேனுயிர்
துவளத் தகுமோதுயர் தொலையாதோ

வடபொற் குலமேருவின் முடுகிப் பொருசூரனை
மடியச் சுடவேவிய வடிவேலா

மறவக் குலமாமொரு குறமெய்த் திருமாமகள்
மகிழப் புனமேவிய மயில்வீரா

*முயலைத்தருமேனி - முயற்களங்கத்தைக்காட்டும் வடிவம்.

அடரப் படர்*கேதகை மடலிற் றழைசேர்வய
லருணைத் திருவீதியி லுறைவோனே
அவனித் திருமாதொடு சிவனுக் கிமையாவிழி
அமரர்க் கரசாகிய பெருமாளே. (௨௩௦)

---

தனதானன தான தனத்தந் தனதான.

459. †இமராஜனி லாவ தெரிக்குங் கனலாலே
இளவாடையு மூரு மொறுக்கும் படியாலே
சமராடிய மார னெடுக்குங் கணையாலே
தனிமானுயிர் சோரு மதற்கொன் றருள்வாயே
குமராமுரு காச டிலத்தன் குருநாதா
குறமாமக ளாசை தணிக்குந் திருமார்பா
அமராவதி வாழ்வ மரர்க்கன் றருள்வோனே
அருணாபுரி வீதி யினிற்கும் பெருமாளே. (௨௩௧)

---

தனதனதனதன தனதானதத்த தனதானதந்த
தனதனதனதன தனதானதத்த தனதானதந்த
தனதனதனதன தனதானதத்த தனதானதந்த
தனதனத் தனதான

460. இரவசுரதமுலை களுமார்புகுத்த நுதல்வேர்வரும்ப
அமுதநிலையில்விர லுகிரேகைதைக்க மணிபோல் விளங்க
‡இசலியிசலி§புப ரிதலீலையுற்று இடைநூல் நுடங்க
உளமகிழ்ச் சியிளூடே
இருவருடலுமொரு உருவாய்நயக்க முகமேலழுந்த
அளகமவிழவளை களுமேகலிக்க நயனுரவிந்த
லகரிபெருகவத ரமுமேயருத்தி முறையேயருந்த
உரையெழுப் பரிவாலே
புருவநிமிர விரு||கணவாளிமைக்க உபசாரமிஞ்ச
அவசகவசமள வியலேதரிக்க அநிலேயனந்த
புதுமைவிளையவநு பாமாபரிக்க இணைதோளுமொன்றி
அதிசுகக் கலையாலே

---

* கேதகை - தாழை, † இமராஜன் - சந்திரன். ‡ இசலி - வாதாடி.
§ புபரிதலீலை - மதனநூல்முறை. || கணவாள் - வாள்போன்ற கண்கள்.

புளகமுதிரவிர கமென்வாரிதத்த வரைநாண்மழுங்க
மனமுமனமுமுரு கியெயா தரிக்க வுயிர்போலுகந்து
பொருளதளவுமரு வுறுமாயவித்தை விலைமாதர்சிங்கி
விடவருட் புரிவாயே

பரவுமகரமுக ரமுமேவலுற்ற சகாரம்விளைந்த
தமரதிமிரபிர பலமோகாந்த சலாசிகொண்ட
படியையுமுழுதுமொரு நொடியேமதித்து வலமாகவந்து
சிவனிடத் தமர்சேயே

பழநிமிசையிலிசை இசையோகத்தில் திருவாவினன்கு
டியினில்பிரமபுர மதில்வாழ்திருத்த ணிகையூடுமண்டர்
பதியமுதியகதி அதுநாயெனுக்கு முறவாகிநின்று
கவிதைபைப் புனைவோனே

அரியுமயனுமம ரருமாயசிட்ட பரிபாலனன்ப
ரடையுமிடரைமுடு கியெதூறதுட்ட கொலைகாரரென்ற
அசுரர்படையையடை யவும்வேரறுத்த அபிராமசெந்தில்
உரகவெற் புடையோனே

அருணகிரணகரு ணையபூரணச்ச ரணமேலெழுந்த
இரணகரணமுரா ணுறுசூரனுட்க மயிலேறுகந்த
அருணையிறையவர்பெ ரியகோபுரத்தில் வடபாலமர்ந்த
அறுமுகப் பெருமாளே. (௨௯௨)

---

தனதனனத் தனதான தனதனனத் தனதான.

461. இரவுபகற் பலகாலும் இயலிசைமுத் தமிழ்கூறத்
திரமதனைத் தெளிவாகத் திருவருளைத் தருவாயே
பரகருணைப் பெருவாழ்வே பரசிவதத் துவஞானா
அரனருள்சற் புதல்வோனே அருணகிரிப் பெருமாளே.

---

தனன தனனா தனன தனனா
தனன தனனா தனதானா.

462. இருவர் மயலோ அமளி விதமோ
எனென செயலோ அணுகாத
இருடி அயன்மா லமர ரடியா
ரிசையு மொலிதான் இவைகேளா

தொருவ னடியே னலறு மொழிதா
ஞெருவர் பரிவாய் மொழிவாரோ
உனது பததூள் புவன கிரிதா
னுனது கிருபா கரமேதோ
பரமகுருவா யணுவி லசைவாய்
பவன முதலா கியபூத
படையு முடையாய் சகல வடிவாய்
பழைய வடிவா கியவேலா
அரியு மயனோ டபய மெனவே
அயிலை அலைமேல் விடுவோனே
அடுமை கொடுநோய் பொடிகள் படவே
அருண கிரிவாழ் பெருமாளே. (உ௩௩)

தனதன தந்த தனதன தந்த
தனதன தந்த தனதான.

463. இருவினை மங்க மலவகை மங்க
இருள்பிணி மங்க மயிலேறி
இனவரு ளன்பு மொழியக டம்பு
வினதக முங்கொ டளிபாடக்
கரிமுக னெம்பி முருகனெ னண்டர்
களிமலர் சிந்த அடியேன்முன்
கருணைபொ ழிந்து முகமும லர்ந்து
கடுகிந டங்கொ டருள்வாயே
திரிபுர மங்க மதனுடல் மங்க
திகழ்நகை கொண்ட விடையேறி
சிவவெளி அங்க ணருள்குடி கொண்டு
திகழுந டஞ்செய் தெமையீனும்
அரசியி டங்கொள் மழுவுடை எந்தை
அமலன்ம கிழ்ந்த குருநாதா
அருணைவி லங்கல் மகிழ்குற மங்கை
அமளிந லங்கொள் பெருமாளே. (உ௩௪)

தனதன தாந்த தந்த தனதன தாந்த தந்த
தனதன தாந்த தந்த தனதான.

464. இருவினை யூன்ப சும்பை கருவினி லூன்கு டம்பை
இடரடை பாழ்ம்பொ தும்ப கிதவாரி

இடைதிரி சோங்கு கந்த மதுவது தேங்கு கும்ப
மிரவிடை தூங்கு கின்ற பிணநோவுக்

குருவியல் பாண்ட மஞ்சு மருவிய கூண்டு நெஞ்சொ
டுயிர்குடி போங்கு ரம்பை அழியாதென்

றுலகுட னேன்று கொண்ட கருமபி ராந்தொ ழிந்து
னுபயப தாம்பு யங்கள் அடைவேனோ

அருணையி லோங்கு துங்க சிகரக ராம்பு யங்கள்
அமரர்கு ழாங்கு விந்து தொழவாழும்

அடியவர் பாங்க பண்டு புகலகி லாண்ட முண்ட
அபிநவ சார்ங்க கண்டன் மருகோனே

கருணைமு கேந்த்ர அன்ப ருடனுர கேந்த்ரர் கண்ட
கடவுள்ந டேந்த்ரர் மைந்த வரைசாடும்

கலபக கேந்த்ர தந்த்ர அரசநி சேந்த்ர கந்த
காகுலி சேந்த்ரர் தங்கள் பெருமாளே. (௨௩௫)

---

தனதனன தனதனன தான தத்த தந்த
தனதனன தனதனன தான தத்த தந்த
தனதனன தனதனன தான தத்த தந்த தனதான.

465. இருளளக மவிழமதி போத முத்த ரும்ப
இலகுகயல் புரளவிரு பார பொற்றனங்கள்
இளகவிடை துவளவளை பூச லிட்டி ரங்க எவராலும்

எழுதரிய கலைநெகிழ ஆசை மெத்த உந்தி
இனியசுழி மடுவினிடை மூழ்கி நட்பொ டந்த
இதழமுது பருகியுயிர் தேக மொத்தி ருந்து முனிவாறி

முருகுகமழ் மலர்மளி மீதி னிற்பு குந்து
முகவனச மலர்குவிய மோக முற்ற ழிந்து
மொழிபதற வசமளிய ஆசையிற்க விழ்ந்து விடுபோதும்

முழுதுணர உடையமுது மாதவத்து யர்ந்த
பழுதில்மறை பயிலுவவெ ளாத ரித்து நின்று
முநிவர்சுரர்தொழுதுருகு பாதபத்ம மென்று மறவேனே

*ஒருசிறுவன் மணமதுசெய் போதி லெய்த்து வந்து
கிழவடிவு கொடுமுடுகி வாச லிற்பு குந்து
உலகறிய இவனடிமை யாமெனக்கொ ணர்ந்து சபையூடே

ஒருபழைய சருகுமடி $ஆவ ணத்தை அன்று
உரமொடவ னதுவலிய வேகி ழிக்க நின்று
உதறிமுறைஇடுபழைய வேத வித்தர் தந்த சிறியோனே

அரியவுடு பதிகடவி ஆட கச்சி லம்பொ
டழகுவட மணிமுடிவி யாள மிட்ட ழுந்த
அமரரொடு பலர்முடுகி ஆழி யைக்க டந்து அமுதாக

அருளுமரி திருமருக †வாரணத்தை அன்று
அறிவினுட னொருகொடியி லேத ரித்து கந்த
அருணகிரி நகரிலெழு கோபு ரத்த மர்ந்த பெருமாளே.

தனன தனதன தன்ன தனதன
தனன தனதன தனதான.

466. இறுகு மணிமுலை மருவு தாளமு
மெரியு முமிழ்மதி நிலவாலே

இரவி யெனதுயிர் கவர வருகுழ
லிசையி லுறுகடல் அலையாலே

தறுகண் ரதிபதி மதனன் விடுகொடு
‡சரமி லெளியெனும் அழியாதே

தருண மணிபொழி லருணை நகருறை
§சயில மிசையினில் வரவேணும்

*ஒருசிறுவன் - சுந்தரமூர்த்தி சுவாமிகள். $ ஆவணம் - உரிமைப்பத்திரம் † வாரணம் - கோழி. ‡ சரமில் - சரத்தில். § சயிலம் - மலை

முறுகு திரிபுர மறுகு கனலெழ
முறுவ லுடையவர் குருநாதா
முடிய கொடுமுடி அசுரர் பொடிபட
முடுகு மாகத மயில்வீரா
குறவர் மடமகள் அமிர்த கனதன
குவடு படுமொரு திருமார்பா
கொடிய சுடரயில் தனையு மெழுகடல்
குறுக விடவல பெருமாளே. (௨௬௭)

---

தனதனன தத்த தனதனன தத்த
தனதனன தத்த தனதான.

467. உலையிலன லொத்த உடலினனல் பற்றி
உடுபதியை முட்டி அமுதூற
உருகிவர விட்ட பரமசுக முற்று
உனதடியை நத்தி நினையாமல்
சிலைநுதலி விட்ட திலதமவிர் பொட்டு
திகழ்முகவர் முத்த நகையாலே
சிலுகுவலை இட்ட மயல்கவலை பட்டு
திருடனென வெட்கி அலைவேனோ
கலைகனக வட்ட திமிலைபறை கொட்ட
கனகமயில் விட்ட கதிர்வேலா
கருதலரின் முட்டி கருகிவரு துட்ட
கதவமண ருற்ற குலகாலா
அலைகடலு டுத்த தலமதனில் வெற்றி
அருணைவளர் வெற்பில் உறைவோனே
அசுரர்களை வெட்டி அமரர்சிறை விட்டு
அரசுநிலை இட்ட பெருமாளே. (௨௬௮)

தனதனன தனந்த தானன தந்ததான.

468. கடல்பரவு தரங்க மீதெழு திங்களாலே
கருதிமிக மடந்தை மார்சொல்வ தந்தியாலே
வடவனலை முனிந்து வீசிய தென்றலாலே
வயலருணை யில்வஞ்சி போதந லங்கலாமோ
இடமுமையை மணந்த நாதரி றைஞ்சும்வீரா
எழுகிரிகள் பிளந்து வீழவெ றிந்தவேலா
அடலசுரர் கலங்கி யோடமு னிந்தகோவே
அரிபிரம புரந்த ராதியர் தம்பிரானே (௨௩௯)

---

தனதனனத் தனதனனத் தனதனனத் தனதனனத்
தனதனனத் தனதனனத் தனதான.

469. கமலமுகப் பிறைநுதல்பொற் சிலையெனவச் சிரகணைநற்
கயலெனபொற் சுழலும்விழிக் குழல்கார்போல்
கதிர் *தரளொப் பிய †தசனக் கமுகுகளப் புயகழைபொற்
கரகமலத் துகிர்விரலிற் கிளிசேரும்
குமரிதனத் திதலைமலைக் கிகலியிணைக் கலசமெனக்
குவிமுலைசற் றசையமணிக் கலனுடக்
கொடியிடைபட் டுடைநடைபொற் சரணமயிற் கெமனமெனக்
குணகிபொருட் ‡பறிபவருக் குறவாமோ
திமிலையுடுக் குடன்முரசுப் பறைதிமிதித் திமிதிமெனட்
டிமிடிமிடிட் டிகுர்திமிதித் தொலிதாளம்
செககணசெக் கணகதறத் திடுதிடெனக் கொடிமுடியெட்
டிகைசிலைபட் டுவரிபடச் சிலை§கோலித்
‖துமிலவுடற் றசுரர்முடிப் பொடிபடரத் தமுள்பெருகத்
தொகுதசைதொட் டலகையுணத் தொடும்வேலா
¶துவனிதினைப் புனமருவிக் குறமகளைக் கலவுமயற்
சுகமொடணைத் தருணகிரிப் பெருமாளே. (௨௪௦)

---

* தரளொப்பிய - தாளம் ஒத்த. † தசனம் - பல். ‡ பறிபவர் - பறிப்பவர். § கோலி - வளைத்து ‖ துமில - பேரொலியிட. ¶ துவனி-தொனி.

தனதனத் தத்தத் தனத்தத் தனதன
தனதனத் தத்தத் தனத்தத் தனதன
தனதனத் தத்தத் தனத்தத் தனதன தனதான.

470. கமலமொட் டைக்கட் டழித்துக் குமிழியை
நிலைகுலைத் துப்பொற் குடத்தைத் தமனிய
கலசவர்க் கத்தைத் தகர்த்துக் குலையற இளநீரைக்

கறுவிவட் டைப்பிற் றுரத்திப் பொருதப
சயம்விளைத் திச்செப் படித்துக் குலவிய
கரிமருப் பைப்புக் கொடித்துத் திறல்மதன் *அபிஷேகம்

அமலர்நெற் றிக்கட் டழற்குட் பொடிசெய்து
அதிகசக் ரப்புட் பறக்கக் கொடுமையி
னடல்படைத் தச்சப் படுத்திச் சபதமொ டிருதாளம்

அறைதல்கற் பித்துப் பொருப்பைப் பரவிய
சிறகறுப் பித்துக் கதிர்த்துப் புடைபடு
மபிநவச் சித்ரத் தனத்துக் கிருடிகள் உறவாமோ

தமரமிக் குத்திக் கதிர்க்கப் பலபறை
டொகுடொகுக் குத்தொத் தொகுக்குத் தொகுதொகு
திரிகிடத் தத்தத் தரிக்கத் தரிகிட எனவோதிச்

†சவடுறப் பக்கப் பழூரத்திப் புகைஎழ
விழிகளுட் செக்கச் சிவத்துக் குறளிகள்
தசைகள்பட் சித்துக் களிக்கக் கழுதொடு கழுகாட

அமலையுற் றுக்கொக் கரித்துப் படுகள
அசுரரத் தத்திற் குளித்துத் திமியென
அடிநடித் திட்டிட் டிடித்துப் பொருதிடு மயிலோனே

அழகுமிக் கச்சித் ரபச்சைப் புரவியி
னுலவுமெய்ப் ப்ரத்ய க்ஷநற்சற் குருபர
அருணையிற் சித்தித் தெனக்குத் தெளிவருள் பெருமானே

அபிஷேகம் கிரீடம். † சவடு உற பக்க பழு ஒத்தி பக்கத்துப்பழு வெலும்புகள் நெரிய முடக்கிய கைகளை ஒத்தித் துணங்கைக் கூத்தாடி.

தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதான.

471. கரிமுகக் கடகளிற் றதிககற் பகமதக்
கஜமுகத் தவுணனைக் கடியானை
கடலையெட் பயறுநற் கதலியிற் கனிபலக்
கனிவயிற் றினிலடக் கியவேழம்
அரிமுகத் தினனெதிர்த் திடுகளத் தினின்மிகுத்
தமர்புரிக் கணபதிக் கிளையோனே
அயிலெடுத் தசுரர்வெற் பலைவுறப் பொருதுவெற்
றியைமிகுத் தறுமுகக் குமரேசா
நரிமிகக் கிளைகளைப் பரியெனக் *கடிவளத்
தொடுபிடித் தெதிர்நடத் திடுமீசன்
நடனமிப் படியிடத் தினுமிசைத் தரையினிற்
கரியுரித் தணிபவற் கொருசேயே
†துரிபெறச் சரிபொழிற் கனவயற் கழகுளத்
‡துரியமெய்த் தரளமொய்த் திட §வீறிச்
சுரர்துதித் திடமிகுத் தியல்தழைத் தருணையிற்
சுடரயிற் சரவணப் பெருமாளே. (௨௪௨)

---

தனன தந்தனந் தனதன தனதன
தனன தந்தனந் தனதன தனதன
தனன தந்தனந் தனதன தனதன தனதான.

472. கருநி றஞ்சிறந் தகல்வன புகல்வன
மதன தந்திரங் கடியன கொடியன
கனக குண்டலம் பொருவன வருவன ||பரிதாவும்
கடலு டன்படர்ந் தடர்வன தொடர்வன
வினையு நஞ்சினைத் தெளிர்வன ¶பிளிர்வன
கனையை நின்றுநின் றெதிர்வன முதிர்வன இளையோர்முன்

*கடிவளம்-கடிவாளம். †துரி-(காய்கனிகளின் ஆகிய) சுமை. ‡துரிய மெய்த்தரளம் - தூய்மையான முத்துக்கள். §வீறி-அதிகரித்து. ||பரி-வடவாமுகாக்கினி. ¶பிளிர்வன கொப்புளிப்பன.

*செருவை விண்டகஞ் சிறுவன உறுவன
களவு வஞ்சகஞ் சுழல்வன உழல்வன
தெனன தெந்தனந் தெனதென தெனதென எனநாதம்
தெரிசு ரும்பைவென் றிடுவன அடுவன
மருள்செய் கண்கள்கொண் டணைவர்த முயிரது
திருகு கின்றமங் கையர்வச மழிதலை ஒழிவேனோ
மருவு தண்டைகிண் கிணிபரி புரமிவை
கலக லென்கலின் கலினென இருசரண்
மலர்கள் நொந்துநொந் தடியிட வடிவமு மிகவேறாய்
வலிய சிங்கமுங் கரடியு முழுவையு
முறைசெ ழும்புனந் தினைவிளை இதண்மிசை
மறவர் தங்கள்பெண் கொடிதனை ஒருதிரு வுளநாடி
அருகு சென்றடைந் தவள்சிறு பதயுக
சதத ளம்பணிந் ததிவித கலவியு
ளறம ருண்டுநெஞ் சவளுடன் மகிழ்வுற அணைவோனே
அமரர் சங்கமுங் குடிபுக நொடியினில்
நிருதர் சங்கமும் பொடிபட அமர்செய்து
அருணை வந்துதென் றிசைதனி லுறைதரு பெருமாளே.

---

தானான தான தானான தான
தானான தான தனந்ததான.

473. காணாத தூரம் நீணாக வாரி
காதார வார மதன்பினாலே
காலாளும் வேளும் ஆலால நாதர்
காலால் நிலாவு †முனிந்து ‡பூமேல்
நானான தோகை நூலாடை சோர
நாடோர்க ளேச அழிந்துதானே
நானாப வாத மேலாக ஆகம்
நாடோறும் வாடி மயங்கலாமோ

---

* செருவை விண்டு அகம் சிறுவன - போர் முயன்று அகங் கொண்டு சீறுவன. †முனிந்து-முனிய; எச்சத்திரிபு. ‡பூமேல்-பூமியின்மீது.

சோணாச லேச பூணா ரீடு
தோளா றுமாறும் விளங்குநாதா
தோலாத வீர வேலால டாத
சூராளன் மாள வெகுண்டகோவே
சேணாடர் லோகம் வாழ்மாதி யானை
தீராத காதல் சிறந்தமார்பா
தேவாதி கூடு மூவாதி மூவர்
தேவாதி தேவர் கடம்பிரானே. (௨௪௪)

---

தானா தத்தன தானா தத்தன
தந்த தனந்தன தான தந்தன
தானா தத்தன தானா தத்தன
தந்த தனந்தன தான தந்தன
தானா தத்தன தானா தத்தன
தந்த தனந்தன தான தந்தன தந்ததான.

474. காரா டக்குழ லாலா லக்கணை
கண்கள் சுழன்றிட வேமு கங்களி
லாலா பச்சிலை யாலே *மெற்புசி
மஞ்சள் கலந்தணி வாளி கொந்தள
காதா டக்கடன் மேலா டக்குடி
இன்ப ரசங்குட மார்ப ளிங்கொளி கொங்கைமாதர்
காசா சைச்செய லாலே சொக்கிடு
விஞ்சையர் கொஞ்சிடு வாரி ளங்குயில்
போலே நற்றெரு ஊடா டி †துயல்
தொங்கல் நெகிழ்ந்திடை பேது வண்டிட
கால்தா விச்சதி யோடே சித்திர
மென்ப நடம்புரி வாரு டன்செயல் மிஞ்சலாகிச்
சீரா டிச்சில நாள்போய் மெய்த்திரை
வந்து கலந்துயி ரோட வங்கமொ

---

* மெற்புசி-மேலேபூசி. † துயல்-அசைகின்ற.

டோ டிப்பல நோயோ டுத்தடி
கொண்டு குரங்கென வேந டந்துசெல்
சீயோ டிக்கிடை பாயோ டுக்கிய
டங்கி அழிந்துயி ரோடு ஊஞ்சொளி யுங்கண்மாறிச்

சோர மற்*பொறி கேளா மற்செவி
துன்பமொ டின்பமு மேம றந்துபின்
ஊரார் சுற்றமு மாதோர் மக்களு
மண்டியு மண்டையு டேகு விந்திது
சீசீ சிச்சிசி போகா நற்சனி
யன்கட வென்றிட வேகி டந்துடல் மங்குவேனோ

மாரோன் முப்புர நீறு யுற்றிட
அங்கி உமிழ்ந்திடு வோரி யம்புலி
தோல்சீ யத்தொடெ †ஏகா சர்ச்சடை
கங்கை இளம்பிறை யாா ணிந்தவர்
மாடே றிக்கட லாலா லத்தையு
முண்டவ ரெந்தை‡சி வானு பங்குறை என்றன்மாதா

மாலோ னுக்கிளை யாள்மா பத்தினி
அம்பிகை சங்கரி மோக சுந்தரி
§வேதா மக்கலை ரூபாள் முக்கணி
ரம்பிய கொங்கையி னுள்ப யந்தருள்
மாஞா னக்கும ராதோ கைப்பரி
யின்பத வண்குரு வே||யெ னஞ்சுரர் தொண்டுபாடச்

சூரார் மக்கிட மாமே ருக்கிட
அங்கட லெண்கிரி யோடி பங்கொடு
¶தீபே ழுற்றிட பாதா ளத்துறை
நஞ்சர வின்$பண மாயி ரங்கெட

---

*பொறி-அறிவு †ஏகாசம்-போர்வை, ஏகாசர்-போர்வையை உடையவர். ‡சிவ அனுபங்கு உறை - சிவபெருமானோடு கூட (அவர் திருமேனியில்) பாதியாக உறையும். § வேதாம-வேதாகம. || எனஞ்சுரர் - என் அம்சுரர். ¶ தீபு ஏழ் - எழு தீவு $ பணம் - படமெடுத்தாடுஞ்சிரம்.

சூழ்வா ளக்கிரி தூளா கிப்பொடி
விண்கணி றைந்திட வேக டம்புரி கின்றவேலா
சோர்வே தத்தலை மேலா டிச்சுக
பங்கய செங்கர போட கம்பெற
வாகா னக்குற மாதோ டற்புத
* மங்குல ணங்குட னேம கிழ்ந்துநல்
† தூணே டிச்சுட ராகா சத்தைய
ணைந்துவி ளங்கரு ணைச லந்திகழ் தம்பிரானே. (௨௪௫)

தானதன தந்ததன தானதன தந்ததன
தானதன தந்ததன தந்த தனதான.

475. காருமரு வும்பெருகு சோலைமரு வுங்கொடிய
‡ காகளம டங்கவுமு ழங்கு மதனாலே
காலடர வம்பமளி மேலடர வந்துபொரு
காமன்விடு விஞ்சுகணை அஞ்சு மலராலே
ஊருமுல கும்பழைய பேருகம்வி ளைந்ததென
வோரிரவு வந்தெலாது சிந்தை அழியாதே
ஊடியிரு கொங்கைமிசை கூடிவரி வண்டினமு
லாவியக டம்பமலர் தந்த ருளுவாயே
ஆருமா வும்பிறைபு நீருமணி யுஞ்சடைய
ராதிபர வும்படிநி னைந்த குருநாதா
ஆறுமுக முங்குரவு மேறுமயி லுங்குறவி
யானுமுா முந்திருவும் அன்பு முடையோனே
மேருமலை யும்பெரிய சூருமலை யுங்கரிய
வேலையலை யும்பகையும் அஞ்ச விடும்வேலா
மேதினியி றைஞ்சுமரு ணைபுரிவி ளங்குதிரு
வீதியிலெ ழுந்தருளி நின்ற பெருமாளே. (௨௪௬)

மங்குல் அணங்கு - விண்ணுலகப் பெண், தெய்வானை † தூண்-சிவமாகிய அக்கினிஸ்தம்பம். காகளம்-குயிலினது எக்காளவோசை.

தானன தானதத்த தனதான
தானன தானதத்த தனதான.

476. ஈதவி நோதமெச்சு குரலாலே
ஈறுமை யார்முடித்த குழலாலே
நீதியி லாதழித்து முழலாதே
நீமயி லேறியுற்று வரவேணும்
சூதமர் சூரருட்க வருசூரா
சோணகி ரீயிலுற்ற குமரேசா
ஆதியர் காதொருச்சொ லருள்வோனே
ஆனைமு கார்களிட்ட பெருமாளே. (௨௪௭)

---

தனதனன தானதானன தனதனன தானதானன
தனதனன தானதானன தனதான.

477. குழவியுமாய் மோகமோகித குமரனுமாய் வீடுகாதலி
குலவனுமாய் நாடுகாடொடு தடுமாறிக்
குணிலொடுகூ னீடுமாகிய கிழவனுமா யாவிபோய்விட
விறகுடனே தூளியாவதும் † அறியாதாய்
பழையசடா தாரமேனிகழ் கழியுடல்காணா ‡ நிராதர
பரிவிலிவா § னலைநாடொறு மடைமாறிப்
பலபலவாம் யோகசாதக உடல்கொடுமா யாதபோதக
பதியழியா வீடுபோயினி அடைவேனோ
எழுகடல்தீ மூளமேருவு மிடிபடவே தாவும்வேதமு
மிரவியும் || வாய் பாறியோடிட முதுசேடன்
இருளறுபா தாளலோகமு மிமையமுநீ ளுகவாள்கிரி
இருபிளவாய் வீழமாதிர மலைசாய

குணில்-தடி. † அறியா தாய்-அறிந்து தாவி. ‡நிராதர பரிவு இலிவான், நிராதரமாகிய துன்பமில்லாததான ஆகாயத்தில் §நாலை மடைமாறி-கழிந்துபோகும் நாலங்குலப்பிரமாண வாயுவைக்கழியாமல் திருப்பி ||வாய்பாறி-இடம் பெயர்ந்து; பாறுதல்-அடியோடு பெயர்ந்து வீழுதல்.

அழகியமா பாகசா தன னமரருமூர் பூதமா றுசெய்
அவுணர் தமா சேனை தூளெழ விளையாடி
அமரினைமே வாதசூரரை அமர்செயும்வே லாயுதாவுயர்
அருணையில்வாழ் வாகமேவிய பெருமாளே. (௨௪௮)

தானன தனதான தனதான.

478. கோடான மடவார்கள் முலைமீதே
கூர்வேலை இணையான விழியூடே
ஊடாடி யவரோடும் உழலாதே
ஓர்போது திகழ்பாதம் அருள்வாயே
நீடாழி சுழல்தேசம் வலமாக
நீடோடி மயில்மீது வருவோனே
சூடான தொருசோதி மலைமேவு
சோணாடு புகழ்தேவர் பெருமாளே. (௨௪௯)

தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன தனதான.

479. சிலைநுதல் வைத்துச் சிறந்த குங்கும
திலதமு மிட்டுக் குளிர்ந்த பங்கய
திருமுக வட்டத் தமர்ந்த மென்குமிழ் தனிலேறிச்
செழுமணி ரத்னத் திலங்கு பைங்குழை
தனைமுனி வுற்றுச் சிவந்து நஞ்சணி
†செயலினை ஒத்துத் தயங்கு வஞ்சக விழிசீறிப்
புலவிமி குத்திட் டிருந்த வஞ்சியர்
பதமல ருக்குட் பணிந்த ணிந்தணி
புரிவளை கைக்குட் கலின்க லென்றிட அநுராகம்
புகழ்நல மெத்தப் புரிந்து கொங்கையி
லுருகிய ணைத்துப் பெரும்ப்ரி யங்கொடு
புணரினும் நிற்பொற் பதங்கள் நெஞ்சினுள் மறவேனே

அமரினை மேவாத-அமைதியைப் பெறாத. † செயலினை-வித்தை.

கலைமதி வைத்துப் புனைந்து செஞ்சடை
மலைமகள் புக்கத் தமர்ந்தி ருந்திட
கணகண கட்கட் கணின்க ணென்றிட நடமாடும்

கருணைய னுற்றத் ரியம்ப கன்தரு
முருகபு னத்திற் றிரிந்த மென்கொடி
கனதன வெற்பிற் கலந்த ணைந்தருள் புயவீரா

அலைகடல் புக்குப் பொரும்பெ ரும்படை
அவுணரை வெட்டிக் களைந்து வென்றுயர்
அமரர்தொ ழப்பொற் சதங்கை கொஞ்சிட வருவோனே

அடியவ ரச்சத் தழுங்கி டுந்துயர்
தனையொழி வித்துப் ரியங்கள் தந்திடும்
அருணகி ரிக்குட் சிறந்தமர்ந்தருள் பெருமாளே. (௨௫௦)

---

தனன தனன தனன தனன
தனன தனன தனதான.

1. சிவமா துடனே அனுபோ கமதாய்
சிவஞா னமுதே பசியாறி

திகழ்வோ டிருவோ ரொருரூ பமதாய்
திசைலோ கமெலாம் அனுபோகி

இவனே எனமா லயனோ டமரோ
ரிளையோ னெனவே மறையோத

இறையோ னிடமாய் விளையா டுகவே
யியல்வே லுடன்*மா அருள்வாயே

†தவலோ கமெலா முறையோ எனவே
தழல்வேல் கொடுபோ யசுராரைத்

தலைதூள் படவேழ் கடல்தூள் படமா
தவம்வாழ் வுறவே விடுவோனே

---

* மா - (மயிலாகிய) குதிரை, † தவ-மிக,

கவர்பூ வடிவாழ் குறமா துடன்மால்
கடனு மெனவே அணைமார்பா

கடையேன் மிடிதூள் படநோய் விடவே
*கனல்மால் வரைசேர் பெருமாளே. (உ௱க)

தனதனன தனதனன தந்தனந் தந்தனந்
தனதனன தனதனன தந்தனந் தந்தனந்
தனதனன தனதனன தந்தனந் தந்தனந் தந்ததான.

481. சினமுடுவல் நரிகழுகு டன்பருந் தின்கணங்
கொடிகெருடன் அலகைபுழு வுண்டுகண் டின்புறுஞ்
செடமனறு மலசலமொ டென்புதுன் றுங்கலந் துன்புமேவு

சென்னவலை மாணவலை ரண்டுமுன் பின்தொடர்ந்
தணுகுமுடல் வினைகவடி விங்கடைந் தம்பரஞ்
சிறுமணலை அளவிடினு மங்குயர்ந் திங்குலந்தொன் றுநாயேன்

கனகபுவி நிழல்மருவி அன்புறுந் தொண்டர்பங்
குறுகவினி அருள்கிருபை வந்து†தந் தென்றுமுன்
கடனெனது உடலுயிரு முன்பரந் தொண்டுகொண் டன்பரோடே

கலவிநல மருவிவடி வஞ்சிறந் துன்பதம்
புணர்கரண மயில்புறமொ டின்புகொண் டண்டருங்
கனகமலர் பொழியவுன தன்புகந் தின்றுமுன் சிந்தியாதே

தனனதன தனனதன நந்தனந் தந்தனம்
தகுகுகுகு குகுகுகுகு டங்குடங் குந்தடந்
தவில்முரசு பறைதிமிலை டிங்குடிங் குந்தடந் தண்டர்பேரி

தடுடுடுடு டுடுடுடுடு டுண்டுடுண் டுண்டுடுண்
டிமிடிமிட டகுர்திகுகு சங்கவெண் கொம்புதிண்
கடையுகமொ டொலியகட லஞ்சவஞ் சன்குலஞ் சிந்திமாளச்

சினமுடுகி அயிலருளி யுப்பரந் தம்பரந்
திகையுரகர் புவியுளது மந்தரம் பங்கயன்
செகமுழுது மகிழவரி அம்புயன் தொண்டுகொண் டஞ்சல்பாடத்

*கனல்மால் வரை - திருவண்ணாமலை, †முடுவல் - நாய், ‡ தந்து - தர.

திருமூறுவ லருளியுய ரெந்தையின் பங்குறுங்
கவுரிமன முருகவொரு கங்கைகண் டன்புறுந்
திருவருண கிரிமருவு சங்கரன் கும்பிடுந் தம்பிரானே. (௨௫௨)

---

தத்த தத்ததன தத்த தத்ததன
தத்த தத்ததன தத்த தத்ததன
தத்த தத்ததன தத்த தத்ததன தந்ததான.

482. சுக்கி லச்*சுரொணி தத்தி லுற்றுநளி
னத்தி லப்புவென ரத்த முற்றிசுக
சுக்கி லக்குளிகை யொத்து கெர்ப்பகுகை வந்துகோல

தொப்பை யிட்டவயி றிற்பெ ருத்துமிக
வட்ட மிட்டுடல வெப்ப முற்றுமதி
சொற்ற பத்தின்மதி யக்ஷ ரத்தினிடை விஞ்சையாலே

கக்க நற்புவியி லுற்ற ரற்றிமுலை
யைக்கொ டுக்கவமிர் தைப்பு சித்து†வளர்
கைக்க சத்தியொடு மைத்து தத்துநடை அந்தமேவி

கற்று வெற்றறிவு பெற்று பச்சைமயி
லொத்த மக்கள்மய லிற்கு ளித்துநெறி
கட்டி யிப்படிபி றப்பி லுற்றுடல மங்குவேனோ

தெற்க ரக்கர்பவி ஷைக்கு லைத்து ‡விட
ணற்கு நத்தரச ளித்து முத்திகொடு
சித்தி ரத்திருவு ரத்த சக்கிரம கிழ்ந்தவேளே

செக்க ரத்தின்மலை முப்பு ரத்தெரி
யிட்ட §சத்திசிவ னுற்று நத்தமிகு
சித்த ஜெத்தையும்வி ழித்த சத்தியுமை தந்தபாலா

தர்க்க மிட்டசுர ரைக்கெ லித்துமலை
யுக்கெ ழுக்கடல்கொ ளுத்தி அட்டதிசை
தட்ட முட்டையடை யக்கொ டிப்புகையின் மண்டும்வேலா

---

*சுரொணி-சுரோணி; குறுக்கல்விகாரம். †வளர்கைக்கு அசத்தி யொடு எனப்பிரிக்க ‡விடணற்கு-விபீஷணற்கு §சத்தி - வன்மை.

தத்தை வித்ருமநி றத்தி முத்தணிகு
றத்தி கற்பகவ னத்தி சித்தமவை
சக்கு நத்தஅரு ணைக்கி ரிக்குள்மகிழ் தம்பிரானே. (௨௫௫)

---

தந்தத் தந்தத் தனதன தானன
தந்தத் தந்தத் தனதன தானன
தந்தத் தந்தத் தனதன தானன தனதான.

483. செஞ்சொற் பண்பெற் றிடுகுட மாமலை
கும்பத் தந்திக் குவடென வாலிய
தெந்தப் பந்தித் தாளம தாமென விடாவி
சிந்திக் கந்தித் திடுகளை யாமுன
தங்கத் தம்பொற் பெதுவென வோதுவ
* திண்டுப் புந்தித் திடுகனி தானுமு னிதழாமோ
மஞ்சொக் குங்கொத் தளகமெ னுமிடை
கஞ்சத் தின்புற் றிடுநிரு வேயிள
வஞ்சிக் கொப்பொப் பெனுமயி லேயென முறையேய
வந்தித் திந்தப் படிமட வாரொடு
கொஞ்சிக் கெஞ்சித் தினமவர் தாடொழு
மந்தப் புத்திக் ‡ கசடென நாளுன தடிசேர்வேன்
நஞ்சைக் கண்டத் திடுபவ ராரொடு
திங்கட் பிஞ்சக் கரவணி வேணியர்
நம்பர்ச் செப்பொற் பெயரசு ரேசனை யுகிராலே
நந்தக் கொந்திச் சொரிகுடல் சோர்வா
$ நந்திக் கம்பத் தெழுநர கேசரி
நஞ்சக் குண்டைக் கொருவழி யேதென மிகநாடி
வெஞ்சச் ¶ சிம்புட் சொருபம தானவர்
பங்கிற் பெண்கற் புடையபெ ணாயகி
விந்தைச் செங்கைப் பொலிசுத வேடுவர் புனமீதே

---

* திண்டுப் புந்தித்திடுகனி தானும் - திண்துப்பும் தித்தித்திடு கனிதானும், துப்பு-பவளம். ‡ கசடனெநான் - கசடன் × என் + நான். $ நந்தி-தோன்றி. ¶ சிம்புட் சொருபம்-சிங்கத்தினும் வலிய சரபப்பக்ஷிரூபம்.

வெண்டித் தங்கித் திரிகிழ வாஅதி
துங்கத் துங்கக் கிரி அருணைபுரி
வெங்கட் சிங்கத் தடிமயி லேறிய பெருமாளே. (௨௩௪)

---

தனதன தந்தனந் தானதத்த தந்த
தனதன தந்தனந் தானதத்த தந்த
தனதன தந்தனந் தானதத்த தந்த தனதனத் தனதான.

484. தமரகு ரங்களுங் காரிருட்பி ழம்பு
மெழுகிய அங்கமும் பார்வையிற்கொ ளுந்து
தழலுமிழ் கண்களுங் காளமொத்த கொம்பும் உளகதக்கடமாமேல்

தனிவரு மந்தகன் பாசம்விட்டெ றிந்து
அடவரு மென்றுசிந் தாகுலத்தி ருந்து
தமரழ மைந்தருஞ் சோகமுற்றி ரங்க மரணபக் குவமாநாள்

கமலமு கங்களுங் கோமளத்தி லங்கு
நகையுநெ டுங்கணுங் காதினுற்று லங்கு
கனகுதம் பையுந் தோடும்வஜ்ர-அங்க தழுமடற் சுடர்வேலும்

கடிதுல கெங்கணுந் † தாடியிட்டு வந்த
மயிலுமி லங்கலங் காமபொற்ச தங்கை
ழலொலி தண்டையங் காலுமொக்க வந்து வரமெனக் கருள்கூராய்

இமகிரி வந்தபொன் பாவைபச்சை வஞ்சி
அகிலத லம்பெறும் பூவைசத்தி யம்பை
இளமுலை யின்செழும் பால்குடித்தி லங்கு மியல்சிமிர்த் திடுவோனே

இறைவரி றைஞ்சநின் றுகமப்ர சங்க
முறைசெய்தி டுப்ரசண் டாவிசித்து நின்ற
ரணமுக துங்கவெஞ் சூருடற்பி ளந்த அயிலுடைக் கதிர்வேலா

அமணர டங்கலுங் கூடலிற்றி ரண்டு
கழுவிலு தைந்துதைந் தேறவிட்டு நின்ற
அபிநவ துங்ககங் காநதிக்கு மைந்த அடியவர்க் கெளியோனே

---

வெண்டி - வேண்டி: ‡ தாடி - தாவடி, பிரயாணம்.

அமரர்வ ணங்குகந் தாகுறத்தி கொங்கை
தனில்முழு குங்கடம் பாமிகுத்த செஞ்சொ
லருணைநெ டுந்தடங் கோபுரத்த மர்ந்த அறுமுகப் பெருமாளே.

---

தனனாதன தனனாதன தாந்தன தாந்தனனம்
தனனாதன தனனாதன தாந்தன தாந்தனனம்
தனனாதன தனனாதன தாந்தன தாந்தனனம் தனதான.

485. தமிழோதிய குயிலோமயி லாண்டலை யாம்புறவங்
கிளிகாடையி *னணிலோளி யாங்குரல் வாய்ந்ததிசெந்
தகுமாமிட றொலியாரித ழாஞ்சுளை தேன்கனியின் சுவைசேருந்

தனபாரமு மலையாமென வோங்கிட மாம் †பொறிசிந்
திடவேல்விழி நுதலோசிலை வான்பிறை மான்தளிரின்
‡ சரிரார்குழ லிருளார்நகை யோங்கிய வான்கதிரின் சுடர்பாய

குமிழ்நாசியின் முகமோமதி யாங்குளிர் சேங்கமலஞ்
சரிதோடிணை செவியா § டுச லாங்கள பூங்கமுகங்
கொடிநூலிடையுடையாரன மாம்ப்ரியர் மாண்புரியின் கொடிமாதர்

குணமோடம ளியினூடனு மோங்கிய பூங்கமலஞ்
சரணூபுர குரலோசையு மேந்திடு மாண்டலையின்
கொடியோடெழுதரிதாம்வடிவோங்கியபாங்கையுமன் தகையேனே

திமிதோதிமி திமிதோதிமி தாங்கண தீங்கெணதொந்
தகுதோதகு தகுதோதகு டாங்குட திங்கடதொந்
திகுடோடிமி டிமிடோடிமி டாங்குட டந்தகமென் றியல்பேரி

திசைமூடுக கடலேழ்பொடி யாம்படி யோங்கியவெங்
கரிதேர்பரி யசுரார்கள மாண்டிட நீண்டரவின்
சிரமீள்படகுவடோதுகள் வான்பெற வாங்கியவன் கதிர்வேலா

கமழ்மா || விதழ் சடையாடி யேன்துயர் தீர்ந்திடவெண்
தழல்¶மாபொடியருள்வோரடல் மான்துடி தாங்கியவண்
கார் $மாடருளுமையாளமையின் றவளின் றருள்மென் குரவோனே

---

*அணில்-அன்றில் †பொறிசிந்திட-தேமல் சிதறிட. ‡சரிரார் குழல் சரிர ஆர்குழல் §உசலாம்-ஊசலாம் ||இதழ்-இதழி, கொன்றை ¶மாபொடி திருநீறு. $ மாடு - பக்கம்.

கடையேனிரு வினைநோய்மல மாண்டிட தீண்டியவொண்
சுகமோகினி வளிநாயகி பாங்கனெ னும்பகர்மின்
கலைநூலுடைமுருகா *அழ லோங்கியவோங்கலின்கண் பெருமாளே

தனன தனத்தத் தனந்த தனன தனத்தத் தனந்த
தனன தனத்தத் தனந்த தனதான.

486. தலையை மழித்துச் சிவந்த துணியை யரைக்குப் புனைந்து
சடையை வளர்த்துப் புரிந்து புலியாடை
சதிரொ டுவப்பப் புனைந்து விரகொ டுகற்கப் புகுந்து
தவமொ ருசத்தத் தறிந்து திருநீறு
கலையை மிகுத்திட் டணிந்து கான வலைக்குட் புகுந்து
கதறு நிலைக்கைக் கமர்ந்த எழிலோடே
கனக மியற்றித் திருந்து துவளு மெனச்சற் றறிந்து
கவலை யொழித்தற் கிரங்கி யருள்வாயே
அலைக டலிற்கொக் கரிந்து மருவ ரையைப்பொட் டெறிந்து
மமரு லகத்திற் புகுந்து முயரானை
அருளொ டுகைப்பற் றிவந்து மருண கிரிப்புக் கிருந்து
மறிவு ளபத்தர்க் கிரங்கு மிளையோனே
மலையை வளைத்துப் பறந்து மருவு புரத்தைச் சிவந்து
வறிது நகைத்திட் டிருந்த சிவனார்தம்
மதலை புனத்திற் புகுந்து நரவ டிவுற்றுத் திரிந்து
மறமயி லைச்சுற் றிவந்த பெருமாளே. (உ௫ள)

தானன தான தத்த தானன தான தத்த
தானன தான தத்த தனதான.

487. தேதொகு வாச முற்ற கீதவி நோத மெச்சு
தேனளி சூழ மொய்த்த மலராலே
சீறும ராவெ யிற்றி லூறிய காளம் விட்ட
சீதநி லாவெ றிக்கும் அனலாலே

---

அழலோங்கிய வோங்கல் - திருவண்ணாமலை.

போதனை நீதி யற்ற வேதனை வாளி தொட்ட
போர்மத ராஜ னுக்கும் அழியாதே
போகமெ லாநி றைத்து மோகவி டாய்மி குத்த
பூவையை நீய ணைக்க வரவேணும்
மாதினை வேணி வைத்த நாதனு மோது பச்சை
மாயனு மாத ரிக்கு மயில்வீரா
வானவர் சேனை முற்றும் வாழும ராப திக்குள்
வாரண மான தத்தை மணவாளா
மேதினி யோர்த ழைக்க வேயரு ணைச லத்து
வீதியில் மேவி நிற்கு முருகோனே
மேருவை நீறெ ழுப்பி நான்முக னூர்ப தத்தில்
வேலடை யாள மிட்ட பெருமாளே. (௨௩௮)

---

தான தத்த தந்த தான தத்த தந்த
தான தத்த தந்த தனதான.

488. தோத கப்பெ ரும்ப யோத ரத்தி யங்கு
தோகை யர்க்கு நெஞ்சம் அழியாதே
சூலை வெப்ப டர்ந்த வாத பித்த மென்று
சூழ்பிணிக்க ணங்கள் அணுகாதே
பாத கச்ச மன்தன் மேதி யிற்பு குந்து
பாசம் விட்டெ றிந்து பிடியாதே
* பாவ லற்கி ரங்கி நாவ லர்க்கி சைந்த
பாடல் மிக்க செஞ்சொல் தரவேணும்
வேத மிக்க விந்து நாத மெய்க்க டம்ப
வீர பத்ர கந்த முருகோனே
மேரு வைப்பி ளந்து சூரனைக்க டிந்து
வேலை யிற்று ளைந்த கதிர்வேலா

---

* பாவலன் - நக்கீரர்.

கோதை பொற்கு றிஞ்சி மாது கச்ச ணிந்த
கோம ளக்கு ரும்பை புணர்வோனே
கோல முற்றி லங்கு சோண வெற்பு யர்ந்த
கோபு ரத்த மர்ந்த பெருமாளே. (உருகூ)

தானதன தனதத்தந் தனதானா.

489. பாணமல ரதுதைக்கும் படியாலே
பாவியிள மதிகக்குங் கனலாலே
நாணமழி யவுரைக்குங் குயிலாலே
நானுமய விலிளைக்குந் தரமோதான்
சேணிலரி வையணைக்குந் திருமார்பா
தேவர்மகு டமணங்குங் கழல்வீரா
காணஅரு ணையில்நிற்குங் கதிர்வேலா
காலன்முது கைவிரிக்கும் பெருமாளே. (உ௯௰)

தானா தானா தானா தானா தானா தானத் தனதான.

490. பாலாய்நூலாய்தேனாய் *நீளாய் பாகாய்வாய்சொற்கொடியார்தாம்
†பாடா வாடா வேடா வாலே பாடா யீடற் றிடைபீறுந்
தோலா லேகா லாலே யூனா லேசூழ் பாசக் குடில்மாசு
தோயாமாயாவோயாநோயால்சோர்வாய்மாளக் கடவேனோ
ஞாலா மேலா வேதா போதா நாதா ‡சோதிக் கிரியோனே
ஞானாசாராவானாள்கோனே நானாவேதப் பொருளோனே
வேலா பாலா §சீலா காரா வேளே வேடக் கொடிகோவே
வீரா தாரா ஆறா தாரா வீரா வீரப் பெருமாளே. (உ௯௧)

தனதன தனந்த தான தனதன தனந்த தான
தனதன தனந்த தான தனதான.

491. புணர்முலை மடந்தை மாதர் மலையினி னுழன்ற நேக
பொறியுட லிறந்து போன தளவேதான்

*நீள் ஆய் பாகாய்-நீண்டு வருகின்ற ஆய்ந்த பாகாய்: †பாடா ஆடா வேள் தாவாலே-பாடி ஆடி விரும்புகின்றமையினாலே: வேள்-விருப்பம். ‡சோதிக்கிரி -திருஅண்ணாமலை. §சீல ஆகாரா-பரிசுத்த வடிவனே.

புகழ்மறை யறிந்து கூறு மினியென தகப்பொ னுவி
பொருளென நினைந்து நாயென் இடர்தீர
மணமுணர் மடந்தை மாரொ டொளிர்திரு முகங்க ளாறு
மணிமகு டமுங்கொள் பானு வெயிலாசை
வரைபா வனந்த கோடி முநிவர்கள் புகழ்ந்து போத
மயில்மிசை மகிழ்ந்து நாடி வாவேணும்
பணைமுலை யரம்பை மார்கள் குயில்கிளி யினங்கள் போல
பரிவுகொ டுகந்து வேத மதுகூறப்
பறைமுர சலாந்தபேரி முறைமுறை ததும்ப நீசர்
படைகட லிறந்து போக விடும்வேலா
அணிசுக நரம்பு வீணை குயில்புற வினங்கள் போல
அமளியில் களங்கொ ளோசை வளர்மாது
அரிமகள் மணங்கொ டேகி யெனதிட ரெரிந்து போக
அருணையின் விலங்கல் மேவு பெருமாளே (௨௬௨)

---

தனன தான தானன தனன தான தானன
தனன தான தானன தனதான.

492. புலைய னான மாவீனன் வினையி லேகு மாபாவி
பொறையி லாத கோபீகன் முழுமூடன்
புகழி லாத மாமூகன் அறிவிலாத [1]காபோதி
பொறிக ளோடு போய்வீழு மதிசூதன்
நிலையி லாத கோமாளி கொடையி லாத ஊதாரி
நெறியி லாத வேமாளி குலபாதன்
நினது தாளை நாடோறு மனதி லாசை வீடாமல்
நினையு மாறு நீமேவி யருள்வாயே
சிலையில் வாளி தானேவி யெதிரி ராவ ணார்தோள்கள்
சிதையு மாறு போராடி ஒரு சீதை
சிறையி லாம லேகூடி யவனி மீதி லேவீறு
திறல னான மாமாயன் மருகோனே

[1]போதி-கபோதி, குருடன்.

அலைய மேரு மாசூர் பொடிய தாக வேலேவி
அமர நாடி யேதோகை மயிலேறி
அதிக தேவ ரேசூழ உலக மீதி லேகூறும்
அருணை மீதி லேமேவு பெருமாளே. (௨௯௩)

---

தானனத் தத்ததனத் தானனத் தத்தனத்
தானனத் தத்ததனத் தத்த தனதான.

493. போககற் பக்கடவுட் பூருகத் தைப்புயலைப்
பாரியைப் பொற்குவையுச் சிப்பொ ழுதிலீயும்
போதுடைப் புத்திரரைப் போலவொப் பிட்டுலகத்
தோரைமெச் சிப்பிரியப் பட்டு மிடிபோகத்
த்யாகமெத் தத்தருதற் காசுநற் சித்திரவித்
தாரமுட் பட்டதிருட் டுக்க விகள்பாடித்
தேடியிட் டப்படுபொற் பாவையர்க் கிட்டவர்கட்
சேல்வலைப் பட்டடிமைப் பட்டு விடலாமோ
ஆகமப் பத்தருமற் றாரணச் சுத்தருமுற்
றாதரிக் கைக்கருணைத் துப்பு மதில்சூழும்
ஆடகச் சித்ரமணிக் கோபுரத் துத்தரதிக்
காகவெற் றிக்†கலபக் கற்கி யமர்வோனே
தோகையைப் பெற்றஇடப் பாக‡ரொற் றைப்பகழித்
§தூணிமுட் டச்சுவறத் திக்கி லெழுபாரச்
சோதிவெற் பெட்டுமுதிர்த் தூளிதப் பட்டமிழச்
சூரனைப் பட்டுருவத் தொட்ட பெருமாளே. (௨௯௪)

---

தான தனத்தத் தனத்த தத்தன
தான தனத்தத் தனத்த தத்தன
தான தனத்தத் தனத்த தத்தன தனதான.

494. மானை விடத்தைத் தடத்தி னிற்கயல்
மீனை நிரப்பிக் குனித்து விட்டணை
வாளி மைபவட்டச் சமுத்தி ரத்தினை வடிவேலை

---

* போக கற்பக் கடவுட் பூருகம் - இஷ்டபோகத்தையளிக்கும்கற்பகமாகிய தெய்வ விருக்ஷம். † கலபகற்கி - மயிற்குதிரை. ‡ ஒற்றைப்பகழி- திரிபுரசம்மாரத்தில் அம்பாக உற்ற விஷ்ணு § தூணி - அந்த அம்பு தங்கும் கூடாகிய கடல்; விஷ்ணுபாற்கடலில் பள்ளிகொண்டார் என்றபடி.

வாளை *வனத்†துற் பலத்தி னைக்கயல்
மீனை விழிக்கொப் பெனப்பி டித்தவர்
மாய வலைப்பட் டிலைத் ‡துடக்§குழல் மணநாறும்

ஊன விடத்தைச் சடக்கெ னக்கொழு
ஆறு முபத்தக் கருத்த டத்தினை
யூது பிணத்தைக் குணத்ர யத்தொடு தடுமாறும்

ஊச லைசித்தத் த்வமற்ற செத்தையு
பாதி யையொப்பித் துணிப்ப வத்தற
வோகை செலுத்திப் ரமிக்கு மிப்ரமை தெளியாதோ

சான கிகற்புத் தனைச்சு டத்தன
சோக வனத்திற் சிறைப்ப டுத்திய
தானை யரக்கற் குலத்த ரத்தனை வருமானச்

சாலை மரத்துப் புறத்தொ ளித்தடல்
வாலி யுரத்திற் சரத்தை விட்டொரு
தாரை தனைச்சுக் ரிவற்க ளித்தவன் மருகோனே

சோனை மிகுத்துத் திரட்பு னத்தினி
வானை மதத்துக் கிடக்கு மற்புத
சோணகிரிச்சுத் தர்பெற்ற கொற்றவ மணிநீபத்

தோள்கொ டுசக்ரப் பொருப்பி னைப்பொடி
யாகநெ ருக்கிச் செருக்க ளத்தெதிர்
சூரனைவெட்டித் துணித்த டக்கிய பெருமாளே. (உகூ௫)

---

தான தத்ததன தான தத்ததன
தான தத்ததன தான தத்ததன
தான தத்ததன தான தத்ததன தனதான.

495. மேக மொத்தகுழ லார்சி லைப்புருவ
வாளி யொத்தவிழி யார்மு கக்கமல
மீசு பொட்டிடமு கார்க ளத்திலணி வடமாட

வனம்-ஜலம். † உற்பலம் குவளைமலர். ‡ துடக்கு-மகளிர் சூதகம்.
§ உழல்-ஊழல், ஊழல் மணம்-துர்நாற்றம்.

மேரு வொத்தமுலை யார்ப ளப்பனென
மார்பு தத்திபுய வார்வ ளைக்கடகம்
வீறி டத்துவளு நூலொ டொத்தஇடை யுடைமாதர்

தோகை பக்ஷிநடை யார்ப தத்திலிடு
நூபு ரக்*குரல்கள் பாட கத்துகில்கள்
சோர நற்றெருவு டேந டித்துமுலை விலைகூறிச்

சூத கச்சரச மோடெ யெத்திவரு
வோரை நத்திவிழி யால்ம ருட்டிமயல்
தாள்†ம ருத்திலுயி ரேப றிப்பவர்கள் உறவாமோ

சேக ணச்செகண தோதி மித்திகுட
டாகு டிட்டமட உகு தத்தொகுர்தி
தீத கத்திமித தோவு டுக்கைமணி முராசோதை

தேச முற்கவர ஆயி ரச்சிரமு
மூளிபட்டுமக மேரு வுக்கவுணர்
தீவு கெட்டுமுறை யோவெ னக்கதற விடும்வேலா

ஆக மத்திபல கார ணத்தியெனை
யீனு சத்திஅரி ஆச னத்திசிவ
ஞாக முற்றசிவ காமி பத்தினியின் முருகோனே

ஆர ணற்குமறை தேடி யிட்டதிரு
மால்ம கட்சிறுமி மோக சித்ரவளி
ஆசை பற்றிஅரு ளாச லத்தின்மகிழ் பெருமாளே. ()

---

தனதன தந்ததத்த தனதன தந்ததத்த
தனதன தந்ததத்த தனதான.

496. மொழியநி றங்கறுத்து மகாவி னங்கலக்கி
முடியவ ளைந்தாற்று கடலாலும்

முதிரவி டம்பரப்பி வடவைமு கந்தழற்குள்
முழுகியெ ழுந்திருக்கு நிலவாலும்

---

*குரல்கள் பாடகத் துகில்கள் சோர எனப்பிரிக்க, ஆகத் துகில்- மார்பு வஸ்திரம் †மருத்தில்-மருந்தினால்.

மழையள கந்தரிக்த கொடியிடை வஞ்சியுற்ற
மயல்தணி யும்படிக்கு நினைவாயே
மரகத துங்கவெற்றி விகடந டங்கொள்சித்ர
மயிலினில் வந்துமுத்தி தரவேணும்
அழகிய மென்குறத்தி புளகித சந்தனத்தி
னமுதத னம்படைத்த திருமார்பா
அமரர்பு ரந்தனக்கு மழகிய செந்திலுக்கு
மருணைவ ளம்பதிக்கு மிறையோனே
எழுபுவ னம்பிழைக்க அசுரர்சி ரந்தெறிக்க
எழுசயி லந்துளைத்த சுடர்வேலா
இரவிக ளந்தரத்தர் அரியர பங்கயத்தர்
இவர்கள்ப யந்தவிர்த்த பெருமாளே. (௨௬௭)

தனதனன தான தத்த தனதனன தான தத்த
தனதனன தான தத்த தனதான.

497. வடவயன லூடு புக்கு முழுகியெழு மாம திக்கு
மதுரமொழி யாழி சைக்கு மிருநாலு
வாதிசைவி டாது சுற்றி யலறுதிரை வாரி திக்கு
மடியவரு வேள்க ணைக்கு மறவாடி
நெடுகனக மேரு வொத்த புளகமுலை *மாத ருக்கு
நிறையுமிகு காத லுற்ற மயல்தீர
நினைவினொடு பீலி வெற்றி மரகதக லாப சித்ர
நிலவுமயி லேறி யுற்று வரவேணும்
மடலவிழு மாலை சுற்று புயமிருப தோடு பத்து
மவுலியற வாளி தொட்ட அரிராமன்
மருகபல வான வர்க்கு மரியசிவ னுர்ப டிக்க
மவுனமறை யோது வித்த குருநாதா

மாதருக்கு-மாது அருக்கு, அருக்கு-அருமை.

இடையரியு லாவு முக்ர அருணகிரி மாந கர்க்கு
னினியகுண கோபு ரத்தில் உறைவோனே
எழுபுவிய ளாவு வெற்பு முடலினொடு நாக மெட்டு
மிடையுருவ வேலை விட்ட பெருமாளே. (௨௬௮)

தனதன தானதன தனதன தானதன
தனதன தானதன தனதான.

498. விடுமத வேள்வாளியின் விசைபெறு *மாலாகல
விழிகொடு வாபோவென உரையாடும்
விரகுட னாருயிர மனமுடை மாபாவிகள்
ம்ருகமத கோலாகல முலைதோய
அடையவு மாசாபர வசமுறு கோமாளியை
அவனியு மாகாசமும் வசைபேசும்
அசடவ னாசாரனை அவலனை ஆபாசனை
அடியவ ரோடாள்வதும் ஒருநாளே
வடகுல கோபாலர்த மொருபதி னாறாயிரம்
வனிதையர் தோள்தோய்தரும் அபிராம
மரகத நாராயணன் மருமக சோணாசல
மகிபச தா காலமும் இளையோனே
$ உடுபதி § சாயாபதி சுரபதி மாயாதுற
உலகுய வாரார்கலி வறிதாக
உயரிய மாநாகமு நிருதரு நீறாய்விழ
ஒருதனி வேலேவிய பெருமாளே. (௨௬௯)

தனன தானன தனன தானன தனன தானனந் தனதான.

499. விதிய தாகவெ பருவ மாதரார் விரகி லேமனந் தடுமாறி
விவர மானதொ ரறிவு மாறியே வினையி லேஅலைந் திடுமுடன்
முதிய மாதமி ழிசையதாகவே மொழிசெய் தேநினைந் திடுமாறு
முறைமை யாகநி னடிகள் மேவவே முனிவு தீரவந் தருள்வாயே

* ஆலாகல - ஆலகால. $ உடுபதி - சந்திரன் § சாயாபதி - சூரியன்.

சதிய தாகிய அசுரர் மாமுடை தரணி மீதுகுஞ் சமாரடி
சகல லோகமும் வலம தாகியே தழைய வேவருங் குமரேசா
அதிக வானவர் கவரி வீசவே அரிய கோபுரந் தனில்மேவி
அருணை மீதினில் மயிலிலேறியே அழகதாய்வரும் பெருமாளே.

---

தந்தத் தனதன தந்தத் தனதன
தந்தத் தனதன தந்தத் தனதன
தனத்த தனதன தனத்த தனதன
தனத்த தனதன தனத்த தனதன தனதான.

500. விந்துப் புளகித இன்புற் றுருகிட
சிந்திக் கருவினி லுண்பச் சிறுதுளி
விரித்த * கமலமெல் தரித்து ளொரு ¶ சுழி
யிரத்த குளிகையொ டுதித்து வளர்மதி
விண்டுற் றருள்பதி கண்டுற் றருள்கொடு
† மிண்டிச் செயலினி ரம்பித் துருவொடு
மெழுக்கி லுருவென வலித்து எழுமதி
கழித்து ‡ வயிறுகு டமொப்ப வொருபதில்
விஞ்சைச் செயல்கொடு கஞ்சச் சலவழி
வந்துப் புவிமிசை பண்டைச் செயல்கொடு
விழுப்பொ டுடல்தலை அழுக்கு மலமொடு
கவிழ்த்து விழுதழு துகுப்ப அனைவரு மருளகூர
மென் § பற் றுருகிமு கந்துட் டனைமுலை
யுண்கத் தரகொடு துங்கிச் சுவைபெற
வளத்தொ டனைமல சலத்தொ § டுழைகிடை
துடித்து தவழ்நடை வளர்த்தி யெனதகு
வெண்டைப் பரிபுர தண்டைச் சரவட
முங்கட் டியல்முடி பண்பித் தியல்கொடு

---

* கமலமெல் - கமலமேல ¶ சுழி - நாதம் † மிண்டி - வலிகொண்டு
‡ வயிறு குடம் ஒப்ப எனப்பிரிக்க § பற்றுருகி - பாசத்தினுலுருகி.
§ உழை கிடை - உழைந்துக்கிடந்து.

விதித்த முறைபடி படித்து மயல்கொள
தெருக்க ளினில்வரு விருப்ப இளமுலை

விந்தைக் கயல்விழி கொண்டற் குழல்மதி
துண்டக் காவலை கொஞ்சுக் குயில்மொழி

விடுப்ப * துதைதகலை நெகிழ்த்தி மயிலென
நடித்த வர்களமயல் $ பிடித்தி டவர்வரு வழியேபோய்

சந்தித் துறவொடு பஞ்சிட் டணைமிசை
கொஞ்சிப் பலபல விஞ்சைச் சரசமொ

டணைத்து மலரிதழ் கடித்து இருகா
மடர்த்த குவிமுலை யழுத்தி § மிடறுறு

சங்குத் தொனியொடு பொங்கக் குழல்மலர்
சிந்தக் கொடியிடை தங்கிச் சுழலிட

சரத்தொ டிகள்வெயி லெறிப்ப மதிநுதல்
வியர்ப்ப பரிபுர மொலிப்ப எழுமத

சம்பத் திதுசெய வின்பத் திருள்கொடு
வம்பிற் பொருள்கள்வ ழங்கிற் றிதுபிணை

சலித்து வெகுதுய ரிலைப்பொ டுடல்பிணி
|| பிடித்தி டனைவரும் நகைப்ப கருமயிர் நரைமேவி

தன்கைத் தடிகொடு குந்திக் ¶ கவியென
உந்திக் கசனம றந்திட் டுளமிக

சலித்து வுடல்சல மிகுத்து மதிசெவி
விழிப்பு மறைபட கிடத்தி மனையவள்

சம்பத் துறைமுறை யண்டைக் கொளுகையில்
சண்டக் கருநம னண்டிக் கொளுகையி

றெடுத்து விசைகொடு பிடித்து வுயிர்தனை
பதைப்ப தனிவழி யடித்து கொடுசெல

சந்தித் தவரவர் பங்குக் கழுதுவி
ரங்கப்பிணமெடு மென்றிட் டறைபறை

---

துதை-நெருங்கிய $ பிடித்திட அவர்வரு எனப்பிரிக்க § மிடறு-கழுத்து || பிடித்திட அனைவரும் எனப்பிரிக்க ¶ கவி-குரங்கு.

தடிப்ப சுடலையி லிறக்கி விறகொடு
கொளுத்தி யொருபிடி பொடிக்கு மிலையெனும் உடலாமோ

திந்தித் திமிதிமி திந்தித் திமிதிமி
திந்தித் திமிதிமி திந்தித் திமிதிமி

திமித்தி திமிதிமி திமித்தி திமிதிமி
திமித்தி திமிதிமி திமித்தி திமிதிமி

என்பத் துடிகள்த வுண்டைக் கிடுபிடி
பம்பைச் சலிகைகள் சங்கப் பறைவளை

திகுர்த்த திகுதிகு டுடுட்டு டுடுடுடு
டிடிக்கு டிகமென வுடுக்கை முரசொடு

செம்பொற் குடமுழ வுந்தப் புடன்மணி
பொங்கச் சுரர்மலர் சிந்தப் பதமிசை

செழித்த மறைநிலர் துதிப்ப முநிவர்கள்
களித்து வகை * பணி முழக்க அசுரர்கள் களமீதே

சிந்திக் குருதிக ளண்டச் சுவரகம்
சம்பக் கிரியொடு பொங்கிப் பெருகியெ

சிவப்ப அதில்கரி மதர்த்த புரவிகள்
சிரத்தொ டிரதமு மிதப்ப நிணமொடு

செம்புட் கழுகுக ளுண்பத் தலைகள்த
தும்பக் கருடன கந்† கொட் டிடகொடி

மறைப்ப நரிகண மிகுப்ப குறளிகள்
நடிக்க இருள்மலை கொளுத்தி யலைகடல்

செம்பொற் பவளமு டங்கிக் கமர்விட
வெந்திட் ‡ டிகமலை விண்டுத் துகள்பட

சுமக்கு முரகனு முழக்கி விடபட
மடைத்த சகமட நடுக்கி யலைபட விடும்வேலா

* பணி - மன்னி, பொருந்தி † கொட்டிட - கோட்டிட - வளைக்க வட்டமிட ‡ இகமலை - இங்குள்ள மலைகள்.

தொந்தத் தொகுகுட என்பக் கழுவொலி
பொங்கப் பரியுர செம்பொற் பதமணி
சுழற்றி நடமிடு நிருத்த ரயன்முடி
கரத்த ரரிகரி உரித்த கடவுள்மெய்
தொண்டர்க் கருள்பவர் வெந்தத் *துகளணி
சங்கைப் பனிமதி கொன்றைச் சடையினர்
தொடுத்த மதனுரு பொடித்த விழியினர்
மிகுத்த புரமதை எரித்த நகையினர்
தும்பைத் தொடையினர் கண்டக் கறையினர்
தொந்திக் கடவுளை தந்திட் டவரிட
சுகத்தி மழுவுழை கரத்தி மரகத
நிறத்தி முயலக பதத்தி அருளிய முருகோனே
துண்டச் சசிநுதல் சம்பைக் கொடியிடை
ரம்பைக் கரசிய †னும்பற் றருமகள்
சுகிப்ப மணவறை களிக்க அணையறு
முகத்தொ டுறமயல் செழித்த நிருபுய
செம்பொற் காகம லம்பத் திருதல
மம்பொற் ‡சசியெழு சந்தப் பலபடை
செறித்த கதிர்முடி கடப்ப மலர்தொடை
சிறப்பொ டொருகுடில் மருத்து வனமகள்
தொந்தப் புணர்செயல் கண்டுற் றடியெனி
டைஞ்சற் பொடிபட முன்புற் றருளயில்
தொடுத்து மிளநகை பரப்பி மயில்மிசை
நடித்து §அழல்கிரி பதிக்குள் மருவிய பெருமாளே. (௩௭௧)

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தனதான.

501. வீறுபுழு கானபனி நீர்கள்மலர் தோயல்விடு
மேருகிரி யானகொடு தனபார

*துகள்-திருநீறு. †உம்பல் தருமகள்-தெய்வயானை யம்மை ‡சசி யெழு-சந்திரனைப்போல் ஒளியெழ § அழல்கிரிபதி-திருவண்ணாமலை.

மீதுபுர ளாபரண சோதிவித மானநகை
மேகமனு காடுகடல் இருள்மேவி
நாறுமலர் வாசமயிர் நூலிடைய தேதுவள
நாணமழி வார்களுடன் உறவாடி
நாடியது வேகநியெ னுசுழலு மோடனைநின்
ஞானசிவ மானபதம் அருள்வாயே
கூறுமடி யார்கள்வினை நீறுபட வேவரிய
கோலமயி லானபதம் அருள்வோனே
கூடவர னோடுநட மாடரிய காளியருள்
கூருசிவ காமியுமை அருள்பாலா
ஆறுமுக மானநதி பாலகுற மாதுதன
மாரவினை யாடிமணம் உறுவோனே
ஆதிரகு ராமசெய மாலின்மரு காபெரிய
ஆதியரு ணாபுரியில் பெருமாளே. (உஎஉ)

---

தனதான தத்ததன தனதான தத்ததன
தனதான தத்ததன தனதான.

502. வலிவாத பித்தமொடு களமாலை விப்புருதி
வறள்சூலை குட்டமொடு குளிர்தாகம்
மலிநீரி ழிச்சல்பெரு வயிறீளை கக்குகனை
வருநீர டைப்பினுடன் வெகுகோடி
சிலைநோய டைத்தவுடல் புவிமீதெ டுத்துழல்கை
தெளியாவெ னக்குமினி முடியாதே
சிவமார்தி ருப்புகழை எனிநாவி னிற்புகழ
சிவஞான சித்திதனை அருள்வாயே
தொலையாத பத்தியுள திருமால்க ளிக்கவொரு
சுடர்வீசு சக்ரமதை அருள்ஞான
துவர்வேணி அப்பன்மிகு சிவகாமி கர்த்தன்மிகு
சுகவாரி சித்தனருள் முருகோனே

அலைசூரன் வெற்புமரி முகனுனை வத்திரனொ
டசுராரி றக்கவிடு மழல்வேலா

அமுதாச னத்திகுற மடவாள் கரிப்பெண்ணொடும்
அருணாச லத்திலுறை பெருமாளே. (௨௪௩)

---

தானதன தானத்த தானதன தானத்த
தானதன தானத்த தனதான.

503\. ஆலுமயில் போலுற்ற தோகையர்க ளேமெத்த
ஆரவட மேலிட்ட முலைமீதே

ஆனதுகி லேயிட்டு வீதிதனி லேநிற்க
ஆமவரை யேசற்று முறையாதே

வேலுமழ கார்கொற்ற நீலமயில் மேலுற்ற
வீறுமுன தார்பத்ம முகமாறு

மேவியிரு பாகத்தும் வாழுமனை மார்தக்க
மேதகவு நாளித்தம் உரையேனோ

நாலுமுக வேதற்கு மாலிலையில் மாலுக்கு
நாடவரி யார்பெற்ற ஒருபாலா

நாணமுடை யாள்வெற்றி வேடர்குல மீதொக்க
நாடுகுயில் பார்மிக்க எழில்மாது

வேலைவிழி வேடச்சி யோடமரர் மாதொக்க
வீறருணை மால்வெற்பில் உறைவோனே

வீரமுட னேயுற்ற சூரனணி மார்பத்து
வேலைமிக வேவிட்ட பெருமாளே. (௨௪௪)

கரிப்பெண் - தெய்வயானையம்மை.

## திருக்குற்றலம்.

**இது தென்காசி ஸ்டேஷனிலிருந்து மேற்கே 3½ மைல் தூலவிலிருக்கிறது.**

---

தானத்தத் தானத ஞதன
தானத்தத் தானத ஞதன
தானத்தத் தானத ஞதன தனதான.

504. ஏடுக்கொத் தாரலர் வார்குழ
லாடப்பட் டாடைநி லாவிய
ஏதப்பொற் றேள்மிசை மூடிய காமாதர்

ஏதத்தைப் பேசப ஞளிகள்
வீசத்துக் காசைகொ டாடிகள்
ஏறிட்டிட் டேணியை வீழ்விடு முழுமாயர்

மாடொக்கக் கூடிய காமுகர்
மூழ்குற்றுக் காயமொ டேவரு
வாயுப்புற் ருலேவி யாதிகள் இவைமேலாய்

மாசுற்றுப் பாசம்வி டாசம
ஞர்புக்குப் பாழ்நர கேவிழு
மாயத்தைச் சீவியு ஞதா வருள்வாயே

தாடுட்டுட் டூடுடு டீடிமி
டூடுட்டுட் டூடுடு டாடமி
தானத்தத் தானத ஞவென வெகுபேரி

தாஞெத்தப் பூதப சாசுகள்
*வாய்விட்டுச் சூரர்கள் சேனைகள்
சாகப்பொற் றேகைவி லேறிய சதுரோனே

கூடற்கச் சாலேசி ராமலே
காவைப்பொற் காழிவெ ணூர்திகழ்
கோடைக்கச் சூர்கரு வூரிலும் உயர்வான

கோதிற் † பத் தாரொடு மாதவ
சீலச்சித் தாதியர் சூழ்தரு
கோலக்குற் ருலமு லாவிய பெருமாளே. (உஎரு)

---

* வாய்விட்டு - வாய்விட † பத்தர் - பத்தர்கள்.

505. வேதத்திற் கேள்வியி லாதது
போதத்திற் காணவொ ணாதது
வீசத்திற் றூரமி லாதது கதியாளர்

விநித்துத் தேடரி தானது
ஆதித்தற் காய வொணாதது
வேகத்துத் தீயில்வெ காதது சுடர்கானம்

வாதத்துக் கேயவி யாதது
காதத்திற் பூவிய லானது
வாசத்திற் பேரொளி யானது மதமூறு

மாயத்திற் காயம தாசல
தீதர்க்குத் தூரம தாகிய
வாழ்வைச்சற் கார தாவினி அருள்வாயே

காதத்திற் காயம தாகும
தீதித்திக் தீதிது தீதென
காதற்பட் டோதியு மேவிடு கதிகாணர்

காணப்பட் டேகொடு னோய்கொடு
வாதைப்பட் டேமதி தீதிக
லாமற்கெட் டேதடு மாறிட அடுவோனே

கோதைப்பித் தாயொரு வேடுவ
ரூபைப்பெற் றேவன வேடுவர்
கூடத்துக் கேகுடி யாய்வரு முருகோனே

கோதிற்பத் தாரொடு மாதவ
சீலச்சித் தாதியர் சூழ்தரு
கோலக்குற் றாலமு லாவிய பெருமாளே. (உஎசு)

---

தத்தான தனத்த தத்தன
தத்தான தனத்த தத்தன
தத்தான தனத்த தத்தன தனதான.

506. முத்தோலை தனைக்கி ழித்தயி
லைப்போரி கலிச்சி வத்துமு
கத்தாம ரையிற்செ ருக்கிடும் விழிமாதர்

முற்றுதி ஙகிப்ப ணைத்தணி
கச்சார மறுத்த நித்தில
முத்தார மழுத்து கிர்க்குறி அதனாலே
வித்தார கவித்தி றத்தினர்
பட்டோலை நிகர்த்தி ணைத்தெழு
வெற்பான தனத்தில் நித்தலும் உழல்வேனோ
மெய்த்தேவர் துதித்தி டத்தரு
பொற்பார்க மலப்ப தத்தினை
மெய்ப்பாக வழுத்தி டக்ருபை புரிவாயே
பத்தான முடித்த லைக்குவ
டிற்றுட அரக்க ருக்கிறை
பட்டாவி விடச்செ யித்தவன் மருகோனே
* பற்பாசன் மிகைச்சி ரத்தைய
றுத்தாத வனைச்சி னத்துறு
பற்போக உடைத்த தற்பரன் மகிழ்வோனே
கொத்தார்க தலிப்ப ழக்குலை
வித்தார வருக்கை யிற்சுளை
கொத்தோடு திரக்கு நித்தெழு கயலாரங்
கொட்டாசு ழியிற்கொ ழித்தெறி
சிற்றாறு தனிற்க ளித்திடு
குற்றால ரிடத்தி லுற்றருள் பெருமாளே. (௨௭௭)

திருமலை.

இது திருக்குற்றாலத்துக்கு வடமேற்கே 12 மைல் தூலவிலிருக்கிறது.

தனதனத் தனனத் தனதானா தனதனத் தனனத் தனதானா.

507. வனசமொத் தபதக் குருநாதா மலைமடப் பிடியுத் தமிபாலா
அனகதத் துவமெய்ப் பொருளானே அடியனுக் குனபொற்கழல்தாராய்
எனதுயிர்க் குயிரொத் தவநீதா இபமுகப் பரமற் கிளையோனே
தினைவனத் தெரிவைக் குரியோனே திருமலைக் குமரப் பெருமாளே. ()

* பற்பாசன் - பத்மாசனன், பிரமன்.

தனதன தானதந்த தனதன தானதந்த
தனதன தானதந்த தனதான.

508. படுகொலை யேமிகுந்து ம்ருகமத பாளிதங்கொள்
பணைமுலை மாதர்தங்கள் மயலாலே
பழியொடு பாவமென்ப தறிவுகொ ளாதுயங்கு
பதகனை யாளவின்று வரவேணும்
*கடுவர வேயுளஞ்சி அடிதொழு தோதுமும்பர்
கவலைகொ ளாதிருண்ட களநாதர்
கயிலையில் மேவுகின்ற பரமத யாளநப்பர்
கருதவொர் வாசகஞ்சொல் குருநாதா
கொடுமுடி மேருவஞ்சி அலரிட வேயொர் செண்டு
கொடுபுடை யாவெகுண்ட கர §மாறா
†குடநிரை வாடல்கண்டு குலகிரி யேவிரித்த
குடையென மேவுகொண்டல் மருகோனே
திடுதிடெ னுமுழங்கும் அருவிக ளேமிகுந்த
திருமலை வாழ்வுகந்த முருகோனே
திறல்மிகு சூரனஞ்ச வடியயி லாலெறிந்து
செயவணி மார்பணிந்த பெருமாளே. (௨௭௯)

---

தனதன தான தான தனதன தான தான
தனதன தான தான தனதான.

509. வரிவிழி பூச லாட இருகுழை யூச லாட
வளர்முலை தாமு மாட வளையாட
மணிவட மாலை ஆட முருகவி ழோதி ஆட
மதுரமு தூறி வீழ அநுராகம்
இருவரு மேக போக மொருவர்த மாக மாக
இதமொடு கூடி மாயை படுபோதும்
இருகர மாறு மாறும் அறுமுக நீப மார்பும்
இருகழல் தானு நானு மறவேனே

*கடு-நஞ்சு. §மாறா-உக்கிரகுமார பாண்டியனே. †குடநிரை-பசுக்கூட்டம்.

திருநட மாடு காளி பயிரவி மோடி சூலி
திரிபுர நீற தாக அனல்மோதுஞ்
சிவைகயி லாச வாசி மலைமகள் நாரி பாரி
திரண்முலை யாயி தாயி அருள்பாலா
குருபர நாத ஞகி அரனொரு காதி லோது
குணநிதி ஆசை நேச முருகோனே
குறமகள் பாச நேச திருமலை வாச ஈச
குலவிய ஞான மோன பெருமாளே. (௨௬௦)

## பழமுதிர்சோலை.

**இது மதுரை ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே 12மைல் தூலைவிலிருக்கிறது.**
**இது குமரக்கடவுளது ஆறுவது படைவீடு.**

தனதன தானதான தனதன தானதான
தனதன தானதான தனதான.

510 இலகிதழ் கோதி *நேதி மதகலை ஆர வார
இளநகை ஆட வாடி மிகவாதுற்
றெதிர்பொரு கோர பார ம்ருகமத கோல கால
இணைமுலை மார்பி லேற மதராஜன்
கலவியி லோடி நீடு வெகுவித தாக போக
காணப்ர தாப பாப மடமாதர்
கலவியின் மூழ்கி யாழு மிழிதொழி லேனு மீது
கருதிய ஞான போதம் அருள்வேனோ
கொலைபுரி காளி சூலி வயிரவி நீலி மோடி
குலிசகு டாரி ஆயி மகமாயி
குமரிவ ராகி மோகி பகவதி ஆதி சோதி
குணவதி †ஆல வூணி அபிராமி
பலிகொள்க பாலி யோகி பரமகல் யாணி லோல
பதிவ்ரதை வேத ஞானி புதல்வோனே
படையொடு சூரன் மாள முடுகிய சூர தீர
பழமுதிர் சோலை மேவு பெருமாளே. (க)

*நேதி-நியாதி. †ஆலவூணி-விஷத்தையுண்டவள்.

தானதன தானதந்த தானதன தானதந்த
தானதன தானதந்த தனதான.

511. சீலமுள தாயர் தந்தை மாதுமனை யான மைந்தர்
சேருபொரு ளாசை நெஞ்சு தடுமாறித்

தீமையுறு மாயை கொண்டு வாழ்வுசத மாமி தென்று
தேடினது போகவென்று தெருவூடே

வாலவய தான கொங்கை மேருநுத லானதிங்கள்
மாதர்மய லோடு சிந்தை மெலியாமல்

வாழுமயில் மீது வந்து தாளிணைகள் தாழு மென்றன்
மாயவினை தீர அன்பு புரிவாயே

சேலவள நாட னங்கள் ஆரவயல் சூழு மிஞ்சி
சேணிலவு தாவு செம்பொன் மணிமேடை

சேருமம ரேசர் தங்கள் ஊரிதென வாழ்வு கந்த
தீரமிகு சூரை வென்ற திறல்வீரா

ஆலவிட மேவு கண்டர் கோலமுட னீடு மன்று
ளாடல்புரி ஈசர் தந்தை களிகூர

ஆனமொழி யேப கர்ந்து சோலைமலை மேவு கந்த
ஆதிமுத லாக வந்த பெருமாளே. (உ)

---

512. வீரமத னூல்வி ளம்பு போகமட மாதர் தங்கள்
வேல்விழியி னுல்மயங்கி நிலமீதே

வீசுகையி னுலி தங்கள் பேசுமவர் வாயி தஞ்சொல்
வேலைசெய்து மால்மி குந்து விரகாகிப்

† பாரவசமான வங்க ணீடுபொருள் போன பின்பு
பாதகனு மாகி நின்று பதையாமல்

பாகம்வர மேவ அன்பு நீபமலர் சூடு கின்ற
பாதமலர் நாடியென்று பணிவேனோ

இஞ்சி - மதில். † பாரவசம் - பரவசம். ‡ பாகம் - பரிகாரம்.

பூரணம தான திங்கள் சூடுமா ணரி டங்கொள்
பூவையரு ளால்வ ளர்ந்த முருகோனே
பூவுலகெ லாம டங்க ஓரடியி னுல ளந்த
‡பூவைவடி வானு கந்த மருகோனே
சூர்கிளை யேத டிந்து பாரமுடி யேய ரிந்து
தூள்கள்பட நீறு கண்ட வடிவேலா
சோலைதனி லேப றந்து லாவுமயி லேறி வந்து
சோலைமலை மேல மர்ந்த பெருமாளே. (௩)

தானதன தந்த தந்த தானதன தந்த தந்த
தானதன தந்த தந்த தனதான.

513. வாரணமு கங்கி ழிந்து வீழவும ரும்ப லர்ந்து
மால்வரைய சைந்த னுங்கன் முடிசாய
வாளகிரி அண்ட ரண்ட கோளமுற நின்றெ ழுந்து
மாதவம றந்து லைந்து நிலைபேறப்
பூரணகு டங்க டிந்து சீதகள பம்பு னைந்து
பூசலைவி ரும்பு கொங்கை மடவார்தம்
போகசய னந்த விர்ந்து னடகப தம்ப ணிந்து
பூசனைசெய் தொண்ட னென்ப தொருநாளே
ஆரணமு ழங்கு கின்ற ஆயிரம டந்த வங்கள்
ஆகுதியி டங்கள் பொங்கு நிறைவீதி
ஆயிரமு கங்கள் கொண்ட நூபுரமி ரங்கு கங்கை
யாரமர வந்த லம்பு துறைசேரத்
தோரணம லங்கு துங்க கோபுரநெ ருங்கு கின்ற
சூழ்மணிபொன் மண்ட பங்கள் ரவிபோலச்
சோதியின்மி குந்த செம்பொன் மாளிகைவி ளங்கு கின்ற
சோலைமலை வந்து கந்த பெருமாளே. (௪)

---

*பூர்ணமதான திங்கள் - என்றும் தேயாது வளராது ஒருதன்மையாயிருக்கும் திங்கள். † பூவை வடிவான்-காயாம்பூ வண்ணனுகிய திருமால்.

தானதன தத்த தானதன தத்த
தானதன தத்த தனதான.

514. வார்குழையை எட்டி வேலினைம ருட்டி
மாயநம னுக்கும் உறவாகி
மாதவம ழித்து லீலைகள் மிகுத்து
மாவடுவை ஒத்த விழிமாதர்
சீருடன ழைத்து வாய்கனிவு வைத்து
தேனிதழ ளித்து மநுபோக
சேர்வைதனை உற்று மோசம்விளை வித்து
சீர்மைகெட வைப்பர் உறவாமோ
வாரினை அறுத்து மேருவை மறித்து
மாகனக மொத்த குடமாகி
வாரவணி வைத்து மாலளித முற்று
மாலைகளு மொய்த்த தனமாது
தோரணி* புயத்தி யோகினி சமர்த்தி
தோகையுமை பெற்ற புதல்வோனே
சூர்கிளை மடித்து வேல்கர மெடுத்து
சோலைமலை உற்ற பெருமாளே. (௫)

---

தான தானதன தத்ததன தத்ததன
தான தானதன தத்ததன தத்ததன
தான தானதன தத்ததன தத்ததன தனதான.

515. ஆசை † நாலுசது ரக்கமல முத்திரெளி
வீசி ஓடியிரு பக்கமொடு றச்செல் $ வளி
ஆவல் கூர‡மண்மு தற்சலச பொற்சபையும் §இந்துவாகு
ஆர ‖ மூணுபதி யிறகொளாநி றுத்திவெளி
யாரு சோதி ¶ நூறு பத்தினுட னெட்டுவித
மூரகி யேழுமள விட்டருண விற்பதியின் விந்துநாத

---

* தோரணி-ஒழுங்கு. தோர்-தோல்எனக்கொண்டு உரைப்பாருமுண்டு.
† நாலு சதுரக் கமலம்-மூலாதாரக் கமலம். $ வளி-சுவாசம். ‡ மண்முதற் சலசம் - சுவாதிஷ்டமான முதல் ஆக்கினை ஈறாக உள்ள ஐவகைக் கமலம்.
§ இந்துவாகு-சந்திரப்பிரபை ‖ மூணுபதி-அக்கினி முதலியமூன்று மண்டலம் ¶ நூறு-நூறு நூறுபத்தினுடன் எட்டு இதழ்-ஆயிரம் இதழுள்ள குருகமலம்.

ஓசை சாலுமொரு சத்தமதி கப்படிக
மோடு கூடியொரு மித் * தமுத சித்தியொடு
மோது வேத ¶சர சத்தியடி உற்றதிரு நந்தியூடே

ஊமை யோனையொளிர் வித்துனது முத்திபெற
†† மூல வாசல்வெளி விட்டுனது ரத்திலொளிர்
யோக பேதவகை எட்டுமிதி லொட்டும்வகை இன்றுதாராய்

வாசி வாணிகனெ னக்குதிரை விற்றுமகிழ்
வாத வூரனடி மைக்கொள்கிரு பைக்கடவுள்
மாழைரூபன்முக ‡‡ மத்திகைவி தத்தருண செங்கையாளி

வாகு பாதியுறை சத்திகவு ரிக்குதலை
வாயின் மாதுதுகிர் பச்சைவடி விச்சிவைபென்
மாசு சேரெழுபி றப்பையும றுத்தவுமை தந்தவாழ்வே

காசி ராமெசுரம் ரத்நகிரி சர்ப்பகிரி
ஆரூர் வேலூர் $ தெவுர் கச்சிமது ரைப்பறியல்
காவை மூதாரு ணக்கிரிதி ருத்தணியல் செந்தில்நாகை

காழி வேளூர்பழ நிக்கிரிகு றுக்கைதிரு
நாவ லூர்திருவெ ணெய்ப்பதியின் மிக்கதிகழ்
காதல் சோலைவளர் வெற்பிலுறை முத்தர்புகழ் தம்பிரானே ()

---

தனதானன தானன தத்தன
தனதானன தானன தத்தன
தனதானன தானன தத்தன தனதான.

516. கருவாகியெ தாயுத ரத்தினி
லுருவாகவெ கால்கையு றுப்பொடு
கனிவாய்விழி நாசியு டற்செவி † நரைமாதர்

கையிலேவிழ வேகிய ணைத்துயி
ரெனவேமிக மீதுது யிற்றிய
கருதாய்முலை ஆரமு தத்தினில் இனிதாகித்

* அமுதசித்தி - மதிமண்டலத்தினின்றும் பெருகிப்பாயும் அமிர்தப் பேறு. ¶ சரசத்தி அடிஉற்ற திருநந்தி - வாசிசத்திக்கு ஆதாரமாக உள்ள ஸ்ரீநந்தி ஒளி †† மூல வாசல் - பிரமரந்திரம் ‡‡ மத்திகை - குதிரைச்சம்மட்டி. $ தெவுர் - தேவூர். † நரைமாதர் - மருத்துவச்சிகள்.

தருதாரமு மாகிய சுற்றமு
நலவாழ்வுநி லாதபொ ருட்பதி
சதமாமிது தானென உற்றுனை நினையாத

சதுராயுன தாளிணை யைத்தொழ
அறியாதநிர் மூடனை நிற்புகழ்
தனையோதிமெய் ஞானமு றச்செய்வ தொருநாளே

செருவாயெதி ராமசு ரத்திரள்
தலைமூளைக ளோடுநி ணத்தசை
திமிர்தாதுள பூதக ணத்தொடு வருபேய்கள்

*திருகாவுன வாயுதி ரத்தினை
பலநாய்நரி யோடுகு டித்திட
சிலகூகைகள் தாமுந டித்திட அடுதீரா

அருமாமறை யோர்கள்து தித்திடு
புசவாரண மாதுத னைத்திக
ழுளிசேர்குழல் மேவுகு றத்தியை அணைவோனே

அழகானபொன் மேடையு யர்த்திடு
முகில்தாவிய சோலைவி யப்புறு
அலையாமலை மேவிய பத்தர்கள் பெருமாளே. (எ)

---

தானதன தான தந்த தனதான.

517. காரணம தாக வந்து புவிமீதே
காலனணு காதி சைந்து கதிகாண

நாரணனும் வேதன் முன்பு தெரியாத
ஞானநட மேபு ரிந்து வருவாயே

ஆரமுத மான †தந்தி மணவாளா
ஆறுமுக மாறி ரண்டு விழியோனே

சூரர்கிளை மாள வென்ற கதிர்வேலா
சோலைமலை மேவி நின்ற பெருமாளே. (அ)

*திருகாவுண - கூத்தாடிப் பலிபதார்த்தமுண்ண. †தந்தி - தெய்வயானை.

தான தத்த தான தன தனதன
தான தத்த தான தன தனதன
தான தத்த தான தன தனதன தனதான.

518\. சீர்சி றக்கு மேனி பசேல் பசேலென
நூபு ரத்தி னோசை கலீர் கலீரென
சேர விட்ட தாள்கள் செவேல் செ(டு)வெலென வருமானார்

சேகரத்தின் *வாலை சிலோர் சிலோர்களு மம்
நூறு லக்ஷ கோடி மயால் மயால்கொ டு
தேடி யொக்க வாடி ஐயோ ஐயோவென மடமாதர்

மார்ப டைத்த கோடு பளீர் பளீரென
†ஏம லித்தெ னவி பகீர் பகீரென
மாம சக்கி லாசை உளோ முளோமென நினைவோடி

வாடை பற்று வேளை அடா அடாவென
நீம யக்க மேது சொலாய் சொலாயென
வாரம் வைத்த பாத மிதோ இதோவெ ன அருள்வாயே

பாரதத்தை மேரு வெளீ வெளீதிகழ்
கோடொ டித்த நாளில் வரை வரைபவர்
§பாணி றக்க ணேசர் குவா குவாகனர் இளையோனே

பாடன் முக்ய மாது தமீழ் தமீழிறை
மாமு நிக்கு காதி லுணர் உணர்விடு
பாச மற்ற வேத குரூ குரூபர குமரேசர்

போர்மி குத்த சூரன் விடோம் விடோமென
நேரொ திர்க்க வேலை படர் படரென
போய றுத்த போது குபீர் குபீரென வெகுசேரி

பூமி $உக்க வீசு குகா குகா திகழ்
சோலை வெற்பின் மேவு தெய்வா தெய்வானை ‡தொள்
பூணி இச்சை ஆறு புயா புயாறுள பெருமா ளே (௯)

---

*வாலை-இளமைப்பருவம் †ஏமலித்து-ஏமாந்து §பாணி றம்-பானு நிறம், சூரியனைப்போல் சிவந்தநிறம் $உக்க-சிந்த ‡தொள்-தோள்.

தானத் தானன தத்தன தத்தன
தானத் தானன தத்தன தத்தன
தானத் தானன தத்தன தத்தன தனதான.

519. பாசத் தால்வலை கட்டிய பொட்டிகள்
நேசித் தாரவர் சித்தம ருட்டிகள்
பாரப் பூதர மொத்தத னத்திகள் மிகவேதான்

பாவத் தால்மெயெ டுத்திடு பட்டிகள்
சீவிக் கோதிமு டித்தள கத்திகள்
பார்வைக் கேமய லைத்தரு துட்டிகள் ஒழியாத

மாசற் றேறிய பித்தளை யிற்பணி
நீறிட் டேயொளி பற்றவி ளக்கிகள்
மார்பிற் காதினி லிட்டபி லுக்கிகள் அதிமோக

வாய்வித் தாரமு ரைக்கும பத்திகள்
நேசித் தாரையு மெத்திய டிப்பவர்
மாயைக் கேமனம் வைத்தத னுட்டினம் அலைவேனோ

தேசிக் கானக முற்றதி னைப்புன
மேவிக் காவல்*க வட்கல்சு ழற்றுவள்
சீதப் பாதகு றப்பெண்ம கிழ்ச்சிகொள் மணவாளா

தேடிப் பாடிய சொற்புல வர்க்கித
மாகத் தூதுசெ லத்தரில் கற்பக
தேவர்க் காதிதி ருப்புக லிப்பதி வருவோனே

ஆசித் தார்மன திற்புகு முத்தம
கூடற் கேவைகை யிற்கரை கட்டிட
ஆளொப் பாயுதிர் பிட்டமு தக்கடி படுவோனே

டாரத் தோடகி லுற்றத ருக்குல
மேகத் தோடொரு மித்தநெ ருக்கிய
ஆதிச் சோலைம லைப்பதி யிற்றிகழ் பெருமாளே. (ய)

*கவட்கல் – கவண்கல்.

தனன தனதன தனத்தத் தாத்த
தனன தனதன தனத்தத் தாத்த
தனன தனதன தனத்தத் தாத்த தனதான.

520. அழகு தவழ் குழல் விரித்துக் காட்டி
விழிகள் கடையிணை புரட்டிக் காட்டி
அணிபொ னணிகுழை புரித்துக் காட்டி அநுராக

அவச இதமொழி படித்துக் காட்டி
அதர மளிதுவர் வெளுப்பைக் காட்டி
அமர்செய் நகநுதி அழுத்திக் காட்டி அணியாரம்

ஒழுகு மிருதன மசைத்துக் காட்டி
எழுத * அரியிடை வளைத்துக் காட்டி
உலவு முடைதனை நெகிழ்த்துக் காட்டி உறவாடி

உருகு மவயவ மொளித்துக் காட்டி
உபய பரிபுர பதத்தைக் காட்டி
உயிரை விலைகொளு மவர்க்குத் தேட்டம் ஒழிவேனோ

முழுகு மருமறை முகத்துப் † பாட்டி
கொழுநர் குடுமியை அறுத்துப் போட்ட
முதல்வ குகைபடு திருப்பொற் கோட்டு முனிநாடா

முடுகு முதலையை வரித்துக் கோட்டி
அடியர் தொழுமக வழைத்துக் கூட்டி
முறைசெய் தமிழினை விரித்துக் கேட்ட முதுநீதர்

பழைய கடதட முகத்துக் கோட்டு
வழுவை உரியணி மறைச்சொற் கூட்டு
பரமர் பகிரதி சடைக்குட் சூட்டு பரமேசர்

பணிய அருள்சிவ மயத்தைக் காட்டு
குமர ‡ குலமலை உயர்த்திக் காட்டு
பரிவொ டணிமயில் நடத்திக் காட்டு பெருமாளே. (கக)

* அரியிடை-அரிய இடை. † பாட்டி - சரசுவதி. ‡ குலமலை-சோலைமலை.

தனதன தத்தத் தத்தன தத்தத்
தனதன தத்தத் தத்தன தத்தத்
தனதன தத்தத் தத்தன தத்தத் தனதான.

521. தலைமயிர் கொக்குக் கொக்கந ரைத்துக்
கலகலெ னப்பற் கட்டது விட்டுத்
தளர்நடை பட்டுத் தத்தடி இட்டுத் தடுமாறித்

தடிகொடு தத்திக் கக்கல்பெ ருத்திட்
டசனமும் விக்கிச் * சத்திபெ டுத்துச்
சளியுமி குத்துப் பித்தமு முற்றிப் பலகாலும்

திலதயி லத்திட் டொக்கவெ ரிக்கத்
திரிபலை சுக்குத் திப்பிலி இட்டுத்
தெளியவ டித்துற் றுய்த்துடல் செத்துட் டுயிர்போமுன்

திகழ்தமிழ் கற்றுச் சொற்கள்ப யிற்றித்
திருவடி யைப்பற் றித்தொழு துற்றுச்
செனனம றுக்கைக் குப்பா முத்திக் கருள்தாராய்

‡ கலணைவி சித்துப் § பக்கரை இட்டுப்
புடவிசெ லுத்திக் ‖ கைக்கொடு வெற்பைக்
கடுகந டத்தித் ¶ திட்டென எட்டிப் பொருசூரன்

கனபடை கெட்டுத் தட்டற விட்டுத்
திரைகட லுக்குட் புக்கிட எற்றிக்
களிமயி லைச்சித் ரத்தில்ந டத்திப் பொருகோவே

¶ குலிசன்ம கட்குத் தப்பியு மற்றக்
குறவர்ம கட்குச் சித்தமும் வைத்துக்
குளிர்தினை மெத்தத் தத்துபு னத்திற் றிரிவோனே

கொடியபொ ருப்பைக் குத்திமு றித்துச்
சமரம்வி ளைத்துத் தற்பர முற்றுக்
குலகிரி யிற்புக் குற்றுறை உக்ரப் பெருமாளே. (௧௨)

---

* சத்தி - வாந்தி. ‡ கலணை - கல்லணை, குதிரைச்சேனம். § பக்கரை - அங்கவடி. ‖ கைக்கொடுவெற்பை - கையையுடையகொடிய மலையையொத்தயானையை. ¶ திட்டென - திடீரென ¶ குலிசன் மகள் - தெய்வயானை.

தனதன தனந்த தான தனதன தனந்த தான
தனதன தனந்த தான தனதான.

522. மலரணை ததும்ப மேக குழல்முடி சரிந்து விழ
மணபரி மளங்கள் வேர்வை அதனூடே
வழிபட இடங்க ளூட பிறைநுதல் புரண்டு மாழ்க
வனகலை நெகிழ்ந்து போக இளநீரின்
முலையிணை ததும்ப நூலின் வகிரிடை சுழன்று வாட
முகமுக மொடொன்று பாயல் அதனூடே
முதுமயல் கலந்து மூழ்கி மகிழ்கினும் அலங்க லாடு
முடிவடி வொடங்கை வேலு மறவேனே
சிலைநுத லிளம்பெண் மோகி சடையள கியெந்தை பாதி
திகழ்மர கதப்பொன் மேனி உமைபாலா
சிறுநகை புரிந்து சூர்கிரிகட லெரிந்து போக
திகிழுயி லெறிந்த ஞான முருகோனே
கொலைமிகை பயின்ற வேடர் மகள்வளி மணந்த தோளா
குணவலர் கடப்ப மாலை அணிமார்பா
கொடிமின லடைந்த சோதி மழகதிர் தவழ்ந்த ஞான
குலகிரி மகிழ்ந்து மேவு பெருமாளே. (௧௩)

---

தானதன தந்த தானதன தந்த
தானதன தந்த தனதான.

523. வாகினைய டர்ந்த வேல்விழியர் தங்கள்
மாயமதொ ழிந்து தெளியேனே
மாமலர்கள் கொண்டு மாலைகள்பு னைந்து
மாபதம ணிந்து பணியேனே
ஆதியொடு மந்த மாகியந லங்கள்
ஆறுமுக மென்று தெரியேனே
ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்ட
தாடுமயி லென்ப தறியேனே

நாதமொடு விந்து வானவுடல் கொண்டு
நானிலம லைந்து திரிவேனே
நாகமணி கின்ற நாதநிலை கண்டு
நாடியதில் நின்று தொழூகேனே
சோதியுணர் கின்ற வாழ்வுசிவ மென்ற
* சோகமது தந்து மெனையாள்வாய்
சூரர்குலம் வென்று வாகையொடு சென்று
சோலைமலை நின்ற பெருமாளே. (௧௬)

---

தானதனத் தானதனத் தானதனத் தானதனத்
தானதனத் தானதனத் தனதான.

524. சோலையடர்த் தாலமிருத் தேயுழையைச் சீறிவிதிர்த்
தூறுசிவப் பேறுவிழிக் கடையாலே
தே†னிரதத் தேமுழுகிப் பாகுநிகர்த் தாரமுதத்
தேறலெனக் கூறுமொழிச் செயலாலே
ஆலிலையைப் போலும்வயிற் றாலளகத் தாலதரத்
தாலிரதத் தாலும்வளைப் பிடுவோர்மேல்
ஆசையினைத் தூரவிடுத் தேபுகழ்வுற் றேப்ரியதற்
றாளிணையைச் சேரவெனக் கருள்வாயே
காலனைமெய்ப் பாதமெடுத் தேயுதையிட் டேமதனைக்
காயவெரித் தேவிதியிற் றலையூடே
காசினியிற் காணவிரப் போன்மதியைச் சூடியெருத்
தேறிவிரித் தூருதிரைக் கடல்மீதில்
ஆலமிடற் றானையிபத் தோலையுடுத் திமமதுற்
‡றாடியிடத் தேயுமைபெற் றருள்வாழ்வே
ஆழியினைச் சூரனைவெற் பேழுயில்கொட் டாவிதுணித்
தாதிதிருச் சோலைமலைப் பெருமாளே. (௧௫)

* சோகம்-(ஸோ + அகம்) அது நான். † இரதம்-இரசம். ‡ ஆடி-சிவபிரான்.

தனனதந்த தத்தான தனனதந்த தத்தான
தனனதந்த தத்தான தனதான.

525. களவுகொண்டு கைக்காசி னளவறிந்து கர்ப்பூர
களபதுங்க வித்தார முலைமீதே
கலவியின்பம் விற்பார்க ளவயவங்க ளைப்பாடு
கவிதெரிந்து கற்பார்கள் சிலர்தாமே
உளநெகிழ்ந் * து சற்றான உரைமறந்து சத்தான
உனையுணர்ந்து கத்தூரி மணநாறும்
உபயபங்க யத்தாளி லபயமென்று னைப்பாடி
உருகிநெஞ்சு கற்றூறு திலிழிவாமோ
அளவில்வன்க விச்சேனை பரவவந்த சுக்ரீவ
அரசுடன்க டற்றாளி எழவேபோய்
அடலிலங்கை சுட்டாடி நிசிசரன்த சக்ரீவ
மறவொரம்பு தொட்டார்த மருகோனே
வளருமந்த ரச்சோலை மலையுகந்த முற்பாலை
வனவர்கொய்பி னைத்தேடி ஒருவேட
வடிவுகொண்டு பித்தாகி உருகிவெந்து முற்கானில்
மறவர்குன்றி னிற்போன பெருமாளே. (கரு)

---

## ஆறு திருப்பதி.

**இது குமாரக்கடவுள் ஆறு படைவீடுகளுக்கும் பொது.**

---

தனதன தனதானன தனதன தனதானன
தனதன தனதானன தனதான.

526. அலைகடல் நிகராகிய விழிகொடு வலைவீசிகள்
† அபகட மகபாவிகள் விரகாலே
அதிவித மதமா ‡ யத நிதமொழி பலகூறிகள்
அசடரொ டுறவாடிகள் அநியாயக்
கலைபகர் விலைமாதர்கள் இளைஞர்கள் குடிகேடிகள்
கருதிடு கொடியாருடன் இனிதாகக்

---

* அசத்து- இல்லாமை † அபகடம்-வஞ்சகம். ‡ அத நித-அத அநீத.



மதுரை பொற்றாமரைக்குளம்.

கனதன முலைமேல்விழு கபடனைநிருமூடனை
கழலிணை பெறவேயினி அருள்வாயே
அலைபுனல் தலைசூடிய பசுபதி மகனாகிய
அறுமுக வடிவேவருள் குருநாதா
அசுரர்கள் குடியேகெட அமரர்கள் பதியேபெற
அதிரிடும் வடிவேல்விடும் அதிசூரா
தலையய னறியாவொரு சிவகுரு பரனேயென
தரணியி லடியார்கண நினைவாகா
*சகலமு முதலாகிய அறுபதி நிலைமேவிய
தடமயில் தனிலேறிய பெருமாளே. (க)

தானதனத் தனதனன தனதான.

527. ஈனமிகுத் துளபிறவி அணுகாதே
யானுமுனக் கடிமையென வகையாக
ஞானவருட் டனையருளி வினைதீர
நாணமகற் றியகருணை புரிவாயே
†தானதவத் தினின்மிகுதி பெறுவோனே
‡சாரதியுத் தமிதுணைவ முருகோனே
ஆனதிருப் பதிகமருள் இளையோனே
ஆறுதிருப் பதியில்வளர் பெருமாளே. (உ)

மதுரை.

இது பாண்டியநாட்டின் தலைநகரம் இந்த ரயில்வே ஜங்ஷனிருக்கிறது.

தனதன தனனத் தந்த தானன
தனதன தனனத் தந்த தானன
தனதன தனனத் தந்த தானன தனதான.

528. அலகில வுணரைக் கொன்ற தோளென
மலைதுளை உருவச் சென்ற வேலென
அழகிய கனகத் தண்டை சூழ்வன புண்டரீக

* சகலமு முதலாகிய அறுபதி-சகல தலங்களுக்கும் முதன்மையாகவுள்ள ஆறுபடைவீடு † தானதவத்தினில்-தன்னைக்குறித்து அன்பர்கள் செய்யும் தானத்திலும் தவத்திலும். ‡ சாரதி உத்தமிதுணைவன்-சரசுவதி துணைவன்.

அடியென முடியிற் கொண்ட கூதள
மெனவன சரியைக் கொண்ட மார்பென
அறுமுக மெனசெக் கென்ப லாமுரு கன்புறுதோ

கலகல கலெனக் கண்டபேரொடு
சிலுகிடு சமயப் பங்க வாதிகள்
கதறிய வெகுசொற் பங்க மாகிய பொங்களாவும்

கலைகளு மொழியப் பஞ்ச பூதமு
மொழியுற மொழியிற் றுஞ்ச ருதன
கரணமு மொழியத் தந்த ஞானமி ருந்தவாறென்

இலகுக டலைகற் கண்டு தேனொடு
மிரதமு றுதினைப் * பிண்டி பாகுடன்
இனிமையி னுகருற் றெம்பி ரானொரு கொம்பினாலே

எழுதென மொழியப் பண்டு பாரதம்
வடகன சிகரச் செம்பொன் மேருவில்
எழுதிய பவளக் குன்று தாதையை அன்றுசூழ

வலம்வரு மளவிற் சண்ட மாருத
விசையினும் விசையுற் றெண்டி சாமுக
மகிதல மடையக் கண்டு மாசுணம் உண்டுலாவு

மரகத கலபச் செம்புள் வாகன
மிசைவரு முருகச் சிம்பு ளேயென
மதுரையில் வழிபட் டும்ப ரார்தொழு தம்பிரானே. (௧)

---

தனனதனந்தன தனனதனந்தன தனனதனந்தன தனதான.

529. பாவுகெடுங்கதி ருலகில்விரும்பிய † பவனிவரும்படி அதனாலே
பகரவளங்களு நிகரவிளங்கிய ‡ இருளைவிடிந்தது நிலவாலே

வரையினிலெங்களு முலவிநிறைந்தது வரிசைதரும்படி அதுபாடி-
வளமொடுசெந்தமி ழுரைசெயவன்பரு மகிழவரங்களும் அருள்வாயே

---

* பிண்டி-மா. † பவனிவரும்படியதனாலே-பவனிவரும்தரத்தையும் ‡ இருளைவிடிந்ததுநிலவாலே-இருளைப்போக்கிஉதயமாகும்சந்திரனையும்சிறப்பித்தது.

அரகரசுந்தர அறுமுகவென்றுனி அடியர்பணிந்திட மகிழ்வோனே
அசலநெடுங்கொடி உமையமைதன்சுத குறமகளிங்கித மணவாளா
கருதருதிண்புய சரவணகுங்கும களபமணிந்திடு மணிமார்பா
தனகமிகும்பதிமதுரைவளம்பதி அதனில்வளர்ந்தருள்பெருமாளே. (உ)

தனத்த தாத்தன தனதன தனதன
தனத்த தாத்தன தனதன தனதன
தனத்த தாத்தன தனதன தனதன தனதனத்தன தான.

530. பழிப்பர் வாழ்த்துவர் சிலசில பெயர்தமை
ஒருத்தர் வாய்ச்சுரு ளொருவர்கை உதவுவர்
பணத்தை நோக்குவர் பிணமது தழுவுவர் அளவளப்பதனாலே
படுக்கை விட்டினு ளவுடத முதவுவர்
அணைப்பர் கார்த்திகை வருதென உறுபொருள்
பறிப்பர் மாத்தையி லொருவிசை வருகென அவரவர்க்குறவாயே
அழைப்ப ராஸ்திகள் கருதுவ ரொருவரை
முடுக்கி ஓட்டுவ ரழிகுடி அரிவையர்
அலட்டி னாற்பிணி எருதென மயலெனு நரகினிற்சுழல்வேனோ
அவத்த மாய்ச்சில படுகுழி தனில்விழும்
விபத்தை நீக்கியு னடியவ ருடனெனை
அமர்த்தி யாட்கொள மனதினி லருள்செய்துகதிதனைத்தருவாயே
தழைத்த சாத்திர மறைபொரு ளறிவுள
குருக்கள் போற்சிவ நெறிதனை அடைவொடு
தகப்ப னார்க்கொரு செவிதனி லுரைசெய்த முருகவித்தகவேளே
சமர்த்தி னாற்புகழ் சனகியை நலிவுசெய்
திருட்டு ராக்கத னுடலது துணிசெய்து
சயித்த யோத்தியில் வருபவ னரிதிரு மருமகப்பரிவோனே
செழித்த வேற்றனை அசுரர்க ளுடலது
பிளக்க ஓச்சிய பிறகம ரர்கள்பதி
செலுத்தி ஈட்டிய சுரபதி மகள்தனை மணமதுற்றிடுவோனே
திறத்தி னாற்பல சமணரை எதிரெதிர்
கழுக்க ளேற்றிய புதுமையை இனிதொடு
திருத்தமாய்ப்புகழ் மதுரையி லுறைதரும் அறுமுகப்பெருமாளே. ()

தான தானதன தத்ததன தத்ததன
தான தானதன தத்ததன தத்ததன
தான தானதன தத்ததன தத்ததன தந்ததான.

531. சீத வாசனைம லர்க்குழல்பி னுக்கிமுக
மாய வேல்விழிபு ரட்டிநகை முத்தமெழ
தேமல் மார்பினிள பொற்கிரிப ளப்பளென தொங்கலாரம்

சேரு மோவியமெ னச்சடமி னுக்கிவெகு
வாசை நேசமும்வி ளைத்துவிடை உற்றவரி
சேலை காவில்விழ விட்டுநடை இட்டுமயி லின்கலாபச்

சாதி யாமெனவெ ருட்டிநட மிட்டுவலை
யான பேர்தமையி ரக்கவகை இட்டுகொடி
தாக நோய்பிணிகொ டுத்திடர்ப டுத்துவர்கள் பங்கினூடே

தாவி மூழ்கிமதி கெட்டவல முற்றவனை
பாவ மானபிற விக்கடலு ழப்பவனை
தாரு லாவுபத பத்தியிலி ருத்துவதும் எந்தநாளோ

வாத வூரனைம திக்தொருகு ருக்களென
ஞான பாதம்வெளி இட்டுநரி யிற்குழுவை
* வாசி யாமெனந டத்துவகை உற்றரசன் அன்புகாண

† மாடை ஆடைதர பற்றிமுன கைத்துவைகை
யாறின் மீதுநட மிட்டுமணெ டுத்துமகிழ்
மாது வாணிதரு பிட்டுநுகர் பித்தனருள் கந்தவேளே

வேத லோகர்பொனி லத்தர்தவ சித்தாதி
பார சீலமுனி வர்க்கமுறை இட்டலற
வேலை ஏவியவு ணக்குலமி றக்கநகை கொண்டசீலா

வேத மீனுகம லக்கணர்மெய் பச்சைசுகு
ராம ‡ ரீனுமயி லொக்கமது ரைப்பதியில்
மேவி வாழுமரர் முத்தர்சிவ பத்தர்பணி தம்பிரானே. (ச)

---

* வாசி-குதிரை † மாடை-திரவியம். ‡ ஏனுமயில்-வள்ளிநாயகி.

தனனத் தந்தன தந்தன தனதன
தனனத் தந்தன தந்தன தனதன
தனனத் தந்தன தந்தன தனதன தனதான.

532. புருவச் செஞ்சிலை கொண்டிரு கணைவிழி
எறியக் கொங்கையி ரண்டெனு மதகரி
பொரமுத் தந்தரு மிங்கித நயவிதம் அதனாலே

புகலச் சங்கிசை கண்டம தனிலெழ
உருவச் செந்துவர் தந்தத ரமுமருள்
புதுமைத் தம்பல முஞ்சில தாவரு மதனாலே

பருகித் தின்றிட லஞ்சுக மெனமன
துருகிக் குங்கும சந்தன மதிவியர்
படியச் சம்ப்ரம ரஞ்சித மருள்கல வியினாலே

பலருக் குங்கடை என்றனை இகழ்வு
மயலைத் தந்தருள் மங்கையர் தமைவெகு
பலமிற் கொண்டிடு வண்டனு முனதடி பணிவேனோ

திருவைக் கொண்டொரு தண்டக வனமிசை
வரவச் சங்கொடு வந்திடு *முழையுடல்
சிதறக் கண்டக வெங்கர னொடுதிரி சிரனோடு

திறமிற் றங்கிய கும்பக னொருபது
தலைபெற் றும்பரை வென்றிடு மவனொடு
சிலையிற் கொன்றமு குந்தன லகமகிழ் மருகோனே

மருவைத் துன்றிய பைங்குழ லுமையவள்
சிவனுக் கன்பரு ளம்பிகை கவுரிகை
மலையத் தன்தரு சங்கரி கருணைசெய் முருகோனே

வடவெற் பங்கய லன்றணி குகசர
வணையிற் றங்கிய பங்கய முகதமிழ்
மதுரைச் சங்கிலி மண்டப இமையவர் பெருமானே. ()

உழை - மானுருக்கொண்ட மாரீசன்.

தனதானன தானன தானன தனதானன தானன தானன
தனதானன தானன தானன தனதான.

533. முகிலாமெனும் வார்குழ லார்சிலை *புருவார்கயல் வேல்விழி யார்சசி
†முகவார்‡தர ளாமென வேநகை புரிமாதர்

முலைமாலிணை கோபுர மாமென வடமாடிட வேகொடி நூலிடை
முதுபாளித சோலைகு லாவிய மயில்போல்வார்

§அகிசேர்குறி யார்துடை வாழையின் அழகார்கழ லார்தரவேய்தரு
அயிலார்கன நூபுர மாடிட நடைமேவி

அனமாமென யாரையு மால்கொள விழியால்சுழ லாவிடு பாவையர்
அவர்பாயலி லேயடி யேனுடல் அழிவேனோ

ககனூர்பதி யோர்முறை யோவென இருள்காரசு ரார்படை தூள்பட
கடலேழ்கிரி நாகமு நூறிட விடும்வேலா

கமலாலய நாயகி வானவர் தொழுமீசுர னுரிட மேவிய
கருணாகர ஞானப ராபரை அருள்பாலா

மகிழ்மாலதி நாவல்ப லாகமு குடனுடதி லாமயில் கோகில
மகிழ்நாடுறை மால்வளி நாயகி மணவாளா

மதிமாமுக வாவடி யேனிரு வினைதூள்பட வேவயி லேவிய
மதுராபுரி மேவியு லாவிய பெருமாளே. (௫௱)

---

தனனதான தானத் தனந்த
தனனதான தானத் தனந்த
தனனதான தானத் தனந்த தனதான.

534 முகமெலா ‖நெய் பூசித்த யங்கு
நுதலின்மீதி லேபொட் டணிந்து
முருகுமாலை ¶ஓதிக் கணிந்த மடமாதர்

முதிருமார பாரத் தனங்கள்
மிசையிலாவி யாய்நெக் கழிந்து
முடியமாலி லேபட் டலைந்து பொருள்தேடிச்

---

*புருவார்-புருவத்தினர். †முகவார்-முகத்தினர் ‡தரளாமென-தரள மாமென. §அகி - பாம்பு. ‖நெய் - தயிலம். ¶ஓதி - கூந்தல்.

செகமெலாமு லாவிக் காந்து
திருடனாகி யேசற் றுழன்று
*திமிரனாகி யோடிப் பறந்து திரியாமல்

தெளியுஞான மோதிக் கரைந்து
சிவபுராண நூலிற் பயின்று
செறியுமாறு தாளைப் பரிந்து தரவேணும்

அகரமாதி யாமட் சரங்கள்
அவனிகால்வி ணாரப் பொடங்கி
அடையவேக ரூபத்தி லொன்றி முதலாகி

அமரர்காண வே†அத்த மன்றில்
அரிவையாட ஆடிக் கலந்த
அமலநாத னார்முற் பயந்த முருகோனே

சகலவேத சாமுத் ரியங்கள்
சமயமாறு லோகத் ரயங்கள்
தருமநீதி சேர்தத் துவங்கள் தவயோகம்

தவறிலாம லாளப் பிறந்த
தமிழ்செய்மாறர் கூன்வெப் பொடன்று
தவிர ‡வால வாயிற் சிறந்த பெருமாளே. (எ)

---

தானத்தன தானன தானன தானத்தன தானன தானன
தானத்தன தானன தானன தனதான.

535. ஏலப்பனி நீரணி மாதர்கள் கானத்தினு மேயுற வாடிடு
மீரத்தினு மேவளை சேர்கர மதனாலும்

ஏமக்கிரி மீதினி லேகரு நீலக்கய மேறிய னேரென
ஏதுற்றிடு மாதன மீதினு மயலாகிச்

சோலைக்குயில் போல்மொழி யாலுமெ னாசுற்றிடு நூலிடை யாலுமெ
§தோமிற்கத லீநிக ராகிய தொடையாலும்

சோமப்ரபை வீசிய மாமுக சாலத்தினு மாகடு வேல்விழி
சூதத்தினு நானவ மேதினம் உழல்வேனோ

*திமிரன்-மயக்கமுடையவன். †அத்தமன்று-கனகசபை. ‡ஆலவாய்-மதுரை. § தோமில் கதலி - குற்றமற்ற செவ்வாழை.

ஆலப்பணி மீதினில் மாசறு மாழிக்கிடை யேதுயில் மாதவ
ஞானக்கினி தாயுத வீயருள் நெடுமாயன்
ஆதித்திரு நேமியன் வாமன னீலப்புயல்நேர்தருமேனியன்
ஆரத்துள வார்திரு மார்பினன் மருகோனே
கோலக்கய மாவுரி போர்வையர் ஆலக்கடு வார்கள நாயகர்
*கோவிற்பொறி யால்வரு மாசுத குமரேசா
கூர்முத்தமிழ் வாணர்கள் வீறிய சீரற்புத மாநக ராகிய
† கூடற்பதி மீதினில் மேவிய பெருமாளே. (அ)

---

தனதான தானத் தனதான தனதான தானத் தனதான.

536. கலைமேவு ஞானப் பிரகாச கடலாடி ஆசைக் கடலேறிப்
பலமாய வாதிற் பிறழாதே பதிஞான வாழ்வைத் தருவாயே
மலைமேவு மாயக் குறமாதின் மனைமேவு வாலக் குமரேசா
சிலைவேடசேவற்கொடியோனே திருவாலவாயிற் பெருமாளே.

---

தானத் தனதான தானத் தனதான.

537. நீதத் துவமாகி நேமத் துணையாகிப்
பூதத் தயவான போதைத் தருவாயே
நாதத் தொனியோனே ஞானக் கடலோனே
கோதற் றமுதான கூடற் பெருமாளே. (ம)

---

தனதன தத்தந் தான தானன
தனதன தத்தந் தான தானன
தனதன தத்தந் தான தானன தனதான.

538. மனநினை சுத்தஞ் சூது காரிகள்
அமளிவி ளைக்குங் கூளி மூளிகள்
மதபல நித்தம் பாரி நாரிகள் அழகாக

---

*கோவிற்பொறி-கண்ணிலிருந்துண்டான அக்கினி. †கூடற்பதி-மதுரை.

வளைகுழை முத்தும் பூணும் வீணிகள்
விழலிகள் மெச்சுண் டாடி பாடிகள்
வரமிகு வெட்கம் போல ஓடிகள் தெருவூடே

குணகிகள் பட்சம் போல பேசிகள்
தனகிக ளிச்சம் பேசி கூசிகள்
குசலிகள் வர்க்கஞ் சூறை காரிகள் பொருளாசை

கொளுவிக ளிட்டம் பாறி வீழ்பட
அருளமு தத்தின் சேரு மோர்வழி
குறிதனி லுய்த்துன் பாத மேறிட அருள்தாராய்

தனதன தத்தந் தான தானன
டுடுடுடு டிட்டுண் டூடி டூடூடு
தகுதிகு தத்தந் தீத தோதக எனபேரி

தவில்முர சத்தந் தாரை பூரிகை
வளைதுடி பொற்கொம் பார சூரரை
சமர்தனில் முற்றும் பாறி நூறிட விடும்வேலா

தினைவன நித்தங் காவ லாளியள்
நகைமுறை முத்தின் பாவை மான்மகள்
திகழ்பெற நித்தங் கூடி ஆடிய முருகோனே

திரிபுர நக்கன் பாதி மாதுறை
அழகிய சொக்கன் காதி லோர்பொருள்
செலவரு ளித்தென் கூடல் மேவிய பெருமாளே. (கக)

---

தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
தத்ததன தத்ததன தனதான.

539. முத்துநவ ரத்நமணி பத்திநிறை சத்தியிட
மொய்த்தகிரி முத்திதரு எனவோதும்

முக்கணிறை வர்க்குமருள் வைத்தமுரு கக்கடவுள்
முப்பதுமு வர்க்கசுரர் அடிபேணிப்

பத்துமுடி தத்தும்வகை உற்றகணை விட்டவரி
*பற்குனனை வெற்றிபெற ரதமூரும்
பச்சைநிற முற்றபுயல் அச்சமற வைத்தபொருள்
பத்தர்மன துற்றசிவம் அருள்வாயே
தித்திமிதி தித்திமிதி திக்குகுகு திக்குகுகு
தெய்த்ததெதன தெய்த்ததெதன தெனதான
திக்குவென மத்தளமி டக்கைதுடி தத்ததகு
செச்சரிகை செச்சரிகை என ஆடும்
அத்தனுட னொத்தநட நித்ரிபுவ னத்திசிவ
சித்தியருள் சத்தியருள் புரிபாலா
†அற்பவிடை ‡தற்பமது முற்றுநிலை பெற்றுவளர்
§அற் ||கனக பத்மபுரி பெருமாளே. (கஉ)

---

தையதனத் தனதானா தனனதனத் தனதானா

540. வள்ளமுலைப் பொதுமாதர் மயலதனிற் படியாதே
கள்ளம்விடுத் துனதாளே கருதவருட் பெறுவேனோ
உள்ளமறைப் பொருளோனே உமைமகிழ்நற் புதல்வோனே
தெள்ளுதமிழ்க் குரியோனே திருமதுரைப் பெருமாளே. ()

541. சைவமுதற் குருவாயே சமணர்களைத் தெறுவோனே
பொய்யருளத் தணுகானே புனிதவருட் புரிவாயே
கையின்மிசைக் கதிர்வேலா கடிகமழுற் புதநீபா
தெய்வதசற் குருநாதா திருமதுரைப் பெருமாளே. (கச)

---

தானதன தத்த தானதன தத்த
தானதன தத்த தனதான.

542. ஆனைமுக வர்க்கு நேரிளைய கர்த்த
ஆறுமுக முற்ற அழகோனே

பற்குனனை-பற்குனன் - அருச்சுனன். † அற்பவிடை - நுண்ணிய இடையுடைய மாதர்கள். ‡ தற்பம்-மெத்தைவீடு. § அல்-மதில், || கனக பத்மபுரி-ஸ்தலத்தினுள் பொற்றாமரையுள்ள மதுரை.

ஆதியர னுக்கும் வேதமுதல் வற்கும்
ஆரணமு ரைத்த குருநாதா
தானவர்கு லத்தை வேல்கொடுதொ ணித்த
சால்சதுர்வி குத்த திறல்வீரா
தாளிணைக ளுற்று மேவியப தத்தில்
வாழ்வொடுசி றக்க அருள்வாயே
வானெழுபு விக்கு மாலுமய னுக்கும்
யாவரொரு வர்க்கும் அறியாதாய்
மாமதுரை சொக்கர் மாதுமைக ளிக்க
மாமயில் நடத்து முருகோனே
தேனெழுபு னத்தில் மான்விழிகு றத்தி
சேரமரு வுற்ற திரடோளா
தேவர்கள்க ருத்தில் மேவியப யத்தை
நீவிமகிழ் வித்த பெருமாளே. (௪௬)

## சீபுருடமங்கை:—நான்குநேரி.

**இது திருநெல்வேலிக்குத் தெற்கே 20 மைல் துலைவிலிருக்கிறது.**

தானதன தந்த தந்தன தானதன தந்த தந்தன
தானதன தந்த தந்தன தனதான.

543. ஆடல்மத னம்பின் மங்கைய ராலவிழி யின்பி றங்கொளி
யாரமத வம்பு கொங்கையின் மயலாகி
ஆகிகுரு வின்ப தங்களை நீதியுட னன்பு டன்பணி
யாமல்மன நைந்து நொந்துடல் அழியாதே
வேடரென நின்ற ஐம்புல னுலுகா ணங்க ளின்தொழில்
வேறுபட நின்று ணர்ந்தருள் பெருமாறென்
வேடைகெட வந்து சிந்தனை மாயையற வென்று துன்றிய
வேதமுடி வின்ப ரம்பொருள் அருள்வாயே
தாடகையு ரங்க டிந்தொளிர் மாமுனிம கஞ்சி றந்தொரு
தாழ்வறந டந்து திண்சிலை முறியாவொண்
சானகித னங்க லந்தபின் ஊரில்மகு டங்க டந்தொரு
தாயர்வச னஞ்சி றந்தவன் மருகோனே

---

நீவி - நீக்கி.

சேடன்முடி யுங்க லங்கிட ஆடைமுழு தும்ப ரந்தெழ
தேவர்கள்ம கிழ்ந்து பொங்கிட நடமாடும்
சீர்மயில மஞ்சு துஞ்சிய சோலைவளர் செம்பொ னுந்திய
சீபுருட மங்கை தங்கிய பெருமாளே. (௧)

---

தானதன தந்ததந்த தானதன தந்ததந்த
தானதன தந்ததந்த தனதான.

544. கார்குழல்கு லைந்தலைந்து வார்குழையி சைந்தசைந்து
காதலுறு சிந்தையுந்து மடமானார்
காமுகர கங்கலங்க போர்மருவ முந்திவந்த
*காழ்கடிய கும்பதம்ப இருகோடார்
பேர்மருவும் அந்திதந்த வாரணவ னங்கள் அங்க
பேதையர்கள் தங்கள்கண்கள் வலையாலே
போறிவு குந்துநொந்து காதலில லைந்துசிந்தை
பீடையற வந்துநின்றன் அருள்தாராய்
ஏர்மருவு தண்டைகொண்ட தாளசைய வந்தகந்த
ஏகமயி லங்கதுங்க வடிவேலா
†ஏமனுமை மைந்தசந்தி சேவலணி கொண்டுவண்டர்
‡ஈடெறவி ருந்தசெந்தில் நகர்வாழ்வே
தேருகள்மி குந்தசந்தி வீதிகள ணிந்தகெந்த
சீரலர்கு ளிர்ந்துயர்ந்த பொழிலோடே
சேரவெயி லங்குதுங்க வாவிகளி சைந்திருந்த
சீபுருட மங்கைதங்கு பெருமாளே. (௨)

---

தானதன தந்த தானதன தந்த
தானதன தந்த தனதான.

545. §வேனில்மத னைந்து பாணம்விட நொந்து
வீதிதொறு நின்ற மடவார்பால்
வேளையென வந்து தாளினில்வி ழுந்து
வேடைகெட நண்பு பலபேசித்
தேனினும ணந்த வாயமுத முண்டு
சீதளத னங்க ளினில்மூழ்கித்

---

* காழ்கடிய-கல்லினுங்கடுமையான. † ஏமன்-பொன்னிறமுள்ள சிவபிரான். ‡ ஈடெற-ஈடேற § வேனில்-வசந்த காலத்தில்.

தேடியத னங்கள் பாழ்படமு யன்று
சேர்கதிய தின்றி உழல்வேனோ

ஆனிரைபு ரந்து மானிலம ளந்தொ
ராலிலையி லன்று துயில்மாயன்

ஆயர்மனை சென்று பால்தயிர ளைந்த
ஆரணமு குந்தன் மருகோனே

வானவர்பு கழ்ந்த தானவர்ப யந்த
மாமொடுவிளங்கு மணிமார்பா

மாமறைமு ழங்கு சீபுருட மங்கை
மாநகர மர்ந்த பெருமாளே. (ந)

---

## இலஞ்சி.

**இது திருக்குற்றாலத்திலிருந்து வடக்கே 2 மைல் தூலவிலிருக்கிறது.**

தனந்த தனதன தனந்த தனதன
தனந்த தனதன தனதான.

546. காங்க மலமின தாம்ப வளம்வளை
களம்ப கழிவிழி மொழிபாகு

கருப்ப முதுமுலை குரும்பை குருகுப
கரும்பி டியினடை எயின்மாதோ

டரங்க நககன தனங்கு தலையிசை
அலங்கி ருதமுற மயில்மீதே

அமர்ந்து பவவினை களைந்து வருகொடி
யவந்த கனகல வருவாயே

தாங்க முதியம காம்பொ ருதகிரை
தழங்கு நதி†கும ரெனவான

தலம்ப ரவமறை புலம்ப வருசிறு
சதங்கை அடிதொழு பவாழி

இரங்கு நதிதிரு வரங்கர் மருகப
னிரண்டு புயமலை கிழவோனே

இலங்கு தாதமிழ் விளங்க வருதிரு
இலஞ்சி மருவிய பெருமாளே. (க)

---

தழங்கு - முழங்குகின்ற. † குமரென - குமர என.

தந்தன தான தனந்தன தானத்
தந்தன தான தனந்தன தானத்
தந்தன தான தனந்தன தானத் தனதான.

547. கொந்தள ஓலை குலுங்கிட வாளிச்
சங்குட ளாழி கழன்றிட மேகக்
கொண்டைகள் மாலை பரிந்திடவாகப் பனிநீர்சேர்

கொங்கைகள் மார்பு குழைந்திட வாளிக்
கண்கயல் மேனி சிவந்திட கோவைக்
கொஞ்சிய வாயி ரசங்கொடு மோகக் கடலூடே

சந்திர ஆர மழிந்திட நூலிற்
பங்கிடை ஆடை துவண்டிட நேசத்
தந்திட மாலு ததும்பியு ழுழ்குற் றிடுபோதன்

சந்திர மேனி முகங்களும் நீலச்
* சந்த்ரகி மாய்கொ டடர்ந்திடு பாதச்
† சந்திர வாகு சதங்கையு மேசற் றருள்வாயே

சுந்தரர் பாட லுகந்திரு நாளைக்
கொண்டுநல் தூது நடந்தவ ராகத்
‡ தொந்தமொ டாடி இருந்தவள் ஞானச் சிவகாமி

தொண்டர்க ளாக மமர்ந்தவள் நீலச்
சங்கரி யோக சவுந்தரி கோலச்
சுந்தரி காளி பயந்தரு ளாளைக் கிளையோனே

இந்திர தேவர் பயங்கெட சூரைச்
சிந்திட வேல்கொ டெறிந்துநல் தோகைக்
கின்புற மேவி இருந்திடு வேதப் பொருளோனே

எண்புன மேவி இருந்தவள் மோகப்
பெண்திரு வாளை மணந்திய லார்சொற்
கெஞ்சிய ளாவு மிலஞ்சியி சாகப் பெருமாளே. (உ)

---

தனந்தன தந்த தனந்தன தந்த
தனந்தன தந்த தனதான.

548. சுரும்பணி கொண்டல் நெடுங்குழல் கண்டு
துரந்தெதிர் கின்ற விழிவேலால்

---

* சந்த்ரகி - மயில். † சந்திர வாகு சதங்கை - சுகத்தைச் செய்கின்ற திரமான அழகையுடைய சதங்கை. ‡ தொந்தம் - சம்பந்தம்.

சுழன்று சுழன்று துவண்டு துவண்டு
சுருண்டு மயங்கி மடவார்தோள்
விரும்பி வரம்பு கடந்து நடந்து
மெலிந்து தளர்ந்து மடியாதே
விளங்கு கடம்பு நிறைந்த விதண்டை
விதங்கொள் சதங்கை அடிதாராய்
பொருந்த லமைந்து சிதம்பெ றுகின்ற
பொலங்கி ரியொன்றை எறிவோனே
புகழ்ந்து மகிழ்ந்து வணங்கு குணங்கொள்
* புரந்த ரன்வஞ்சி மணவாளா
$ இருப்பு னமங்கை பெரும்பு ளகஞ்செய்
குரும்பை மணந்த மணிமார்பா
§ இலஞ்சி யில்வந்த † இலஞ்சி யமென்று
இலஞ்சி யமர்ந்த பெருமாளே. (௫)

தானதனந்த தானதனந்த தானதனந்த தனதான.

549. மாலையில்வந்து மாலைவழங்கு மாலையனங்கன் மலராலும்
வாடையெழுந்து வாடைசெறிந்து வாடையெறிந்த அனலாலும்
கோலமழிந்து சாலமெலிந்து கோமளவஞ்சி தளராமுன்
கூடியகொங்கை நீடியவன்பு கூரவுமின்று வரவேணும்
காலனடுங்க வேலதுகொண்டு கானில்நடந்த முருகோனே
கானமடந்தை நாணமொழிந்து காதலிரங்கு குமரேசா
சோலைவளர்ந்து சாலிவிளைந்து சூழுமிலஞ்சி மகிழ்வோனே
சூரியனஞ்ச வாரியில்வந்த சூரனைவென்ற பெருமாளே. (௬)

## திருப்பூவணம்.

**இது மதுரைக்கு நேர்கிழக்கு 12 மைல் தூலைவிலுள்ளரயில்வேஷ்டேஷன்**

தனத்தான தத்தத் தனதான
தனத்தான தத்தத் தனதான.

550. அறப்பாவை அத்தற் கருள்பாலா
அளித்தாது வெட்சித் திருமார்பா

புரந்தரன்வஞ்சி - தெய்வயானை $ இருப்புனமங்கை - வள்ளிநாயகி.
§ இலஞ்சி - புனம் † இலஞ்சியமென்று - இல் அஞ்சி அம் என்று, மனைவியாகிய வள்ளி நாயகிக்குப் பயந்து (அவள்) அழகை (வியந்து) கூறி.

குறப்பாவை அற்பிற் புணர்வோனே
குலத்தேவ வர்க்கப் பரிபாலா
மறப்பாத கத்துற் றுழல்வேனை
மலர்த்தாள்வ ழுத்தக் க்ருபையிவாய்
சிறப்பான முத்திக் கொருவாழ்வே
திருப்பூவ ணத்திற் பெருமாளே. (க)

---

தானனதான தானனதான தானனதான தனதான.

551. வானவராதி யோர்சிறைமேவ மாவலியேசெய் திடுசூரன்
மார்பிருகூற தாய்விடவாரி வாய்விடவேலை விடுதீரா
கானவர்பாவை காதலனான காசணிபார தனமார்பா
காலனைமோது காலகபால * காளகளேசர் தருபாலா
தேனமர்நீப மாலைவிடாத சேவகஞான முதல்வோனே
தீயகுணூறி பாவிநிணைது சேவடிகாண அருள்வாயே
† போனகசாலை யாதுலர்வாழ வீதிகடோறும் நனிமேவு
பூவணமான மாநகர்வாழு நாதகுகேச பெருமாளே. (உ)

---

தந்தத்தத் தானன தானன
தந்தத்தத் தானன தானன
தந்தத்தத் தானன தானன தனதான.

552. பந்தப்பொற் பாரப யோதர
முந்தச்சிற் றூடைசெய் மேகலை
பண்புற்றுத் தாவொடு வீரிய துங்கலோடே
பண்டைச்சிற் சேறியில் வீதியில்
கண்டிச்சித் தாரொடு மேவிடு
பங்குக்கைக் காசுகொள் வேசையர் பனிநீர்தோய்
கொந்துச்சிப் பூவணி தோகையர்
கந்தக்கைத் தாமரை யாலடி
கும்பிட்டுப் பாடிசை வீணையர் அநுராகங்
கொண்டுற்றுப் பாயலின் மூழ்கிய
சண்டிச்சிச் சீயென வாழ்துயர்
குன்றப்பொற் பாதக்ரு பாநிதி அருள்வாயே

---

* காளகளேசர்-விஷத்தைக்கண்டத்திலுடையவர். † போனகம்-அன்னம்.

அந்தத்துக் காதியு மாகியு
மந்திக்குட் டானவ னானவ
னண்டத்தப் பாலுற மாமணி ஒளிவீசும்
அங்கத்தைப் பாவைசெய் தேயுயர்
சங்கத்திற் றேர்தமி ழோதிட
அண்டிக்கிட் டார்கழு வேறினர் ஒருகோடி
சந்தத்திக் காளுநி சாசரர்
வெந்துட்கத் தூளிப டாவெழ
சண்டைச்சொற் றூர்பட வேவயில் விடுவோனே
தங்கச்சக் ராயுதர் வானவர்
வந்திக்கப் போரு ளேதிகழ்
தம்பப்பொற் பூவண மேவிய பெருமாளே. (௩)

## திருக்கானப்பேர்.

**இது மானாமதுரையிலிருந்து வடக்கே 22 மைல் தூலவிலிருக்கிறது.**

தனத்தானத்தா தனதன தனதன தனதான.

553. அனத்தோடொப்பா மெனுநடை மடவியர் அநுராகம்
அதற்கேசிச்சி இனமென அயிர்கெடல் அழகாமோ
உனைப்பாடிப்பே றுறுமொரு வரமினி உதவாயோ
உவப்பாகத்தே வர்கள்சிறை விடவிடும் அயிலோனே
முனைப்பாடிக்கே திரிதரும் அரிதிரு மருகோனே
முகிற்கே †நத்தா விரிதரு கலபநன் மயிலோனே
தினைக்காவற்கே உரியவள் மனமகிழ் மணவாளா
திருக்கானப்பேர் நகர்தனி லினிதுறை பெருமாளே.(௧)

தானத்தானத் தனதானா தானத்தானத் தனதானா.

554. கோலக்காதிற் குழையாலே கோதிச்சேர்மைக் குழலாலே
ஞாலத்தாரைத் துயரேசெய் ‡நாரிக்காசைப் படலாமோ
மேலைத்தேவர்க் கரியோனே வீரச்சேவற் கொடியோனே
காலப்பாசத் துயர்தீராய் கானப்பேரிற் பெருமாளே. (௨)

முனைப்பாடிக்கே-முன் ஆயர் பாடியில் †நத்தா விரும்பி ‡நாரி-பெண்.

## திருவுத்தரகோசமங்கை.

**இது ராமநாதபுரத்திலிருந்து தெற்கே 7 மைல் துலைவிலிருக்கிறது.**

தத்தன தானதந்த தத்தன தானதந்த
தத்தன தானதந்த தனதான.

555. வெற்பென வேயெழுந்து செப்பென வேதிரண்டு
மெத்தென வேதிகொண்ட தனமாதர்
மெய்ப்படு கோலமுங்கண் மைப்படு சாலமுஞ்செய்
வித்தையு மேநினைந்து மயலாகி
அற்பக லாவலைந்து கற்பதெ லாமுலைந்து
எற்பமு மானமின்றி அழிவேனோ
அக்கினி ரூபமைந்த கிர்த்திகை மாதர்தந்த
அற்புத பாலையுண்ட குமரேசா
பொற்பதி காவலிந்தி ரற்குற வேலெறிந்து
பொய்ப்படு சூர்பிளந்த அதிதீரா
† புட்பதி ஏறுகொண்ட லச்சுத னார்மகிழ்ந்த
புத்தமிர் தானசெஞ்சொல் மருகோனே
‡ உற்பல மோகொடுங்க ணைக்கிணை யோவெனுங்கண்
உத்தமி தேவதந்தி புணர்மார்பா
உத்தம மாவளங்கொள் உத்தரகோசமங்கை
உற்றினி தாவிருந்த பெருமானே. (க)

## திருப்புத்தூர்.

**இது மதுரையிலிருந்து வடகிழக்கே 32 மைல் துலைவிலிருக்கிறது.**

தனத்தத் தான தனன தனதன
தனத்தத் தான தனன தனதன
தனத்தத் தான தனன தனதன தனதான.

556, § கருப்புச் சாப னனைய இளைஞர்கள்
ப்ரமிக்கக் காத லுறவு நெடுகிய
கடைக்கட் பார்வை இனிய வனிதையர் தனபாரங்
களிற்றுக் கோடு கலச மலிநவ
மணிச்செப் போடை வனச நறுமலர்
கனத்துப் பாளை முறிய வருநிகர் இளநீர்போற்

அற்பகல் - இரவுபகல் † புட்பதி - பக்ஷிராஜனாகிய கருடன் ‡ உற்பலம் குவளைமலர் § கருப்புச்சாபன் - கரும்பை வில்லாக்கொண்ட மன்மதன்.

பொருப்பைச் சாடும் வலியை உடையன
அறச்சற் றுன இடையை நலிவன
புதுக்கச் சார வடமொ டடர்வன எனநாளும்
புகழ்ச்சிப் பாட லடிமை அவரவர்
ப்ரியப்பட் டாள உரைசெ யிழிதொழில்
* பொகட்டெப் போது சரியைகிரியைசெய் துயிர்வாழ்வேன்
இருட்டுப் பாரில் மறலி தனதுடல்
பதைக்கக் கால்கொ டுதைசெய் தவன்விழ
†எயிற்றுப் போலி அமர ருடலவர் தலைமாலை
எலுப்புக் கோவை அணியு மவர்மிக
அதிர்த்துக் காளி வெருவ நொடியினி
லெதிர்த்திட் டாடும் வயிர பயிரவர் நவநீத
திருட்டுப் பாணி இடப முதுகிடை
மிதித்திட் டேறி அதிர வருபவர்
செலுத்துப் பூத மலகை இலகிய படையாளி
‡ செடைக்குட் § பூளை மதிய || மிதழிவெ
ளெருக்குச் சூடி குமர வயலியல்
திருப்புத் தூரில் மருவி உறைதரு பெருமாளே. (க)

தான தாத்த தனத்தத் தானன
தான தாத்த தனத்தத் தானன
தான தாத்த தனத்தத் தானன தனதான.

557. வேலை தோற்க விழித்துக் காதினி
லோலை காட்டி நகைத்துப் போதரு
வீடு காட்டி உடுத்தப் போர்வையை நெகிழ்வாகி
மேனி காட்டி வளைத்துப் போர்முலை
யானை காட்டி மறைத்துத் தோதக
வீறு காட்டி எதிர்த்துப் போரெதிர் வருவார்மேல்
கால மேற்க உழப்பிக் கூறிய
காசு கேட்ட துகைப்பற் றுயிடை
காதி ஓட்டி வருத்தப் பாடுடன் வருவார்போல்

* பொகட்டு-போகவிட்டு † எயில் துப்பு ஒலி-திரிபுரங்களின் வலிமையைத்தொலைத்து ‡ செடை-சடை § பூளை-அறுகு. || இதழி-கொன்றை.

காதல் போற்று மலர்ப்பொற் பாயலின்
மீத ணைப்பு மசட்டுச் சூளைகள்
காம நோய்ப்ப டுசித்தத் தீவினை ஒழியேனோ

ஆல கோட்டு மிடற்றுச் சோதிக
பாலி பார்ப்ப திபட்சத் தால்நட
மாடி தாத்தி ரிபட்சித் தாவென உமிழ்வாளி

ஆடல் கோத்த சிலைக்கைச் சேவக
னோடை பூத்த தளக்கட் சானுவி
யாறு தேக்கி யகற்றைச் சேகர சடதாரி

சீல மாப்ப திமத்தப் பாரிட
சேனை போற்றி டுமப்பர்க் கோதிய
சேத னார்த்த ப்ரசித்திக் கேவரு முருகோனே

சேல ருக்க யல்தத்தச் சூழ்வய
லூர மேற்க ரவிப்ரர்க் காதா
தீர தீர்த்த திருப்புத் தூருறை பெருமாளே. (௨)

## திருவாடானை.

**இது மானமதுரையிலிருந்து கிழக்கே 43 மைல் துலைவிலிருக்கிறது.**

தானன தத்ததன தானன தத்ததன
தானன தத்ததன தனதான.

558. ஊனுறு முட்பிணியு மானுக வித்தவுட
லூதாரி பட்டொழிய உயிர்போனால்

ஊரார்கு வித்துவர ஆவாவெ னக்குறுகி
ஓயாமு ழக்கமெழ அழுதோய

நானாவி தச்சிவிகை மேலேற்றி டத்தியது
நாறுமெ டுத்தடவி எரியூடே

நானுமல் வைத்துவிட நீறுமெ ரிப்பிறவி
நாடாதெ னக்குனருள் புரிவாயே

மானக * துத்திமுடி மீதேறி ருத்தமிடு
மாயோனு மட்டொழுகு மலர்மீதே

வாழ்வாயி ருக்குமொரு வேதாவு மெட்டிசையும்
வானோரு மட்டகுல கிரியாவும்

---

* துத்தி - அரவின்படம்.

ஆறுவ ரக்கருடன் வானோர்பி ழைக்கவரு
மாலால முற்றவமு தயில்வோன்முன்
ஆசார பத்தியுடன் ஞானக மத்தையரு
ளாடானை நித்தமுறை பெருமாளே. (க)

## இராமேசுவரம்.

**இது மண்டபம் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 10 மைல் துலைவிலிருக்கிறது.**

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தானதன தானதன தனதான.

559. வாலவய தாகியழ காகிமத னாகிபணி
வாணிபமொ டாடிமரு ளாடிவிளை யாடிவிழல்
வாழ்வுசத மாகிவலி வாகி*மட கூடமொடு பொருள்தேடி
வாசபுழு கோடுமல ரோடுமன மாகிகமழ்
வாசனைக ளாதியிட லாகிமய லாகிவிலை
மாதர்களை மேவியவ ராசைதனி லேசுழல சிலநாள்போய்த்
தோல்திரைக ளாகிநரை யாகிகுரு டாகியிரு
கால்கள்தடு மாறிசெவி மாறிபசு பாசபதி
சூழ்கதிகள் மாறிசுக மாறிதடி யோடுதிரி உறுநாளிற்
சூலைசொறி ஈளைவலி வாதமொடு நீரழிவு
சோகைகள மாலைசுர மோடுபிணி தூறிருமல்
சூழலுற மூலகசு மாலமென நாறியுடல் அழிவேனோ
நாலுமுக னாதியறி யோமென†வ தாரமுரை
யாதபிர மாவைவிழ மோதிபொரு ளோதுகென
நாலுசிர மோடுகிகை தூளிபட தாளமிடும் இளையோனே
நாறிதழி வேணிசிவ ரூபகவி யாணிமுத
லீனமக வானைமகிழ் தோழவன மீதுசெறி
ஞானகுரு மாதைதினை காவில்மண மேவுபுகழ் மயில்வீரா

மட கூடம் - மாட கூடம். † அதாரம் - ஆதாரம்.

ஓலமிடு தாடகைசு வாகுவள ரேழுமரம்
வாலியொடு நீலிபக னோடொருவி ராதனெழு
மோதகட லோடுவிறல் ராவணகு ழாமமரில் பொடியாக

ஓகைதழல் வாளியிடு மூரிதனு நேமிவளை
பாணிதிரு மார்பனரி கேசன்மரு காவெனவெ
ஓதமறை ராமெசுர மேவுகும ராவமார் பெருமாளே. (௧)

---

தானா தனத்ததன தானா தனத்ததன
தானா தனத்ததன தனதான.

560. வானோர் வழுத்துனது பாதார பத்மமலர்
மீதே பணிக்கும்வகை அறியாதே

மானார் வலைக்கணதி லேதூளி மெத்தையினி
லூடே அணைத்துதவு மதனாலே

தேனே கருப்பிலெழு பாகோ விதற்கிணைக
ளேதோ வெனக்கலவி பலகோடி

தீரா மயக்கினொடு நாகா படத்தி*லெழு
சேருடல் பெற்றதுயர் ஒழியேனோ

மேனா டுபெற்றுவளர் சூராதி பற்கெதிரி
னூடேகி நிற்குமிரு கழலோனே

† மேகா ரவுக்ரபரி தானேறி வெற்றிபுனை
வீராகு றச்சிறுமி மணவாளா

ஞானாப ரற்கினிய வேதா கமப்பொருளை
நாணா துரைக்குமொரு பெரியோனே

நாரா யணற்குமரு காவீறு பெற்றிலகு
ராமே சுரத்திலுறை பெருமாளே. (௨)

எழுசேருடல்-சேறில்நட்டகம்பம்போலாடல். † மேகாரம்-மயில்.

இது கும்பகோணத்திலிருந்து தெற்கே 8 மைல் தூலவிலிருக்கிறது.

தனத்த தந்தன தானதனந்தத்
தனத்த தந்தன தானதனந்தத்
தனத்த தந்தன தானதனந்தத் தனதான.

561. இரத்த மூஞ் * சியு மூளையெலும்புட்
டசைப்ப சுங்குடல் நாடி புனைந்திட்
டிறுக்கு மண்சல வீடுபுகுந்திட் டதில்மேவி
இசத்து டன்புகல் கூறுமிகுந்திட்
டகைத்தி டும்பொரு ளாசையெனும்புட்
டெருட்ட வுந்தெளி யாதுபறந்திட் டிட†மாயா
பிரத்தம் வந்தடு வாதசு ரம்பித்
துளைப்பு டன்பல வாயுவு மிஞ்சிப்
பெலத்தை யுஞ்சில நாளுளொ டுங்கித் தடிமேலாய்ப்
பிடித்தி டும்பல நாள்கொடு மந்திக்
குலத்தெ னும்படி கூனிய டங்கிப்
பிசக்கு வந்திடு போதுபி னஞ்சிச் சடமாமோ
தரித்த னந்தன தானன தந்தத்
திமித்தி மிந்திமி தீதக திந்தத்
தடுட்டு டுண்டுடு டேடிடி மிண்டிட் டியல்தாளம்
தனத்த குந்தகு தானன தந்தக்
கொதித்து வந்திடு சூருடல் சிந்தச்
சலத்து டன்கிரி தூள்படெ றிந்திட் டிடும்வேலா
சிரத்து டன்கர மேடுபொ ழிந்திட்
டிரைத்து வந்தம ரோர்கள்ப டிந்துச்
சிரத்தி னுங்கமழ் மாலைம ணிப்பொற் சரணோனே
செகத்தி னின்குரு வாகிய தந்தைக்
களித்தி டுங்குரு ஞானப்ர சங்கத்
திருப்பெ ருந்துறை மேவிய கந்தப் பெருமாளே. (க)

---

* சியும் - சீயும். † மாயாபிரத்தம் - மயக்கமதிகரித்தல்.

தனத்தனந் தனதன தனத்தனந் தனதன
தனத்தனந் தனதன தனதான.

562. வரித்தகுங் குமமணி முலைக்குரும் பையர்மன் மகிழ்ச்சிகொண் டிடவதி விதமான
வளைக்கரங் களினொடு வளைத்திதம் படவுடன் மயக்கவந் ததிலறி வழியாத
கருத்தழிந் திடவிரு கயற்கணும் புரள்தர களிப்புடன் களிதரு மடமாதர்
கருப்பெருங் கடலது கடக்கவுன் திருவடி களைத்தருந் திருவுளம் இனியாமோ
பொருப்பகம் பொடிபட அரக்கர்தம் பதியொடு புகைப்பரந் தெரியெழ விடும்வேலா
புகழ்ப்பெருங் கடவுளர் களித்திடும் படிபுவி பொறுத்தமந் தரகிரி * கடலூடே
திரித்தகொண் டலுமொரு மறுப்பெறுஞ் † சதுமுக திருட்டியெண் கணன்முதல் அடிபேணத்
திருக்குருந் தடியமர் குருத்வசங் கரரொடு திருப்பெருந் துறையுறை பெருமாளே. (உ)

---

தனத்தனந் தனதன தனதான
தனத்தனந் தனதன தனதான.

563. தவப்ரியங் கொளுமுனி வரர்வானோர் தழைக்கவந் தருள்புரி முருகோனே
உவப்புறுங் குறமகள் மணவாளா ‡ ஒருத்தலின் சுதைபுணர் திருமார்பா
அவத்தனென் றெனைவிட வழகாமோ அசட்டுமங் கையர்மயல் தவிராயோ
சிவப்பரம் பொருளுத வியபாலா திருப்பெருந் துறையுறை பெருமாளே. (ங)

---

* கடலூடே திரித்த கொண்டல்-விஷ்ணு, † சதுமுக திருட்டி யெண் கணன் - பிரமன், ‡ ஒருத்தல் இன் சுதை - தெய்வயானையம்மை.

பிரமனை ஓதாத வகையி லோரு சிறையிலே
இடுபவ னேதாத செவனு *மோரு நிறையிலே
பிரணவ மேதாத குருவ தாரு முறையிலே புகல்வோனே

பிணையுற மாமோடி குறவி ஈயு தினையிலே
துணைபெற நீ ரோடி அருவி பாயு சுனையிலே
பெருமையி லேகூடி மருவு தூய நினைவிலே வரவேணும்

தருமமு மேசில மலியு மாயர் மாபினே
ரொருமனு வா†ஏல மிலகு சேயர் கயமுனே
தயைபுரி கோபால தனத மாயர் மருகனே மயில்வீரா

தகுமென வேசீடி வளரு மாறு முககுகா
மிகுவடி யாராடி மகிமை கூறு மாகரா
தமிழுட னேகோடி வரைகடோறு முறைபவாபெருமாளே.

---

தானன தனன தான
தானன தனன தான
தானன தனன தான தனதான.

636. ஓயாத பிறவி யாய
மாயாத கடல தாய
ஓரோரு சனன மாய கருவூடே

ஓடோடி அலைவ தான
கேடாவல் பெறுவ தான
ஓராத முகுட ஞன எனையாள

சேயாகி மயுர மேற
நாயேனை னடுமை மாற
தேமாரு கருணை கூற வரவேணும்

தேவாதி அமரர் வாழ
மூவாதி முனிவர் சூழ
தீயாதி அசுரர் தாழ முனிவோனே

*ஓரும் - உணரும். †ஏல அம - உகந்த அழகு.

தாயான மதுரை மீன
ளாயாட னமுத பான
தாராடு சமர ஞான குமரேசா

தானான பிரமனான
வானான வடியு மான
தாதாவெ னொருவ னான பரனான

கோயாத வகுல ஞானி
வேயூதி முகில மேனி
கோபால சகல தானி மருகோனே

கோலாக லவம யூர
வேலாயு தவவ தார
கூ*ரூறு வரைய கார பெருமாளே. (உ)

---

காப்பு உள்பட ஆகச் செய்யுள் 642.

குமாரக் கடவுள் திருவடிகளே சரணம்.

**திருப்புகழ் முதற்பாகம்**




ஆறுவரையகாரம் - ஆறுபடை வீடு,